# அகத்தியர் தேவாரத்திரட்டு

(எளியவுரையுடன்)

பதிப்பாசிரியர் :

எம். இ. வீரபாகு பிள்ளை, பி. ஏ. எல். டி.

ஒற்றுமை நிலையம்,

தியாகராயநகர், சென்னை-17.

1955

[ விலை ரூ. 2.

க. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

# முகவுரை

அகத்தியர் தேவாரத்திரட்டு என்னும் இந்நூல் தேவாரப் பதிகங்களைத் திரட்டி சிவாலய முனிவருக்காக அகத்திய முனிவர் தயாரித்தது. தேவாரப்பதிகங்கள் மொத்தம் ஒரு லக்ஷத்திரண்டாயிரம். அவைகளுள் 797 திருப்பதிகங்கள்தாம் கிடைத்தன. அந்த 797 திருப்பதிகங்களைத் திருவாரூர் அபயகுல சோழ மகாராஜாவுடைய வேண்டுகோளின் பேரில் நம்பியாண்டார் நம்பி ஏழு திருமுறைகளாக வகுத்தருளினார். அவ்வேழும் அடங்கிய திருமுறைக்கு அடங்கன் முறை யென்று பெயர். கல்வி அறிவு ஒழுக்கங்களாற் சிறப்புற்று விளங்கிய சிவாலய முனிவர் அவ்வடங்கன் முறையின் பெருமையையும் அதனை நாடோறும் விதிப்படி சிரத்தையோடு பாராயணஞ் செய்யின் முத்தி கிடைக்கும் என்பதையும் அறிந்து தாம் பாராயணம் செய்ய ஆசைப்பட்டார். அது நிறைவேறாமையால் வருத்தமுற்றுச் சிதம்பரத்தை அடைந்து தமது கருத்து முற்றும் பொருட்டு ஸ்ரீநடராஜப் பெருமானை வணங்கித் தவம் செய்தார். அப்பொழுது "சிவாலய முனிவனே, நீ பொதிய மலையிலிருக்கிற அகத்திய முனிவனை அடையின் உன் கருத்து நிறைவேறும்" என்று ஓர் அசரீரி வாக்குத் தோன்றிற்று. அது கேட்ட சிவாலய முனிவர் மனமகிழ்ந்து நடராஜப் பெருமானை வணங்கி விடைபெற்றுக் கொண்டு சென்று பொதிய மலையை அடைந்து, அகத்தியரைச் சந்தித்து 3 வருடம் கடுந் தவம் செய்தார். அகத்திய முனிவர் அவருக்கு வெளிப்பட்டு அடங்கன் முறை முழுவதையும் அவருக்கு உபதேசித்து அதனின்றும் 25 திருப்பதிகங்களை எடுத்துத் திரட்டிக் கொடுத்து இவைகளை நாள்தோறும் பாராயணம் செய்யின் அடங்கன் முறை முழுவதையும் பாராயணம் செய்த பயன் கிடைக்கும் என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார்.

சிவாலய முனிவர் அப்படியே அவ்விருபத்தைந்து திருப்பதிகங்களையும் நெடுங்காலம் நாள்தோறும் பாராயணம் செய்து சிவபெருமானுடைய திருவருளைப் பெற்றார்.

ஆகவே, அகத்தியர் திரட்டிய தேவாரத்திரட்டு என்னும் நூலையும் அதன் சிறப்பையும் அறியாத சைவர் எவருமிலர். அகத்தியர் தேவாரத்திரட்டு என்னும் நூலுக்குப் பல பதிப்புக்கள் வெளிவந்துள்ளன வேனும் மக்கள் எளிதில் பெற்றுப் பொருள் உணர்ந்து படித்துப் பாராயணம் செய்யும் முறையில் எந்த உரையும் எழுதப்படவில்லை. அக்குறையை நீக்கவே ஒவ்வொரு பாட்டும் அனைவர்க்கும் பொருள் எளிதில் விளங்கத் தக்க முறையில் பதிகங்களிலுள்ள செய்யுளைச் சந்தி பிரித்தும் வாசகத்திற்கு குறியீடுகள் வைத்தும் எளிய உரையெழுதியும் அடியேன் வெளியிட்டுள்ளேன். இவ்வுரையைக் கொண்டு ஒவ்வொரு பதிகத்தின் செய்யுளின் பொருளையும் எளிதில் அறியலாம். சைவவுலகம் இவ்வெளியீட்டை ஆதரிப்பதற்குப் பின் வாங்காது என்ற நம்பிக்கையுடன் வெளியிட்டுள்ளேன்.

'அரியநாயகி விலாஸ்'
8, வியாசராவ் தெரு,
தியாகராயநகர்,
மதராஸ்-17.

எம். இ. வீரபாகு.

# அகத்தியர் தேவாரத்திர


| எண் | உள்ளுறை | | பக்கம் |
|---|---|---|---|
| – | திருப்பிரமபுரம் (குருவருள்) | ... | 2 |
| 2 | திருவதிகை வீரட்டானம் (குருவருள்) | ... | 8 |
| 3 | திருவெண்ணெய்நல்லூர் (குருவருள்) | ... | 14 |
| 4 | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் | ... | 20 |
| 5 | பஞ்சாக்கரத் திருப்பதிகம் | ... | 24 |
| 6 | நமச்சிவாயத் திருப்பதிகம் (அஞ்செழுத்துண்மை) | | 28 |
| 7 | நமச்சிவாயத் திருப்பதிகம் (அஞ்செழுத்துண்மை) | | 32 |
| 8 | திருப்பாண்டிக் கொடுமுடி நமச்சிவாயத் திருப்பதிகம் அஞ்செழுத்துண்மை | ... | 36 |
| 9 | திருப்பதிக்கோவை (கோயிற்றிறம்) | ... | 42 |
| 10 | திருப்பதிக்கோவை (கோயிற்றிறம்) | ... | 48 |
| 11 | ஊர்த்தொகை : கோயிற்றிறம் | ... | 56 |
| 12 | திருப்பிரமபுரம் திருவெழுகூற்றிருக்கை சிவனுருவம் | | 62 |
| 13 | திருக்கடவூர் மயானம் (சிவனுருவம்) | ... | 68 |
| 14 | கோயிற்றிருப்பதிகம் (சிவனுருவம்) | ... | 74 |
| 15 | திருப்பூவணம் (சிவனுருவம்) | ... | 80 |
| 16 | திருக்கடவூர் மயானம் (சிவனுருவம்) | ... | 88 |
| 17 | திருவாழ்கொளிபுத்தூர் (திருவடிகள்) | ... | 94 |
| 18 | திருவதிகை வீரட்டானம் (திருவடிகள்) | ... | 100 |
| 19 | திருப்புன்கூர் (திருவடிகள்) | ... | 106 |
| 20 | திருப்பூந்தராய் அருச்சனை | ... | 112 |
| 21 | திருக்கயிலாயம் (அருச்சனை) | ... | 120 |
| 22 | திருக்கழுக்குன்றம் (அருச்சனை) | ... | 128 |
| 23 | கோளறுத் திருப்பதிகம் (அடிமை) | ... | 132 |
| 24 | திருவாரூர் (அடிமை) | ... | 140 |
| 25 | திருத்தொண்டத் தொகை (அடிமை) | ... | 146 |

| பதிகம் எண் | பதிகம் பாடிய நாயனுர் | பதிகத்தின் பெயர் பொருள், ஊர், | திருமுறை எண் |
|---|---|---|---|
| 14 | திருநாவுக்கரசு சுவாமிகள் | கோயிற்றிருப்பதிகம் சிவனுருவம் | 4 |
| 15 | திருநாவுக்கரசு சுவாமிகள் | திருப்பூவணம் சிவனுருவம் | 6 |
| 16 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | திருக்கடவூர்மயானம் சிவன் உருவம் | 7 |
| 17 | திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் | திருவாழ்கொளிபுத்தூர் திருவடிகள் | 1 |
| 18 | திருநாவுக்கரசு சுவாமிகள் | திருவதிகைவீரட்டானம் திருவடிகள் | 6 |
| 19 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | திருப்புன்கூர் : திருவடிகள் | 7 |
| 20 | திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் | திருப்புத்தூர்: அருச்சனை. | 3 |
| 21 | திருநாவுக்கரசு சுவாமிகள் | திருக்கயிலாயம் ; அருச்சனை | 6 |
| 22 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | திருக்கழுக் குன்றம் ; அருச்சனை | 7 |
| 23 | திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் | கோளறுப் பதிகம் ; அடிமை | 2 |
| 24 | திருநாவுக்கரசு சுவாமிகள் | திருவாரூர் ; அடிமை | 4 |
| 25 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | திருத்தொண்டத் தொகை ; அடிமை | 7 |

x

| எண் | விஷயம் | பாடியவர் | பதிகமுதற்குறிப்பு | பாடிய ஸ்தலம் | செய்யுள் |
|---|---|---|---|---|---|
| 12 | திருவெழுகூற்றிருக்கை சிவனுருவம் | திருஞானசம்பந்தர் | ஓருருவாயினை | —— | 11 |
| 13 | சிவனுருவம்) | ஷை | வரியமறை | திருக்கடவூர் மயானம் | 11 |
| 14 | கோயிற்றிருவிருத்தம் (சிவனுருவம் | திருநாவுக்கரசர் | பாளையுடைக் | —— | 10 |
| 15 | ஷை | ஷை | வடிவேறு | —— | 11 |
| 16 | ஷை | சுந்தரர் | மருவார் | திருக்கடவூர் மயானம் | 10 |
| 17 | திருவடிகள் | திருஞானசம்பந்தர் | பொடியுடை | திருவாழ்கொளி புத்தூர் | 11 |
| 18 | ஷை | திருநாவுக்கரசர் | அரவணையான் | திருவதிகை வீரட்டானம் | 10 |
| 19 | ஷை | சுந்தரர் | அந்தணாளன் | திருப்புன்கூர் | 10 |
| 20 | அருச்சனை | திருஞானசம்பந்தர் | பந்துசேர் | திருப்பூந்தராய் | 11 |
| 21 | ஷை | திருநாவுக்கரசர் | வேற்றாகி | ஸ்ரீ கயிலாயம் | 11 |
| 22 | ஷை | சுந்தரர் | கொன்றுசெய்த | திருக்கழுக்குன்றம் | 10 |
| 23 | கோளறு திருப்பதிகம் அருளல் | திருஞானசம்பந்தர் | வேயுறுதோளி | —— | 11 |
| 24 | திருவாரூர்த் திருவிருத்தம் அருளல் | திருநாவுக்கரசர் | குலம்பலம்பா | திருவாரூர் | 10 |
| 25 | திருத்தொண்டத் தொகை அருளல் | சுந்தரர் | தில்லைவா | —— | 11 |
| | | | | | 25 |

# பதிக வரலாறுகளின் அட்டவணை

1. தோணியப்பர் ஞானசம்பந்தருக்கு சிவஞானப் பாலை ஊட்டியருள ஞானசம்பந்தரைச் சிவபாத விருதயர் "உமக்குப் பாலூட்டியவர் யார்" என்று கோபித்து அதட்டினார். திருஞான சம்பந்தர் தமக்குப் பாலூட்டி ஆட்கொண்டருளிய தோணியப்பரைத் தமது வலக்கைத் திருவிரலால் சுட்டிக் காட்டிப் பாடி அருளியது.

2. திருநாவுக்கரசு சுவாமிகள் தம்முடைய சூலைநோய் தீரும் பொருட்டுப் பாடியருளியது.

3. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமணக் காலத்தில் சிவ பெருமான் வழக்கிட்டுத் தடுத்தாட் கொண்டபோது பாடியது.

4. திருஞானசம்பந்த சுவாமிகள் திருவெண்ணீற்றினால் கூன்பாண்டியனுக்குற்ற சுரநோயைத் தீர்க்கும் பொருட்டு பாடியது.

5. திருஞானசம்பந்த சுவாமிகள் தமக்கு சீகாழியில் உபநயனம் நடந்த காலத்தே அந்தணர்களுக்கு அஞ்செழுத்தின் உண்மையினை விளக்கிப் பாடியது.

6. திருஞானசம்பந்த சுவாமிகள் திருநல்லூர்ப் பெருமணத்தில் திருமணக் காலத்தில் சிவசோதி தோன்றியபோது வீட்டு பேற்றினை அறிவுறுத்தவும் சிவசோதியில் கலப்போர் பாசம் நீங்கவும் பாடியது.

7. திருநாவுக்கரசு சுவாமிகள் தம்மைச் சமணர்கள் கற்றூணிற் கட்டிக் கடலில் வீழ்த்தியபோது பாடியது.

8. "உன்னை நான் மறக்கமாட்டேன். அப்படி மறந்தாலும் என்னுடைய நா உன் நாமத்தைச் சொல்லிக்கொண்டிருக்கும்" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியது.

9. சிவபெருமான் எழுந்தருளிய சிவத் தலங்களின் பெயர்களைக் கோவையாக அமைத்து திருஞானசம்பந்த சுவாமிகள் வாழ்த்திப் பாடியது.

10. திருநாவுக்கரசு சுவாமிகள் சிவத்தலங்களின் பெயர்களைக் கோவையாக அமைத்து வாழ்த்திப் பாடியது.

11. சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவத்தலங்களின் பெயர்களைக் கோவையாக அமைத்து வாழ்த்திப் பாடியது.

12. திருஞானசம்பந்த சுவாமிகள் பாடியது. தம் தந்தையார் சிவபாத விருதயர் தமது [illegible] காலத்து [illegible] பிள்ளையார் [illegible] தக்க [illegible] இருந்தவையும், [illegible] நாளும் பெருமை [illegible] அக்கருத்து அவர்க்கு முற்றுப் பெறுதல்

அரிதாதலையும் அறிந்த பிள்ளையார், இத்திருவெழுகூற்றிருக்கை யைப் பாடி தமது தந்தைக்கு இதனை ஓதின் எல்லாப் பதிகங்களை யும் ஓதிய பேறு உண்டாம் என்று சொன்னார்.

13. திருஞானசம்பந்த சுவாமிகள் குங்குலியக்கலய நாயனார் முதலிய அடியார்களோடு திருமெய்ஞ்ஞானத் திருக்கோயிலுக்குச் சென்று இறைவனைத் தரிசித்தபோது பாடியது.

14. சிதம்பரத்தில் எழுந்தருளிய நடராஜப் பெருமானைத் தரிசித்தபோது திருநாவுக்கரசு சுவாமிகள் பாடியது.

15. இறைவனின் திருக்காட்சிப் பலவற்றையும் பலபடப் போற்றித் திருநாவுக்கரசு சுவாமிகள் பாடியது.

16. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கடவூர் மயானத்தை அடைந்து வழிபட்டுப் பணிந்து பாடியது.

17. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் இத்தலத் துக்கு எழுந்தருளியபோது இறைவனைத் தரிசித்துப் பாடியது.

18. திருநாவுக்கரசு சுவாமிகள் இறைவன் திருவடிகளின் தன்மைகளைப் பற்றித் துதித்துப் பாடியது.

19. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்புன்கூருக்குப் போய் இறைவனைத் தரிசித்தபோது பாடியது.

20. சீகாழியின் (பூந்தராய்) பெருமை முழுவதையுமெடுத்துப் புகழ்ந்து பாடியது.

21. திருநாவுக்கரசு சுவாமிகள் கயிலாய தரிசனம் செய்யச் சிரமத்தோடு செல்லுங்கால் இறைவன் முனிவர் வடிவங்கொண்டு வந்து திருநாவுக்கரசு உறுதியினை அறிந்து பின் மறைந்த போது நலம் பெற்று எழுந்து இறைவனைப் பாடியது.

22. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கழுக் குன்றத்து ஆலயத்தை அடைந்து வழிபட்டுப் பாடியது.

23. திருஞான சம்பந்த சுவாமிகள் சமணர்களை வெல்ல மதுரைக்குச் சென்றார். அப்பொழுது திருநாவுக்கரசர் "சமணர் மிகக்கொடியர்; இப்போது கோள் நிலையும் நன்றாயிராது" என்று தடுத்தார். அதற்குத் திருஞான சம்பந்தர் சிவனடியார்களுக்கு நாளும் கோளும் எந்நாளும் நல்லவை என்று கூறிப் பாடியது.

24. திருநாவுக்கரசர் திருவாரூருக்குப் போயிருந்தபோது அங்குள்ள திருத்தொண்டர்களைத் தொழுது தொண்டர்க்குத் தொண்டராகும் புண்ணியம் பெற்றேன் என்று மகிழ்ந்து பாடியது.

25. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூரில் திருத் தொண்டர்களைப் பற்றி பாடியது.

# அகத்தியர் தேவாரத்திரட்டு

(பொழிப்புரையுடன்)

முதல் ஏழு திரு முறைகளிலிருந்து
திரட்டப் பெற்றது.

சிவமயம்

# அகத்தியர் தேவாரத்திரட்டு
(பொழிப்புரையுடன்)

## 1. திருஞானசம்பந்த சுவாமிகள்

### திருப்பிரமபுரம்

### முதல் திரு முறை — குருவருள்.

திருச்சிற்றம்பலம்.

தோடுடைய செவியன்; விடையேறிஓர் தூவெண்மதி
[சூடிக்
காடுடைய சுடலைப் பொடிபூசி என் உள்ளம் கவர்கள்வன்;
ஏடுஉடைய மலரான் முனைநாள் பணிந்துஏத்த அருள்
[செய்த
பீடுடைய பிரமாபுர மேவியபெம்மான் இவன் அன்றே. 1

முற்றல் ஆமை இளநாகம் ஒடு ஏனம் முளைக்கொம்பு
[அவை பூண்டு
வற்றல் ஓடுகலனு பலிதேர்ந்து எனதுஉள்ளம் கவர்கள்வன்;
கற்றல் கேட்டல் உடையார் பெரியார் கழல் கையால்
[தொழுது ஏத்த
பெற்றம் ஊர்ந்த பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன்
[அன்றே. 2

நீர் பரந்த நிமிர் புன்சடை மேலோர் நிலா வெண்மதி சூடி
ஏர் பரந்த இனம் வெள்வளை சோர என் உள்ளம் கவர்
[கள்வன் ;
ஊர்பரந்த உலகின் முதலாகிய ஓர் ஊர் இது என்னப்
பேர் பரந்த பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன்
[அன்றே. 3

விண் மகிழ்ந்தமதில் எய்ததும் அன்றி விளங்குதலை ஓட்டில்
உள் மகிழ்ந்து பலிதேரிய வந்து எனது உள்ளங் கவர்
[கள்வன் ;
மண் மகிழ்ந்த அரவம் மலர் கொன்றை மலிந்த வரை
[மார்பில்
பெண் மகிழ்ந்த பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன்
[அன்றே. 4

# 1. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

## திருப்பிரமபுரம்

## (சீர்காழி)

### குருவருள்

திருச்செவிகளிலே தோட்டினையணிந்தவன்; ரிஷப வாகனத்தில் ஏறி ஒப்பற்ற தூய்மை பொருந்திய வெள்ளிய சந்திரனைத் தலையில் அணிந்து சுடுகாட்டில் உள்ள விபூதியைப் பூசி என் மனத்தைக் கவர்ந்த கள்வன்; இதழ்கள் பொருந்திய தாமரை மலரில் எழுந்தருளிய பிரமன் முற்காலத்தில் பணிந்து வழிபட அருள் செய்தவன்; பெருமை பொருந்திய சீகாழி என்னும் திருப்பிரமபுரத்திலே எழுந்தருளிய பெருமானாகிய இவன்தான். 1

முதிர்ந்த ஆமையோடு; இளமைதங்கிய பாம்பு என்னும் இவைகளோடு பன்றியின் கூரிய கொம்பு ஆகியவைகளை அணிகலனாக அணிந்து, சதை கழிந்த பிரமனது தலையோட்டினைப் பிச்சைப் பாத்திரமாகக்கொண்டு பிச்சையேற்று எனது உள்ளத்தைக் கவர்ந்த கள்வன்; மெய்ஞ்ஞான நூல்களைக் கற்றலும் கேட்டலும் உடையராகிய பெரியோர்கள் திருவடிகளைத் தமது கைகளால் வணங்கிப்போற்ற ரிஷபத்தை வாகனமாகக் கொண்டருளிய சீகாழி என்னும் திருப்பிரமபுரத்தில் எழுந்தருளிய பெருமானாகிய இவன்தான். 2

கங்கை நீர் பரந்த நீண்ட புல்லிய சடையின்மேல் ஒப்பற்ற ஒளியையுடைய சந்திரனையணிந்து அழகு மிக்க கூட்டமாகிய வெள்ளிய வளையல்கள் கழன்று விழுமாறு என் மனத்தைத் தன் வழிப்படுத்திக் கொண்டவன்; ஊர்கள் மிகுந்து பரவிய இவ்வுலகில் முதன்மை பெற்ற ஒப்பற்ற ஊர் இஃது என்று சொல்லுமாறு புகழ் மிகுந்த சீகாழி என்னும் திருப்பிரமபுரத்தில் எழுந்தருளிய பெருமானாகிய இவன்தான். 3

ஆகாயத்தில் திரிந்து மகிழ்ந்த மும்மதில்களையும் எய்து அழித்ததே யல்லாமல், விளங்குகின்ற பிரமனது தலையோட்டில் மனமகிழ்ந்து பலியேற்குமாறு எழுந்தருளி என் மனத்தைத்தன் வழிப்படுத்திக்கொண்டவன்; மண்புற்றுக்குள் வசித்தலைவிரும்பிய பாம்பு கொன்றைமலர் ஆகியவை நிறைந்து விளங்கும் மலை போன்றமார்பில் உமாதேவியாரை வைத்து மகிழ்ந்த சீகாழி என்னும் திருப்பிரமபுரத்தில் எழுந்தருளிய பெருமானாகிய இவன்தான். 4

ஒருமை பெண்மையுடையன்; சடையன்; விடையூரும் [இவன் என்ன
அருமையாக உரைசெய்ய அமர்ந்து எனது உள்ளம் கவர் [கள்வன்;
கருமை பெற்ற கடல் கொள்ள மிதந்தது ஓர் காலம் இது [என்னப்
பெருமை பெற்ற பிரமாபுரம் மேவிய பெம்மான் [இவன் அன்றே. 5

மறை கலந்தஒலி பாடலோடு ஆடலர் ஆகி மழு ஏந்தி
இறைகலந்த இனவெள்வளை சோர என் உள்ளங்கவர் [கள்வன்,
கறைகலந்த கடிஆர் பொழில் நீடு உயர்சோலை கதிர்சிந்தப்
பிறைகலந்த பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன் [அன்றே. 6

சடை முயங்கு புனலன் அனலன் எரிவீசிச் சதிர்வு எய்த
உடை முயங்கும் அரவோடு உழிதந்து எனது உள்ளம்கவர் [கள்வன்;
கடல் முயங்கு கழிசூழ் குளிர்கானல் அம்பொன்னம் சிற [கன்னம்
பெடைமுயங்கு பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன் [அன்றே. 7

வியர் இலங்கு வரை உந்திய தோள்களை வீரம் விளைவித்த
உயர் இலங்கை அரையன்வலி செற்று எனது உள்ளம் [கவர்கள்வன்;
துயர்இலங்கும் உலகில் பல ஊழிகள் தோன்றும்பொழு [தெல்லாம்
பெயர் இலங்கு பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன் அன்றே. 8

ஒரு பாகத்தில் பெண்தன்மை அமையப் பெற்றவன்; சடைக் கற்றையை உடையவன்; ரிஷப வாகனத்தில் ஏறியருளுகின்றவன் என்று சிறப்பாக எடுத்துச் சொல்ல, விரும்பி என்னுடைய உள்ளத்தைத் தன் வழிப்படுத்திக் கொண்டவன்; கருமை நிறம் பொருந்திய கடல் கவர இச்சீகாழி ஒரு காலத்திலே தோணியாகி மிதந்தது என்று சொல்லுமாறு சிறப்புப்பெற்ற சீகாழி என்னும் திருப்பிரமபுரத்தில் எழுந்தருளிய பெருமானாகிய இவன்தான். 5

வேதத்தின் சுரங்களோடு பொருந்திய சாம வேதகானத் தோடு திருக்கூத்தையுடையவராய், மழுவினைத் தாங்கிக் கையிடத்திலே பொருந்திய கூட்டமாகிய வெள்ளிய வளையல்கள் சோர்ந்து விழுமாறு என் உள்ளத்தைத் தன் வழிப்படுத்திக் கொண்டவன்; இருள் அமைந்ததும் மணம் பொருந்தியதும் ஆகிய பொழிலிடத்தும் நீண்டு உயர்ந்த சோலைகளிடத்தும் தனது ஒளிக்கதிர்கள் சிந்துமாறு சந்திரன் பொருந்தித் தவழ்கின்ற சீகாழி என்னும் திருப்பிரமபுரத்தில் எழுந்தருளிய பெருமானாகிய இவன்தான். 6

சடையில் தாங்கிய கங்கையை உடையவன் ஆகியும், கையில் ஏந்திய மழுவையுடையவன் ஆகியும், சினத்தீயைச் சிந்தி அழகுடன் ஆடையின் மேற் பொருந்திய பாம்புக்கச்சையோடு திரிந்து வந்து எனது உள்ளத்தைத் தன் வழிப்படுத்திக்கொண்டவன்; கடலோடு சேருகின்ற உப்பங்கழி சூழ்ந்த குளிர்ச்சியையுடைய சோலையிடத்தில் அழகியபொன்னிறம் வாய்ந்த சிறகினையுடைய அன்னச் சேவல்கள் அன்னப்பெடைகளைச் சேருகின்ற சீகாழி என்னும் திருப்பிரமபுரத்தில் எழுந்தருளிய பெருமானாகிய இவன்தான். 7

திருக்கைலைமலையை அசைத்தெடுக்க வியர்வை மிகுந்த தோள்களுக்கு வீரத்தன்மையை உண்டாக்கின பெருமையையுடைய இராவணனது ஆற்றலை வென்று எனதுள்ளத்தைத் தன் வழிப்படுத்திக்கொண்டவன்; துன்பம் மிகுந்த உலகத்தில் பலகற்பங்கள் உண்டாகும் பொழுதெல்லாம் பெயராழியாது விளங்குகின்ற சீகாழி என்னும் திருப்பிரம புரத்தில் எழுந்தருளிய பெருமானாகிய இவன்தான். 8

தாள் நுதல் செய்து இறைகாணிய மாலொடு தண்
[தாமரை யானும்
நீணுதல் செய்து ஒழிய நிமிர்ந்தான் எனது உள்ளம் கவர்
[கள்வன் ;
வாள் நுதல் செய் மகளிர் முதலாகிய வையத்தவர் ஏத்தப்
பேணுதல் செய் பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன்
[அன்றே. 9

புத்தரோடு பொறியில் சமணும் புறம் கூற நெறி நில்லா
ஒத்த சொல்ல உலகம் பலிதேர்ந்து எனது உள்ளம் கவர்
[கள்வன்
மத்தம் யானை மறுக உரிபோர்த்தது ஓர் மாயம் இது
[என்னப்
பித்தர் போலும் பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன்
[அன்றே. 10

அரு நெறிய மறைவல்ல முனி அகன் பொய்கை அலர்
[மேய
பெருநெறிய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன் தன்னை
ஒரு நெறிய மனம் வைத்து உணர் ஞான சம்பந்தன் உரை
[செய்த
திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே.

திருச்சிற்றம்பலம்

திருமாலோடு, குளிர்ச்சி பொருந்திய தாமரை மலரில் எழுந்தருளிய பிரமனும் திருவடியையும் திருமுடியையும் முறையே வரைந்துகொண்டு இறைவனைக் காணுமாறு பேருரு வெடுத்து நெடுந்தொலை தேடியும் காணு தொழிய அக்கினியுருவாய் வெளிப்பட்டு நின்றவனாய் எனது உள்ளத்தைத் தன் வழிப்படுத்திக்கொண்டவன் ஒளி பொருந்திய நெற்றியை உடைய பெண்கள் முதலான உலகத்தவர்கள் போற்றி வணங்க; அவர்களைக் காப்பாற்றியருளுகின்ற சீகாழி என்னும் திருப்பிரமபுரத்தில் எழுந்தருளிய பெருமானாகிய இவன்தான். 9

புத்தர்களோடு அறிவில்லாத சமணர்கள் பழித்துரைக்கவும், நன்னெறியில் நில்லாத உலகத்தவர் தத்தமக்கு ஏற்றவாறு சொல்லவும், பிச்சையேற்று எனது உள்ளத்தைத் தன் வழிப்படுத்திக் கொண்டவன்; மதம் பொருந்திய யானையானது வருந்த அதன் தோலையுரித்துப் போர்த்துக் கொண்டதாகிய இஃதோர் மாயச் செயலாம் என்று கூறுமாறு பித்தரைப் போன்று சீகாழி என்னும் திருப்பிரமபுரத்தில் எழுந்தருளிய பெருமானாகிய இவன்தான். 10

அரிய நெறியை உடைய மறைகளில் வல்லவனாகிய பிரமனால் உண்டாக்கப்பட்ட விசாலமான தடாகத்தில், மலர்கள் நிறைந்த பேரழகையுடைய பெருமானாகிய இவனை, ஒரு வழிப்பட்ட மனம் வைத்துணர்ந்த திருஞானசம்பந்தன் பாடிய திருநெறியை உடைய தமிழ்ப் பாடல்களை ஓதவல்லவர்கள் தமது பழவினையைப் போக்குதல் மிக எளிதாகும். 11

## 2. திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருவதிகை வீரட்டானம்

நான்காந் திருமுறை — குருவருள்.

*திருச்சிற்றம்பலம்*

*கூற்று ஆயினவாறு விலக்ககிலீர்;*
*கொடுமை பல செய்தன நானறியேன்;*
*ஏற்றாய் அடிக்கே இரவும் பகலும்*
*பிரியாது வணங்குவன்; எப்பொழுதும்;*
*தோற்றாது என் வயிற்றின் அகம்படியே*
*குடரோடு துடக்கி முடக்கியிட*
*ஆற்றேன் அடியேன்; அதிகைக் கெடில*
*வீரட்டானத்து உறை அம்மானே!* 1

*நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்;*
*நினையாது ஒருபோதும் இருந்தறியேன்;*
*வஞ்சம் இது ஒப்பது கண்டறியேன்;*
*வயிற்றோடு துடக்கி முடக்கியிட*
*நஞ்சாகி வந்து என்னை நலிவதனை*
*நணுகாமற்றுரந்து கரந்தும் இடர்;*
*அஞ்சேலும் என்னீர்; அதிகைக் கெடில*
*வீரட்டானத் துறை யம்மானே!* 2

*பணிந்தாரன பாவங்கள் பாற்ற வல்லீர்;*
*படுவெண்தலையில் பலிகொண்டு உழல்வீர்;*
*துணிந்தே உமக்கு ஆள்செய்து வாழலுற்றால்*
*சுடுகின்றது சூலை தவிர்த்து அருளீர்;*
*பிணிந்தார் பொடி கொண்டு மெய் பூச வல்லீர்;*
*பெற்றம் ஏற்று உகந்தீர் சுற்றும் வெண்தலை கொண்டு*
*அணிந்தீர் அடிகேள்! அதிகைக் கெடில*
*வீரட்டானத்துறை அம்மானே!* 3

*முன்னம் அடியேன் அறியாமையினால்*
*முனிந்து என்னை நலிந்து முடக்கியிட*
*பின்னை அடியேன் உமக்கு ஆளும் பட்டேன்*
*சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்;*
*தன்னை அடைந்தார் வினை தீர்ப்பதன்றோ*
*தலையாயவர்தம் கடனாவது தான்*

## 2. திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருவதிகை வீரட்டானம்

கெடில நதிக்கரையில் உள்ள திருவதிகை வீரட்டானம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள எந்தையாகிய இறைவனே! சூலை நோயானது கூற்றுவனைப்போல் வந்து வருத்துகின்ற வகையை நீக்கியருளுகின்றீர் இல்லை. இதற்கு ஏதுவாக முன் செய்தனவாய பல கொடுமைகளை நான் அறியமாட்டேன். என்னை அடியனாக ஏற்றுக்கொண்ட உம்முடைய திருவடியையே இரவும் பகலும் எப்பொழுதும் இடைவிடாமல் தொழுகின்றேன். நோயானது வெளியே காணப் பெறாமல் எனது வயிற்றின் உள்ளிடத்தே குடலோடு கூடி முறுக்கா நிற்க அடியேன் அதனைப் பொறுக்கமுடியாதவனாக இருக்கிறேன். 1

கெடில நதிக்கரையில் உள்ள திருவதிகை வீரட்டானம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள எந்தையாகிய இறைவனே! எனது மனத்தைக் கடவுளாகிய உமக்கே உறைவிடமாக அமைத்தேன். ஒரு காலத்திலும் தேவரீரை நினையாமல் இருந்திருக்க மாட்டேன். ஆயினும் இதைப்போன்ற வஞ்சகத்தனம் உள்ள ஒரு நோயை நான் கண்டறிந்ததில்லை. குடலோடு கலந்து முறுக்கும்படி நஞ்சுபோல் தோன்றி வருத்தும் இந்நோயை என்னைச் சேராமல் நீக்கி ஒழியச் செய்தீரும் இல்லை. 'அஞ்சற்க' என்று கூறியருளினீரும் இல்லை. 2

கெடில நதிக்கரையில் உள்ள திருவதிகை வீரட்டானம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள எந்தையாகிய இறைவனே! வணங்கினவர்களுடைய தீவினைகளைப் போக்கும் ஆற்றலுடையீர்! வெண்மை பொருந்திய தலையோட்டில் பிச்சை யேற்றுத் திரிவீர்; இறந்தாரது சாம்பலைத் திருமேனியிற் பூசிக்கொள்ள வல்லவராகின்றீர்; ரிஷபத்தை விரும்பி வாகனமாகக் கொண்டீர். வெண்மை பொருந்திய தலையோடு மாலையைத் திருமேனி முழுவதும் அணிந்து கொண்டீர். இத்தகைய பெருமைகளை உடைய கடவுளே! தேவரீருக்கே துணிவுகொண்டு ஆட்பட்டு வாழத்தொடங்கினால் சூலை நோய் வருத்துகின்றது; இதனைப் போக்கி அருள்புரிவீராக. 3

அன்ன நடைப் பெண்கள் வாழ்கின்ற கெடில நதிக்கரையில் உள்ள திருவதிகை வீரட்டானம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள எந்தையாகிய இறைவனே! அடியேனது அறியாமை காரணமாகச் சூலை நோயானது அடியேனை வெறுத்து வருத்தி முறுக்குதலால், பிறகு ஏழையேன் உமக்கு அடியனாகவும் ஆயினேன். (ஆகையால்) வருத்துவதாகிய சூலைநோயைப்

அன்ன நடையார் அதிகைக் கெடில
வீரட்டானத்துறை அம்மானே ! 4

காத்து ஆள்பவர் காவல் இகழ்ந்தமையால்
கரை நின்றவர் கண்டு கொள் என்று சொல்லி
நீத்தாயகயம் புக நூக்கியிட
நிலைக்கொள்ளும் வழித்துறை ஒன்றறியேன் ;
வார்த்தை இது ஒப்பது கேட்டறியேன் ;
வயிற்றோடு துடக்கி முடக்கியிட
ஆர்த்தார் புனல்ஆர் அதிகைக் கெடில
வீரட்டானத்துறை அம்மானே ! 5

சலம் பூவொடு தூபம் மறந்து அறியேன் ;
தமிழோடு இசைபாடல் மறந்து அறியேன்
நலம் தீங்கிலும் உன்னை மறந்து அறியேன் ;
உன்னாமம் என்னாவில் மறந்து அறியேன் ;
உலந்தார் தலையின் பலிகொண்டு உழல்வாய் ;
உடல் உள்ளுறு சூலை தவிர்த்து அருளாய் ;
அலந்தேன் அடியேன் ; அதிகைக் கெடில
வீரட்டானத்துறை அம்மானே ! 6

உயர்ந்தேன் மனைவாழ்க்கையும் ஒண்பொருளும்
ஒருவர் தலை காவலிலாமையினால் ;
வயந்தேயும் உமக்கு ஆள் செய்து வாழலுற்றால்
வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர் ;
பயந்தே என் வயிற்றின் அகம்படியே
பறித்துப் புரட்டி அறுத்து ஈர்த்திட நான்
அயர்ந்தேன் அடியேன் ; அதிகைக் கெடில
வீரட்டானத்துறை யம்மானே !

போக்கியருள்வீராக. தம்மிடம் அடைக்கலம் புகுந்தவர்களது வினைகளை ஒழித்தருள்வதன்றோ பெரியவர்களது செய்கையாகும்.

ஆரவாரத்தோடு கூடிய மிகுந்த நீர் பொருந்திய கெடில நதிக்கரையில் உள்ள திருவதிகை வீரட்டானம் என்னும் திருக் கோயிலில் எழுந்தருளியுள்ள எந்தையாகிய இறைவனே! கரை யில் நின்றவர்களாய் வீழாமல் காத்து ஆள்கின்றவர்களது பாது காப்பை அவமதித்த காரணத்தால், நீயே அறிந்து கொள்வாய் என்று சொல்லி நிலைத்தலில்லாத குளத்தில் முழுகு மாறு தள்ளி விட நிலைபெறும் வழியாவது துறையாவது ஒன்றை அறிகின் றேன் இல்லை, இது போல்வதாகிய மொழியை வேறெங்கும் கேட் டறிந்தேன் இல்லை. வயிற்றின்விடத்துக் குடரோடு கலந்து முறுக்கி யிடப் பொறுதவனானேன். 5

கெடிலநதிக் கரையில் உள்ள திருவதிகை வீரட்டானம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள எந்தையாகிய இறைவனே! திருமுழுக்குச் செய்து திருப்பள்ளித்தாமம் சாத்துதலோடு தூபம் இடுவதையும் மறந்திருந்தேன் இல்லை. தமிழ்ப்பதிகத்தோடு இசைபாடுதலையும் மறந்திருந்தேன் இல்லை. தேவரீரது திருநாமத்தை அடியேனது நாவினால் போற்றுவதை மறந்தறியேன். இறந்தவர்களது தலையோட்டில் பிச்சையேற்றுத் திரிவோரே! என் உடம்பினுள்ளே பொருந்தி வருத்துகின்ற நோயை நீக்கியருளுகின்றீர் இல்லை. அதனால் அடியேன் துன்புற்று வருந்துகிறேன். 6

கெடில நதிக்கரையில் உள்ள திருவதிகை வீரட்டானம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள எந்தையாகிய இறைவனே! எனக்குச் சிறந்த காவலாக ஒருவரும் இல்லாத காரணத்தால் இல்வாழ்க்கையும் அதற்குரியபொருளும் என்னும் இவைகளால் உயர்ந்தவனாகக் கருதிச் செருக்கினேன். பின்னர் அறிந்து உமக்கு ஆட்பட்டு வாழத்தொடங்கியும் சூலை நோய் வருத்துகின்றது. அதனை நீக்கியருளுகின்றீர் இல்லை. அந்நோய் என் வயிற்றின் உள்ளிடத்தில் பற்றியிழுத்துப் புரளச்செய்து அறுத்து வலிக்க நான் அஞ்சி அயர்ந்துவிட்டேன். 7

வலித்தேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன்
வஞ்சம் மனம் ஒன்றும் இல்லாமையினால்
சலித்தால் ஒருவர் துணையாரு மில்லை ;
சங்க வெண் குழைக்கா துடை எம்பெருமான் ;
கலித்தே என்வயிற்றின் அகம்படியே
கலக்கி மலக்கிட்டுக் கவர்ந்துதின்ன
அலுத்தேன் அடியேன் ; அதிகைக் கெடில
வீரட்டானத் துறையம்மானே ! 8

பொன்போல மிளிர்வதோர் மேனியினீர் !
புரி புன்சடையீர் ! மெலியும் பிறையீர் !
துன்பே கவலை பிணி என்று இவற்றை
நணுகாமற் துரந்து கரந்தும் இடீர் ;
என்போலிகள் உம்மை இனித்தெளியார் ;
அடியார் படுவது இதுவே யாகில்
அன்பே அமையும் ; அதிகைக் கெடில
வீரட்டானத் துறை அம்மானே ! 9

போர்த்தாய் அங்கு ஓர்யானையின் ஈர் உரிதோல்
புறங்காடு அரங்காக நடமாடவல்லாய் !
ஆர்த்தான் அரக்கன் தனை மால்வரைக்கீழ்
அடர்த்து இட்டு அருள்செய்த அது கருதாய் ;
வேர்த்தும் புரண்டும் விழுந்தும் எழுந்தால்
என்வேதனை ஆன விலக்கியிடாய் ;
ஆர்த்து ஆர்புனல் சூழ் அதிகைக் கெடில
வீரட்டானத்துறை அம்மானே

திருச்சிற்றம்பலம்.

கெடில நதிக்கரையில் உள்ள திருவதிகை வீரட்டானம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள எந்தையாகிய இறைவனே! அடியேன் வஞ்சம்பொருந்திய மனம் ஒரு சிறிதும் இல்லாமையினால் இல்வாழ்க்கையில் மகிழ்வுற்று மனவுறுதி கொண்டேன். மனஞ்சலிப்படைந்தால் துணையாவார் ஒருவரும் இல்லை. வெண்ணிறம் பொருந்திய சங்கக் குழையை அணிந்த திருச்செவியை உடைய எமது தலைவரே! சூலைநோயானது எனது வயிற்றின் உள்ளே கலக்கி முறுக்கி என்னுயிரைக் கவர்ந்து உண்ணுதலால் நான் தாங்கமுடியாமல் அலுத்துப் போயினேன். 8

அதிகைக் கெடில வீரட்டானத்து உறை அம்மானே! பொன்னைப் போல விளங்குவதாகிய உவமை கூறுவதற்கரிய திருமேனியை யுடையவரே! நலிந்து தேய்ந்த பிறையை அணிந்தவரே, துன்பமும் கவலையும் நோயும் என்று எண்ணப்பட்ட இவற்றை என்பால் சேராமல் அகற்றிஒழித்திருயில்லை. தேவரீருடைய அடியவர்கள் படுந்துன்பம் இது என்றால் என்போன்றவராகிய அறிவிலிகள் இனிமேல் உம்மைத் தலைவராகக் கண்டு உறுதி கொள்ளார். (எனினும்) தேவரீரிடத்துச் செய்யும் அன்பொன்றுமே நான் செய்வதற்குரியதாய் அமையும் என்றவாறு. 9

ஆரவாரித்து மிக்க நீர் சூழ்ந்த அதிகைக் கெடில வீரட்டானத்து உறை அம்மானே! காசியில் ஒரு யானையினது வகிர்ந்து உரித்த தோலை போர்த்தருளியவரே, சுடுகாட்டை ஆடரங்காகக் கொண்டு நடமாடவல்லவரே! ஆரவாரித்து வந்தவனாகிய அரக்கனாகிய இராவணனைப் பெரிய கைலாய மலையின் கீழ் நெருக்கியிட்டுப் பின் அருளிரக்கத்தால் அருள் செய்த அதனை இப்போது நினைக்கின்றீரில்லை (அது பற்றித்தானோ) வியர்த்தும் புரண்டும் கீழ் விழுந்தும் பின் எழுந்தால் என் வேதனைகளை விலக்காதிருக்கின்றீர் என்றவாறு. 10

# 3. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## திருவெண்ணெய் நல்லூர்

### ஏழாந் திருமுறை — குருவருள்

திருச்சிற்றம்பலம்

பித்தா! பிறை சூடீ! பெருமானே! அருள் ஆளா!
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்து உன்னை
வைத்தாய்! பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
[ நல்லூர் அருட்டுறையுள்
அத்தா! உனக்காளாயினியல்லேன் எனலாமே? 1

நாயேன், பல நாளும் நினைப்பின்றி மனத்து உன்னைப்;
பேயாய்த் திரிந்து எய்த்தேன்; பெறல் ஆகா அருள்
[ பெற்றேன்;
வேய் ஆர் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
[ நல்லூர் அருட்டுறையுள்
ஆயா! உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனல் ஆமே? 2

மன்னே மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை;
பொன்னே மணிதானே வயிரம்மே பொருது உந்தி
மின் ஆர் பெண்ணைத் தென் பால் வெண்ணெ நல்லூர்
[ அருட்டுறையுள்
அன்னே! உனக்கு ஆளாய் இனி அல்லேன்
[ எனல்ஆமே? 3

முடியேன், இனிப்பிறவேன், பெறின் மூவேன்,
[ பெற்றம் ஊர்தீ!
கொடியேன் பல பொய்யே உரைப் பேனைக் குறிக்
[ கொள் நீ;
செடியார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
[ நல்லூர் அருட்டுறையுள்
அடிகேள்! உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனலாமே? 4

# 3. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## திருவெண்ணெய் நல்லூர்

பித்தரே, பிறையை அணிந்தவரே, தலைவரே, அருளை ஆளு கின்றவரே, எத்தகைய காரணத்தாலும் உம்மை மறவாமல் நினைக் கின்றவனாகிய எனது மனத்தினிடத்தில் உம்மை எழுந்தருளச் செய்தவரே, பெண்ணையாற்றின் தென் கரையிலுள்ள திருவெண் ணெய் நல்லூரில் திருவருட்டுறை யென்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள தந்தையே, தேவரீருக்கு அடிமைப்பட்டு அதன் மேலும் ஆள் அல்லேன் என்று கூறல் தகுமோ என்றவாறு. 1

நாய்த்தன்மையுடையேன் நெடுநாட்களாகத் தேவரீரை மனத்தில் நினைத்தலின்றிப் பேய் போலத் திரிந்து இளைத்தேன். (எனினும் உம்முடைய அருளிரக்கத்தால்) பெறுவதற்கரிய திரு வருளைப் பெற்றேன். மூங்கில்கள் நிறைந்த பெண்ணையாற்றின் தென்கரையிலுள்ள திருவெண்ணெய் நல்லூரில் திருவருட்டுறை யென்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள தாயானவனே! தேவரீருக்கு அடிமைப்பட்டு அதன் மேலும் ஆள் அல்லேன் என்று கூறல் தகுமோ? தகாது பெரிய குற்றமாம் என்றவாறு. 2

மிகுதியாக மறவாமல் தேவரீரை மனத்தில் தியானிக் கின்றேன். பொன்னையும் மணியையும் வயிரத்தையும் அலைத்து மோதிக் கரையிற் செலுத்திப் பிரகாசிக்கின்ற பெண்ணையாற் றின் தென்கரையிலுள்ள திருவெண்ணெய் நல்லூரில் திருவருட் டுறை யென்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள தாயே! தேவரீருக்கு அடிமைப்பட்டு அதன் மேலும் ஆள் அல்லேன் என்று கூறல் தகுமோ? தகாது பெரிய குற்றமாகும் என்றவாறு. 3

இடபத்தை ஊர்ந்தருள்பவரே! தேவரீர் திருவருள் பெற்ற பின் இறவேன், பிறவேன், பிறத்தலைச்செய்யினும் மூத்தலைச் செய்யேன், பல பொய்களையே உரைக்கின்றவனாகிய கொடியவனை தேவரீர் திருவுளம் பற்றிக்காக்கக்கடவீர்; செடிகள் நிறைந்த பெண்ணையாற்றின் தென்கரையிலுள்ள திருவெண்ணெய் நல்லூ ரில் திருவருட்டுறையென்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள கடவுளே! தேவரீருக்கு அடிமைப்பட்டு அதன் மேலும் ஆள் அல்லேன் என்று கூறில் தகுமோ? தகாது, குற்றமாகும் என்றவாறு. 4

பாதம் பணிவார்கள் பெறு பண்டம் அது பணியாய்;
ஆதன் பொருளானேன் அறிவில்லேன், அருளாளா!
தாது ஆர் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
[ நல்லூர் அருட்டுறையுள்
ஆதி! உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனல் ஆமே? 5

தண் ஆர் மதிசூடி! தழல் போலும் திருமேனி!
எண்ணார் புரம் மூன்றும் எரியுண்ண நகை செய்தாய்!
மண் ஆர் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
[ நல்லூர் அருட்டுறையுள்
அண்ணா! உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனல் ஆமே? 6

ஊன் ஆய் உயிர் ஆனாய்; உடல் ஆனாய்; உலகானாய்;
வானாய், நிலனானாய், கடல் ஆனாய், மலை _ _
தேன் ஆர் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர்
[ அருட்டுறையுள்
ஆனாய்! உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனல் ஆமே? 7

ஏற்றார் புரம்மூன்றும் எரி உண்ணச் சிலை தொட்டாய்!
தேற்றாதன சொல்லித் திரிவேனோ? செக்கர்வான் நீர்
ஏற்றாய்! பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர்
[ அருட்டுறையுள்
ஆற்றாய்! உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனல் ஆமே?

அருளை ஆளுபவரே! ஏழையேன் அறிவில்லாதவன் கைப்
பட்ட பொருள் போன்று பயனிலாதவனாயினேன். ஆதலால் உம்
முடைய திருவடியைத் தொழுகின்றவர்கள் பெறுகின்ற மெய்யறி
வினை அருள் செய்யக்கடவாய், பூந்துகள் நிறைந்த பெண்ணையாற்
றின் தென்கரையிலுள்ள திருவெண்ணெய் நல்லூரில் திருவருட்
டுறை யென்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள முதல்வரே!
தேவரீருக்கு அடிமைப் பட்டு அதன் மேலும் ஆள் அல்லேன்
என்று கூறில் தகுமோ? தகாது குற்றமாகும் என்றவாறு. 5

குளிர்ச்சி பொருந்திய சந்திரனை அணிந்தவரே, நெருப்புப்
போன்ற திருவுரு உடையவரே, பகைவரது மூன்று புரங்களையும்
தீயுண்ணுமாறு சிரித்தருளியவரே, பூமியிற் சிறப்புடைய
பெண்ணையாற்றின் தென்கரையிலுள்ள திருவெண்ணெய் நல்லூ
ரில் திருவருட்டுறையென்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள
அண்ணலே! தேவரீருக்கு அடிமைப்பட்டு அதன் மேலும் ஆள்
அல்லேன் என்று கூறில் தகுமோ? தகாது குற்றமாகும்
என்றவாறு. 6

ஊனாகி உயிருமாயினாய், உடம்பாயினாய், உலகமாயினாய்,
ஆகாயமாகி பூமியானாய், கடலானாய், மலைகளானாய், தேன் துளிக்
கின்ற பெண்ணையாற்றின் தென்கரையிலுள்ள திருவெண்ணெய்
நல்லூரில் திருவருட்டுறையென்னும் திருக்கோயிலில் எல்லாமாய்
எழுந்தருளியவனே! தேவரீருக்கு அடிமைப்பட்டு அதன்மேலும்
ஆள் அல்லேன் என்று கூறுதல் தகுமோ? தகாது பெரிய குற்ற
மாம் என்றவாறு. 7

போரேற்ற பகைவரது மூன்று புரங்களையும் தீ உண்ணும்
படி வில்லைத் தாங்கியவரே! தெளிவுற்ற சொற்களை பிதற்றி
அலையக்கடவேனோ செவ்வானத்தின் நிறத்தைப் பொருந்தியவரே!
பெண்ணையாற்றின் தென்கரையிலுள்ள திருவெண்ணெய் நல்லூ
ரில் திருவருட்டுறையென்னும் திருக்கோயிலில் எழுந்தருளிய
செந்நெறிச் செல்வரே! தேவரீருக்கு அடிமைப்பட்டு அதன்மேலும்
ஆள் அல்லேன் என்று கூறுதல் தகுமோ? தகாது பெரிய குற்ற
மாகும் என்றவாறு. 8

மழுவாள் வலன் ஏந்தி ! மறைஓதி ! மங்கை பங்கா !
தொழுவார் அவர் துயர் ஆயின தீர்த்தல் உன் தொழிலே,
செழுவார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர்
[அருட்டுறையுள்
அழகா ! உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனல் ஆமே. 9

கார் ஊர் புனல் எய்திகரை கல்லித்திரைக் கையால்
பார் ஊர் புகழ் எய்தி திகழ் பன்மாமணி உந்தி
சீர் ஊர் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர்
[அருட்டுறையுள்
ஆரூரன் எம்பெருமாற்கு ஆள் அல்லேன் எனலாமே. 10

திருச்சிற்றம்பலம்.

மழுவாகிய வாள் படையை வலக்கையில் ஏந்தியவரே! மறைகளை அருளிச்செய்தவரே! உமாதேவியாரை இடப்பக்கத் திருத்தியவரே, தொழுகின்றவரது துன்பங்களாயினவற்றை தீர்த்தருளுதல் தேவரீரின் செயலேயாம். செழுமையும் நீட்சியும் அமைந்த பெண்ணையாற்றின் தென்கரையிலுள்ள திருவெண்ணெய் நல்லூரில் திருவருட்டுறையென்னும் கோயிலில் எழுந்தருளியுள்ள அழகியவரே! தேவரீருக்கு அடிமைப்பட்டு அதன் மேலும் ஆள் அல்லேன் என்று கூறுதல் தகுமோ? தகாது பெரிய குற்றமாம் என்றவாறு. 9

கரு நிறம் பொருந்திய முகிலாற் பொழிந்த நீர் நிறைந்து அலைகளாகிய கரங்களால் கரையை அகழ்ந்து உலகிற்பரவிய புகழை அடைந்து விளங்குகின்ற பல சிறந்த இரத்தினங்களைக் கொழித்துச் சிறப்புப் பொருந்திய பெண்ணையாற்றின் தென் கரையிலுள்ள திருவெண்ணெய் நல்லூரில் திருவருட்டுறை யென்னும் கோயிலில் எழுந்தருளியுள்ள எமது தலைவருக்கு ஆரூரன் என்னும் அடியேன் அடிமையல்லேன் என்று கூறுதல் அடுக்குமோ என்றவாறு. 10

# 4. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

## திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம்

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவது நீறு, வானவர் மேலது நீறு,
சுந்தரமாவது நீறு, துதிக்கப்படுவது நீறு,
தந்திரமாவது நீறு, சமயத்திலுள்ளது நீறு,
செந்துவர்வாய் உமைபங்கன் திருவாலவாயான் திருநீறே. 1

வேதத்திலுள்ளது நீறு, வெந்துயர் தீர்ப்பது நீறு,
போதந்தருவது நீறு, புன்மை தவிர்ப்பது நீறு,
ஓதத்தகுவது நீறு, உண்மையிலுள்ளது நீறு,
சீதப்புனல் வயல் சூழ்ந்த திருவாலவாயான் திருநீறே. 2

முத்திதருவது நீறு, முனிவர் அணிவது நீறு,
சத்தியமாவது நீறு, தக்கோர் புகழ்வது நீறு,
பத்தி தருவது நீறு, பரவ இனியது நீறு,
சித்தி தருவது நீறு, திருவாலவாயான் திருநீறே. 3

காண இனியது நீறு, கவினைத்தருவது நீறு,
பேணி யணிபவர்க்கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு,
மாணம் தகைவதும் நீறு, மதியைத்தருவது நீறு,
சேணம் தருவது நீறு, திருவாலவாயான் திருநீறே. 4

பூச இனியதும் நீறு, புண்ணியமாவது நீறு,
பேச இனியது நீறு, பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு, அந்தமதாவது நீறு,
தேசம் புகழ்வது நீறு, திருவாலவாயான் திருநீறே. 5

## 4. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

### திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம்

மந்திரமாயிருப்பதும் நீறே, தேவர்கள் தங்கள் மேலணியப் பெற்றிருப்பதும் திருநீறே, அழகாவதும் திருநீறே, வணக்கம் செய்யப்படுவதும் திருநீறே, வீடு பேற்றிற்கு உபாயமாவதும் திருநீறே, சமயங்கள் தோறுமுள்ளதும் திருநீறே, இத்தகை தன்மை வாய்ந்தது சிவந்த பவளம் போன்ற திருவாயினையுடைய உமை அம்மையைப் பக்கத்துக் கொண்டவராகிய திருவாலவாயின் கண் எழுந்தருளியுள்ள இறைவனது திருநீறேயாம என்றவாறு. 1

வேதத்தில் பேசப் பெற்றுள்ளதும் திருநீறே, கொடிய துன் பங்களை ஒழிப்பதும் திருநீறே, மெய்யறிவைப் பயப்பதும் நீறு, இழிந்த தன்மையை நீக்குவதும் நீறு, படித்தறியத்தக்கதும் நீறு, உண்மை நூல்களில் பேசப் பட்டுள்ளதும் நீறு, இத்தகைய பெருமை வாய்ந்தது குளிர்ந்த நீர் நிறைந்த வயல்களால் சூழப் பட்ட திருவால வாயான் திருநீறே யாம் என்றவாறு. 2

வீடு பேற்றைக் கொடுப்பதும் திருநீறே, முனிவர்கள் தாங்கள் அணிந்து கொள்வதும் திருநீறே, உண்மையாவதும் திருநீறே, பெரியோர்கள் புகழ்ந்து பேசுவதும் திருநீறே, பத்தியைக் கொடுப் பதும் திருநீறே, துதிக்க இன்பம் பயப்பதாவதும் திருநீறே. வேண்டும் பொருள்களைத் தருவதும் திருநீறே. (இத்தகைய பெருமை வாய்ந்தது) திருவாலவாயின் கண் எழுந்தருளியுள்ள இறைவனது திருநீறேயாம் என்றவாறு. 3

பார்ப்பதற்கு இன்பம் பயப்பதாவதும் திருநீறே, அழகினைக் கொடுப்பதும் திருநீறே, விரும்பி தரித்துக் கொள்பவர்களுக் கெல்லாம் பெருமை தருவதும் திருநீறே, மாட்சிமைக் குணம தாவதும் திருநீறே. அறிவைத்தருவதும் திருநீறே, மேலுலக இன்பத்தைக் கொடுப்பதும் திருநீறே, (இத்தகைய பெருமை வாய்ந்தது) திருவாலவாயின் கண் எழுந்தருளியுள்ள இறைவனது திருநீறேயாம் என்றவாறு. 4

தரித்துக்கொள்ள இன்பமாவதும் திருநீறே, புண்ணிய வடி வினதாவதும் திருநீறே, எடுத்துக்கூறுதற்கு இனியதாயிருப்பதும் திருநீறே, பெரியதவசிகளுக்கெல்லாம் அவாவறுப்பதும் திருநீறே, எல்லாவற்றின் முடிவாயிருப்பதும் திருநீறே. (இத்தகைய பெருமை யுடையது யாது என்னின்) திருவாலவாயின் கண் எழுந்தருளி யுள்ள இறைவனது திருநீறேயாம் என்றவாறு. 5

அருத்தம் அதாவது நீறு, அவல மறுப்பது நீறு,
வருத்தம் தணிப்பது நீறு, வானம் அளிப்பது நீறு,
பொருத்தம் அதாவது நீறு, புண்ணியர் பூசும் வெண்ணீறு,
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருவாலவாயான் திருநீறே. 6

எயிலது அட்டது நீறு, இருமைக்கு முள்ளது நீறு,
பயிலப்படுவது நீறு, பாக்கியமாவது நீறு,
துயிலைத் தடுப்பது நீறு, சுத்தமாவது நீறு,
அயிலைப் பொலிதரு சூலத்து ஆலவாயான் திருநீறே.

இராவணன் மேலது நீறு, எண்ணத் தகுவது நீறு,
பராவணமாவது நீறு, பாவம் அறுப்பது நீறு,
தராவணமாவது நீறு, தத்துவமாவது நீறு,
அராவணங்கும் திருமேனி ஆலவாயான் திருநீறே. 8

மாலொடு அயன் அறியாத வண்ணமும் உள்ளதும் நீறு,
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு,
ஏல உடம்பு இடர்தீர்க்கும் இன்பம் தருவது நீறு,
ஆலம் அது உண்ட மிடற்று எய் ஆலவாயான் திருநீறே. 9

ஆற்றல் அடல் விடையேறும் ஆலவாயான் திருநீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம்பந்தன்
தேற்றித் தென்னன் உடலுற்ற தீப்பிணியாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர்தாமே. 10

திருச்சிற்றம்பலம்.

## 10-வது செய்யுள்

குண்டிகைக் கையர்களோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண் திகைப்பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்திசைப்பட்ட பொருளார் ஏத்தும் தகையது நீறு
அண்டத்தவர் பணிந்து ஏத்தும் ஆலவாயான் திருநீறே. 10

## 11-வது செய்யுள் பொழிப்புரை

வலிமையும் வெற்றியடையும் தன்மையும் உடைய ரிஷபத்தை வாகனமாகக் கொள்ளுகின்ற திருவாலவாய்ச் சிவபெருமானுடைய திருநீற்றினை புகலியென்னும் சீகாழியில் விளங்குகின்ற பிராமணனாகிய திருஞான சம்பந்தன் என்னும் நான் வணங்கி அது இத்தகைய பெருமை வாய்ந்ததெனை உலகறியச்செய்து பாண்டியனது உடம்பில் தோன்றிய கொடிய சுரநோய் முதலியன நீங்கும்படி சொல்லிய பத்துப்பாட்டுகளும் ஓதவல்லவர்கள் நல்லவர்களாவார்கள். 11

செல்வமாவதும் திருநீறே, துன்பம் துடைப்பதும் திருநீறே, வருத்தத்தினைக் குறைப்பதும் திருநீறே, வானுலகம் தருவதும் திருநீறே, புண்ணியப் பேற்றினர் பூசிக்கொள்வதும் திருவெண்ணீறு (இது யாதெனின்) இலக்குமி தங்குகின்ற மாளிகைகளால் சூழப்பட்ட திருவாலவாயின் கண் எழுந்தருளியுள்ள இறைவனது திருநீறேயாம் என்றவாறு. 6

புரங்களை நீறாக்கியதும் திருநீறே, இருமைப் பேற்றிற்கும் துணையாக அமைந்துள்ளதும் திருநீறே, பழகப்படுவதும் திருநீறே. செல்வமாயிருப்பதும் திருநீறே. இறப்பினை நீக்குவதும் திருநீறே, தூய்மையுடையதாயிருப்பதும் திருநீறே. (இதுயாதெனின்) கூர்மையால் விளங்குகின்ற சூலப்படையையுடைய திருவாலவாயின் கண் எழுந்தருளியுள்ள இறைவனது திருநீறேயாம் என்றவாறு. 7

இராவணன் உடம்பிற் பூசப்பட்டிருப்பதும் திருநீறே, நினைப்புடையதாக மதிக்கப்படுவதும் திருநீறே, பராசக்தியின் வண்ணமாயிருப்பதும் திருநீறே, பாவத்தை அறுத்தொழிப்பதும் திருநீறே, நிலமகளின் வண்ணமாயிருப்பதும் திருநீறே, தத்துவ வடிவாயிருப்பதும் திருநீறே. பாம்புகள் அணியப்பட்டுள்ள திருவுருவத்தையுடைய திருவாலவாயின் கண் எழுந்தருளியுள்ள இறைவனது திருநீறேயாம் என்றவாறு. 8

விட்டுணுவும் [illegible] நான்முகனும் அறியப்படாத தன்மையும் உள்ளதாவதும் திருநீறே, மேல் உலகத்துறைகின்ற தேவர்களது உடம்பின் மேலதாவதும் வெண்பொடியாகிய திருநீறே. பொருந்திய [illegible] வரும் துன்பத்தை ஒழிக்கின்ற பேரின்பமளிப்பதும் திருநீறே, (இது யாதெனின்) நஞ்சினை யமுதாக உண்ட திருக்கழுத்தினையுடைய, எமது திருவாலவாயின் கண் எழுந்தருளியுள்ள இறைவனது திருநீறேயாம் என்றவாறு. 9

நீர்க் குண்டிகையைத் தாங்கிய கைகளையுடைய சமணர்களோடு புத்தர்களைக் [illegible] திகைத்து [illegible] நீறு. [illegible] இனிமையுடையதாயிருப்பதும் நீறு. எட்டுத் திசைகளிலும் [illegible] திசைக்காவற் றலைமை யுள்ளவர்கள் [illegible] பெருமையுடையதும் நீறு. (இது யாதெனின்) அண்டத்திலுள்ளவர் வணங்கித் தொழும் ஆலவாயான் திருநீறேயாம் என்றவாறு. 10

## 5. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

### பஞ்சாக்கரத் திருப்பதிகம்

### அஞ்செழுத்துண்மை

திருச்சிற்றம்பலம்.

துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமின் நாள்தொறும்
வஞ்சகம் அற்று அடி வாழ்த்த வந்த கூற்று
அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே. 1

மந்திரம் நான்மறை ஆகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை ஆள்வன
செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ் செழுத்துமே. 2

ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்து
ஏனை வழிதிறந்து ஏத்துவார்க்கு இடர்
ஆன கெடுப்பன அஞ்செழுத்துமே. 3

நல்லவர் தீயரெனாது நச்சினர்
செல்லல் கெட சிவமுத்தி காட்டுவ
கொல்ல நமன் தமர் கொண்டு போமிடத்து
அல்லல் கெடுப்பன அஞ்செழுத்துமே.

கொங்கு அலர் வல்மதன்வாளி ஐந்து அகத்து
அங்குள பூதம் உம் அஞ்சு அம்பொழில்
தங்கு அரவின் படம் ஐஞ்சும் தம்முடை
அங்கையில் ஐவிரல் அஞ்செழுத்துமே.

தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்

## 5. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

### பஞ்சாக்கரத் திருப்பதிகம்

### அஞ்செழுத்துண்மை

ஸ்ரீ பஞ்சாக்கரமே கரவு ஒழிந்து திருவடியைப் போற்ற மேலடர்த்துவந்த காலனும் அஞ்சுமாறு உதைத்துக்காத்தன. (ஆதலால்) உறங்கும் காலத்திலும் அஃதில்லாத காலத்திலும் (அவற்றை) மனம் கசிந்து நாடோறும் நினையக்கடவீர் என்றவாறு. 1

மறைமொழிகளும் நான்கு வேதங்களும் ஆய்தேவர்களது மனத்தில் இருந்து அவர்களை ஆண்டருளும் தன்மையுடையன. செவ்விய வேள்வித் தீயைவளர்க்கின்ற செந்நெறிச் செல்வர்களாகிய மறையவர்க்கு மாலைக்காலத்திலே செபிக்கப்படும் மந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்கரமேயாம் என்றவாறு. 2

உடம்பில் சுவாசித்தலை அடக்கி மிக்க ஒளியையுடைய ஞான விளக்கை பிரகாசம்செய்து நன்மையாகிய இடத்தில் மற்றைய வழியாகிய சுழிமுனையைத் திறந்து வழிபடுவார்க்கு பிறவித்துன்பமானவற்றை நீக்கும் தன்மையுடையன ஸ்ரீ பஞ்சாக்கரமேயாம் என்றவாறு. 3

இவர் நல்லவர் இவர் தீயவர் என்று எண்ணுதல் இன்றி (யாவராயினும்) விரும்பினவர்களது பிறவித் துன்பம் கெடும்படி சிவத்தோடு ஏகனாக்கலக்கும் வீடு பேற்றை கொடுப்பனவும் இயம தூதுவர்கள் கொல்லும்பொருட்டு கொண்டு செல்லும் சமயத்தில் இறுகித் துன்பத்தை ஒழிப்பனவும் ஸ்ரீ பஞ்சாக்கரமே யாம் என்றவாறு. 4

இறைவனை ஒழித்தொழிந்த யாவரையும் வெல்லுதற்குரிய வன்மை வாய்ந்த காமவேளினது அந்த ஐவகைத் திணைக்கும் உரிய மணம் கமழ்கின்ற பூக்களாகிய அம்புகளும் ஐந்தாம். உடம்பினுள்ளே அமைந்த தன்மாத்திரைகளும் ஐந்தாம். இறைவனது திருமேனியில் வசிக்கின்ற பாம்பினது படம் பொருந்திய தலைகளும் ஐந்தாம். இறைவனது திருக்கரத்தினிடத்து திருவிரல்களும் ஐந்தாம். இறைவனது நாம மந்திரமாகிய திருவெழுத்துக்களும் ஐந்தேயாம் என்றவாறு. 5

தும்மல் இருமல்கள் வந்த காலத்திலும் கொடுமையாகிய நரகத் துன்பம் ஏற்பட்ட காலத்திலும் இப்பிறப்பில் வருவன

இம்மை வினை அடர்ந்து எய்தும் போழ்தினும்
அம்மையினும் துணை அஞ்செழுத்துமே.

வீடு பிறப்பை அறுத்து மெச்சினர்
பீடை கெடுப்பன பின்னை நாள்தொறும்
மாடு கொடுப்பன மன்னும் மாநடம்
ஆடி உகப்பன அஞ்செழுத்துமே. 7

வண்டு அமர் ஓதி மடந்தை பேணின
பண்டை இராவணன் பாடி உய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்கு
அண்டம் அளிப்பன அஞ்செழுத்துமே. 8

கார் வணன் நான்முகன் காணுதற்கு ஒணா
சீர்வணச் சேவடி செவ்வி நாடொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்
கார் வணம் ஆவன அஞ்செழுத்துமே. 9

புத்தர் சமண் கழுக்கையர் பொய்கொளாச்
சித்தத்தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணிவார் வினை பகைக்கு
அத்திரம் ஆவன அஞ்செழுத்துமே. 10

நல் தமிழ் ஞான சம்பந்தன் நான் மறை
கற்றவன் காழியர் மன்னன் உன்னிய
அற்றம் இல் மாலை ஈர் ஐந்தும் அஞ்செழுத்து
உற்றன வல்லவர் உம்பர் ஆவரே. 11

திருச்சிற்றம்பலம்.

வாகிய பிராரர்த்த கன்மங்கள் மேல் வந்து வருத்துங் காலத்திலும் மறுபிறப்பினும் துணையாயிருப்பன ஸ்ரீ பஞ்சாக்கரமேயாம் என்றவாறு. 6

புகழ்ந்தவர்களுடைய சாதல் பிறத்தல்களை ஒழித்து துன்பத்தை நீக்குவனவும், மேலும் தினந்தோறும் செல்வத்தைக் கொடுத்து உதவுவனவும், நிலைபெற்ற சிறந்த திரு நடனத்தைச் செய்து களிப்பனவும் (எவை யெனின்) ஸ்ரீ பஞ்சாக்கரமேயாம் என்றவாறு. 7

வண்டுகள் விரும்புகின்ற அளக பாரத்தையுடைய உமாதேவியார் விரும்பி வழிபட்டனவும், முற்காலத்து இராவணன் கானம்பாடி உய்தற்கு எதுவாயிருந்தனவும், அடியார்கள் உறுதிப் பொருளாகக் கொண்டு தோத்திரம் செய்த பின்னர் அவ்வடியார்களுக்கு முத்தி உலகத்தருவனவும் ஸ்ரீ பஞ்சாக்கரமேயாம் என்றவாறு. 8

முகில் நிறமுடைய திருமாலும், நான்கு முகங்களுடைய பிரமனும், காணலாற்றாத சிறப்புவாய்ந்த அழகிய திருவடியை, செம்மையறிந்து தினந்தோறும் பல பெயர்களால் எடுத்தோதி பிதற்றுநிற்கும் அடியவர்க்கு இன்பம் பயக்கும் தன்மையுடையன ஆவன ஸ்ரீ பஞ்சாக்கரமேயாம் என்றவாறு. 9

புத்தர்களும் சமணராகிய கழுவினைப் பற்றிய கையினையுடையவர்களும் (ஆகிய இவர்களின்) பொய்யுரைகளைக் கொள்ளாத உள்ளத்தை யுடையவர்களாகிய சிவனடியார்கள் பரம்பொருளாக ஐயந்திரிபறத் தீர்மானித்து நிச்சயித்த தன்மை யுடையனவும், ஞானத் திருவுருவத்தை யுடைய திருநீற்றினைத் தரிப்பவர்களது வினைப் பகையைச் செகுத்தற்கு படையாயிருப்பனவும் ஸ்ரீ பஞ்சாக்கரமேயாம் என்றவாறு. 10

நன்மை பயக்கும் திருநெறித் தமிழ் வல்ல திருஞானசம்பந்தனும் நான்காகிய வேதங்களையும் ஓதாதுணர்ந்தவனும், சீகாழியில் உள்ளார்க்குத் தலைவனும் ஆகிய யான் கருதிச்சொன்ன முடிவில்லாத சொன்மாலையாக வாய்ந்த பத்துத் திருப்பாட்டுக்கள் திருவைந்தெழுத்துப் பொருந்தினவற்றை ஓத வல்லவர் தேவர் ஆவார்கள் என்றவாறு. 11

## 6. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

### நமச்சிவாயத் திருப்பதிகம்

### அஞ்செழுத்துண்மை

*திருச்சிற்றம்பலம்*

காதல் ஆகி கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேதநான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே. 1

நம்புவார் நமர் நாவின் நவிற்றினால்
வம்பு நாண் மலர் வார் மது ஒப்பது
செம்பொன் ஆர் திலகம் உலகுக்கெலா
நம்பன் நாமம் நமச்சிவாயவே. 2

நெக்குஉள் ஆர்வம் மிகப் பெருகி நினைந்து
அக்கு மாலைகொடு அங்கையில் எண்ணுவார்
தக்க வானவர் ஆய்த்தருவிப்பது
நக்கன் நாமம் நமச்சிவாயவே. 3

இயமன் தூதரும் அஞ்சுவர் இன்சொலால்
நயம் வந்து ஓதவல்லார் தமை நண்ணினால்
நியமந்தான் நினைவார்க்கு இனியான் நெற்றி
நயனன் நாமம் நமச்சிவாயவே. 4

கொல்வா ரேனுங் குணம் பல நன்மைகள்
இல்லாரேனும் இயம்புவராயிடின்
எல்லாத் தீங்கையும் நீங்குவர் என்பரான்
நல்லார் நாம நமச்சிவாயவே. 5

மந்தரம் அன்ன பாவங்கள் மேவிய
பந்தனை அவர்தாமும் பகர்வரேல்

# 6. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

## நமச்சிவாயத் திருப்பதிகம்

### அஞ்செழுத்துண்மை

அன்புடையராகி மனங்கரைந்து கண்களில் நீர் நிறையப் பெற்று படிக்கின்றவர்களை முத்திநெறியிற் செலுத்துவதும் நான்கு வேதங்களுள்ளும் உண்மைப் பொருளாயிருப்பதும் எது வெனின் இறைவனது திரு நாமமாகிய நமச்சிவாயவென்னும் திருமந்திரமாகிய நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்துமே யாம் என்றவாறு. 1

நம்மவர் நம்புவோராகி நாவினால் உச்சரித்தால் மணமுள்ள புதிய மலரினின்றும் ஒழுகுகிற தேன் போல்வது (யாதெனில்) எல்லா உலகங்களுக்கும் பசும் பொன்னையும் விளக்கும் திலகமாகவு மிருக்கிற இறைவனது திருநாம மந்திரமாகிய நமச்சிவாய என் னும் திருவைந்தெழுத்தே. 2

மனம் நெகிழ்ந்து அன்பு மிகப்பெருகி நினையா நின்று அழுகிய கையினிடத்து ருத்திராக்ஷ மாலையினால் எண்ணி உருப் போடுபவர்களை தகுதி வாய்ந்த பெருந்தேவர்களாய் பொருத்து விப்பது இறைவனது நாமமந்திரமாகிய நமச்சிவாய என்னும் திரு வைந்தெழுத்துமேயாம் என்றவாறு. 3

நியமமாக நினைப்பவர்கட்கு இனியவனும் நெற்றிக் கண்ணை யுடையவனுமான இறைவனது திருநாம மந்திரமாகிய நமச்சிவாய என்னும் திரு ஐந்தெழுத்தை இனிய சொற்களினால் விருப்ப முண்டாகி ஓத வல்லவரை நெருங்கினால், யம தூதர்களும் அஞ்சி ஒதுங்குவர் என்றவாறு. 4

கொல்லுவோராயினும் குணமும் பல நன்மைகளு மில்லாத வராயினும் எவர்க்கும் நல்லவராகிய இறைவரது நாம மந்திர மாகிய நமச்சிவாய என்னும் திரு ஐந்தெழுத்தினை சொல்வா ரெனின் எல்லாக் கெடுதிகளையும் விட்டொழிவார்கள் என்று சொல்லுவர் (அறிஞர்.) 5

பெருமையுள்ள சிவபெருமானது திருநாம மந்திரமாகிய நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்தினை மந்தரம் மலைபோன்ற

சிந்தும் வல்வினை செல்வமும் மல்கும்
மால் நந்தி நாமநமச்சிவாயவே. 6

நரகம் ஏழ்புக நாடினர் ஆயினும்
உரைசெய் வாயினர் ஆயின் உருத்திரர்
விரவியே புகுவித்திடும் என்பரால்
வரதன் நாமம் நமச்சிவாயவே. 7

இலங்கை மன்னன் எடுத்த அடுக்கல்மேல்
தலம் கொள் கால்விரல் சங்கரன் ஊன்றலும்
அலங்கிவாய் மொழி செய்தவன் உய்வகை
நலங்கொள் நாமம் நமச்சிவாயவே. 8

போதன் போதன கண்ணனும் அண்ணறன்
பாதந்தான் முடிநேடிய பண்பராய்
யாதுங் காண்பரிதாகி அலந்தவர்
ஓதும் நாமம் நமச்சிவாயவே. 9

கஞ்சி மண்டையர் கையின் உண்கையர்கள்
வெஞ்சொல் மிண்டர் விரவிலர் என்பரால்
விஞ்சை அண்டர்கள் வேண்ட அமுது செய்
நஞ்சுண் கண்டன் நமச்சிவாயவே. 10

நந்தி நாமம் நமச்சிவாய எனுஞ்
சந்தையால் தமிழ்ஞான சம்பந்தன் சொல்
சிந்தையான் மகிழ்ந்து ஏத்தவல்லார் எல்லாம்
பந்தபாசம் அறுக்க வல்லார்கள். 11

திருச்சிற்றம்பலம்.

பாவங்களைப் பொருந்திய பிறவிப் பந்தத்தையுடையவரும் உச்சரிப்பாராயின், அவரது வலிய வினைகள் சிதைந்தொழியும். முத்திச் செல்வமும் பெறுவர். 6

ஏழ்வகை நரகத்திலும் அழுந்த எண்ணப்பட்டவர் என்றாலும் அருள் செய்வதாகிய இறைவனது நாமமந்திரமாகிய நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்தை உச்சரிக்கிற வாயையுடையவரானால் அந்த உச்சரிப்பின் பயன் அவரை உருத்திரர்களோடு கலந்திருக்கும்படி அவர் சிவலோகத்தில் புகுமாறு செய்யும் என்று பெரியோர் கூறுவர் என்றவாறு. 7

இலங்கைக்கு அரசனாகிய இராவணன் பெயர்த்தெடுத்த திருக்கைலாயமலையின் மேல் சிவபெருமான் இடங்கொண்ட கால் விரலை ஊன்றின அளவில் மனம் கலங்கி வாய்விட்டழுதவன் செய்யும்படி நன்மை செய்தலைக் கொண்ட திருநாம மந்திரம் நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்தேயாம். 8

பிரமனும் தாமரைமலரை யொத்த கண்களையுடைய திருமாலும் சிவபெருமானது திருமுடியையும் திருவடியையும் தேடும் தன்மையை மேற்கொண்டவர்களாய் ஒரு சிறிதும் காணுதல் அருமையாகி எய்த்து வருந்தியவர் துதிய திருநாம மந்திரம் நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்தேயாம் என்றவாறு. 9

வித்தையையுடைய தேவர்கள் வேண்டிக்கொள்ள அமுது செய்த விடத்தையுண்ட திருமிடற்றையுடைய இறைவனது நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்தை, கஞ்சி மண்டையைக் கையிலேந்திய புத்தரும் கையிலேற்றுண்கின்ற கீழ்மக்களாகிய சமணர்களும் ஆகிய கருஞ்சொற்களையுடைய மிண்டரும் அடைய மாட்டார்கள் என்று பெரியோர் சொல்லுவர் என்றவாறு. 10

சிவபெருமானது நாம மந்திரமாகிய நமச்சிவாய என்று சொல்லப் பெறுகிற பாடும் முறைமையினால் முத்தமிழ் வல்லவனாகிய திருஞானசம்பந்தன் சொல்லை உள்ளங் களிகூர்ந்து துதிக்க வல்லவர்கள் எல்லாம் பந்தபாசங்களை அறுக்க வல்லவர்கள் ஆவார்கள். 11

## 7. திருநாவுக்கரசு சுவாமிகள்

### நமச்சிவாயத் திருப்பதிகம்

திருச்சிற்றம்பலம்.

சொல்துணை வேதியன் சோதி வானவன்
பொன்துணைத் திருந்தடி பொருந்தக் கைதொழ
கல்துணைப் பூட்டி ஓர் கடலிற் பாய்ச்சினும்
நல்துணை யாவது நமச்சிவாயவே. 1.

பூவினுக்கு அருங்கலம் பொங்குதாமரை
ஆவினுக்கு அருங்கலம் அரன் அஞ்சு ஆடுதல்
கோவினுக்கு அருங்கலம் கோட்டமில்லது
நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே. 2

விண் உற அடுக்கிய விறகில் வெல் அழல்
உண்ணிய புகில் அவை ஒன்றும் இல்லையாம்
பண்ணிய உலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணி நின்று அறுப்பது நமச்சிவாயவே. 3

இடுக்கண் பட்டு இருக்கினும் இரந்து யாரையும்
விடுக்கின் பிரான்என்று வினவுவோம் அல்லோம்
அடுக்கல் கீழ்கிடக்கினும் அருளின் நாம் உற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே. 4

வெந்தநீறு அருங்கலம் விரதிகட்கு எலாம்
அந்தணர்க்கு அருங்கலம் அருமறை ஆறங்கம்
திங்களுக்கு அருங்கலம் திகழும் நீள்முடி
நங்களுக்கு அருங்கலம் நமச்சிவாயவே. 5

சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கு அல்லால்
நலம் இலன் நாடொறும் நல்குவான் நலன்

## 7. திருநாவுக்கரசு சுவாமிகள்

### நமச்சிவாயத் திருப்பதிகம்

ஆன்மாக்களுக்கு உற்றதுணையென்று சொல்லப்படும் அந்தணனும் ஒளியையுடைய தேவனாகிய இறைவனது பொலிவினையுடைய திருத்தமாகிய இணையடிகளை பொருந்தும்படி கை தொழுதலால் கல்லோடு சேர்த்துக்கட்டி ஒப்பு அரிய கடலிற்புகச் செலுத்தினாலும் அவ்வாறுபாய்ச்சப்பட்டவர்க்கு உற்ற நல்துணையாவது நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்துமேயாம் என்றவாறு. 1

பூக்களுக்கு அருங்கலமாவது விளங்குகின்ற தாமரை மலரேயாம்; பசுக்களுக்கு அருங்கலமாவது சிவபெருமான் அஞ்சாகிய கௌவியங்களில் அபிடேகம் கொண்டருளுதலேயாம்; அரசனுக்கு அருங்கலமாவது கோணுதலில்லாததேயாம். நாவுக்கு அருங்கலமாவது சிவநாம மந்திரமாகிய திருவைந்தெழுத்தேயாம் என்றவாறு.

வானத்தைப் பொருந்த அடுக்கப்பட்ட விறகுப்போரில் கொடிய நெருப்பானது உண்டாகுமாறு புகுந்தால் அடுக்கிய அவ் விறகுகள் ஒரு சிறிதும் இல்லையாய்க் கெட்டொழியும். (அதுபோல) பண்டைத்த இந்த உலகத்தினில் பிறவிதோறும் செய்த மிகுந்த பாவத்தினை பொருந்தி நின்று இற்றொழியச் செய்வது நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்தேயாம் என்றவாறு. 3

துன்பப்பட்டுக் கொண்டிருந்தாலும் இத்துன்பத்தினின்றும் எம்மை விடுவிப்பாய் நீயே எமக்குப் பிரானேயாவீர் என்று சிவபிரானையல்லாது யாரையும் இரந்து கேட்போம் அல்லேம். மலையின் கீழ் அகப்பட்டுக்கிடத்தலாகிய பெருந்துன்பம் வரப் பெறினும் யாம் பொருந்திய நடுக்கத்தினை கருணையினால் கெட்டொழியச் செய்வது நமச்சிவாய என்னும் சிவ மூல மந்திரமேயாம் என்றவாறு. 4

தவசிகட்கு எல்லாம் பெருஞ்சிறப்புடைய அணிகலமாவது தீயின் கண் நீற்றப்பட்ட திருநீறேயாம். அந்தணர்களுக்கு அரிய அணிகலமாவது அரிய வேதங்களும் அவற்றின் ஆறங்கங்களுமே. சந்திரனுக்கு அரிய அணிகலமானது விளங்கும் இறைவனது நீண்ட திருமுடியேயாம். எங்களுக்கு அரிய அணிகலமாவது நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்துமேயாம். என்றவாறு. 5

(இறைவன்) யாரிடத்திலும் கோபமில்லாதவன் சங்கரன்; அடைந்தவர்க்கன்றி நன்மை செய்தலிலன்; தினந்தோறும் நன்மை

குலம் இலர் ஆகினும் குலத்துக்கு ஏற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே. 6

வீடினார் உலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினார் அந்நெறி கூடச் சென்றலும்
ஓடினேன் ஓடிச் சென்று உருவம் காண்டலும்
நாடினேன் நாடிற்று நமச்சிவாயவே. 7

இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதியுள்ளது
பல்லக விளக்கது பலருங்காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே. 8

முன்னெறியாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறியே சரணாதல் திண்ணமே
அந்நெறியே சென்று அங்கு அடைந்தவர்க்கெலா
நன்னெறியாவது நமச்சிவாயவே. 9

மாப்பிணை தழுவிய மாது ஓர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சிவாயப்பத்து,
ஏத்தவல்லார் தமக்கு இடுக்கண் இல்லையே. 10

திருச்சிற்றம்பலம்.

யைச் செய்வான். குலநலம் இல்லாதவர் என்றாலும் நற்குலத்திற்
குப் பொருந்துவதாகிய நன்மையை நமச்சிவாய என்னும் திருவைந்
தெழுத்து மிகுதியாகக் கொடுப்பதாம் என்றவாறு. 6

இந்நிலவுலகத்தில் அநேகர் இறந்தார்கள். மேலான அடியார்
கள் அந்த முத்திநெறியை அடைந்தார்கள். அந்நெறியைக் கூடு
மாறு செல்லலும் ஓடினேன். விரைந்து சென்று திருவுருவைக்
கண்டபோது அதனது உண்மை யிலக்கணத்தைக் கேட்டறிந்தேன்.
நாடிய யான் நாடினது நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்து
மேயாம் என்றவாறு. 7

வீட்டிலுள் விளக்காவது இருட்டை ஒழிப்பது. சொல்லப்
பெற்ற உயர்விளக்காவது சிவஞானப் பிரகாசத்தையுடையது.
பலவிடத்து விளக்கெனப்படுவது எல்லோரும் காணப்பெறுவது.
நல்ல மணிவிளக்காய் அமைவது நமச்சிவாய என்னும் திருவைந்
தெழுத்துமேயாம் என்றவாறு. 8

எல்லா மெய்ப்பொருள்களுக்கும் முற்பட்ட நெறியாகிய முழுமுதற்றலை
வனாகிய மூன்று கண்ணையுடைய இறைவனது நெறியையே
யாங்கள் புகலாகச் சென்று சேர்தல் உறுதியேயாம். அம்முன்னெறி
யைச்சென்று சேர்ந்து அதில் சிவஞான சித்தி அடைந்த சீவன்
முத்தர்க்கெல்லாம் நல்லவழியா யிருப்பது நமச்சிவாய என்னும்
திருவைந்தெழுத்தேயாம் என்றவாறு. 9

பெருமை வாய்ந்த பெண்மான் போலும் உமாதேவியாரை
ஓர் பாகத்து உடையவனது பூமாலைகள் பொருந்திய திருந்திய
திருவடியினை பொருத்தமாக கைகூப்பித் தொழும்பொருட்டு
நாவான் இயன்ற சொன்மாலையாகிய நமச்சிவாயத் திருப்பதிகத்
தினைப் பாடிப்போற்ற வல்லவர்களுக்கு எந்தத் துன்பமும்
உண்டாகாது. 10

## 8. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### திருப்பாண்டிக்கொடுமுடி

ஏழாந் திருமுறை

### அஞ்செழுத்துண்மை

*திருச்சிற்றம்பலம்*

*மற்றுப்பற்று எனக்கின்றி நின் திருப்பாதமே மனம்*
*[பாவித்தேன்;*
*பெற்றலும் பிறந்தேன்; இனிப்பிறவாத தன்மை வந்தெய்*
*[தினேன்;*
*கற்றவர் தொழுதேத்தும் சீர்க்கறையூரில் பாண்டிக்*
*[கொடுமுடி*
*நற்றவா! உனை நான் மறக்கினும், சொல்லு நா*
*[நமச்சிவாயவே.* 1

*இட்டன்றும் அடி ஏத்துவார் இகழ்ந்திட்ட நாள் மறந்*
*[திட்டநாள்*
*கெட்டநாள், இவை என்றலால் கருதேன்; கிளர்புனல்*
*[காவிரி*
*வட்ட வாசிகை கொண்டு, அடி தொழுது ஏத்து பாண்டிக்*
*[கொடு முடி*
*நட்டவா! உனை நான் மறக்கினும், சொல்லு நா*
*[நமச்சிவாயவே.* 2

*ஓவும் நாள் உணர்வு அழியும் நாள், உயிர்போகும் நாள்,*
*[உயர்பாடை மேல்*
*காவும் நாள் இவை என்று அலால் கருதேன்; கிளர்புனல்*
*[காவிரிப்*
*பாவுதண் புனல் வந்து இழிபரஞ்சோதி பாண்டிக் கொடு*
*[முடி*
*நாவலா! உனை நான் மறக்கினும் சொல்லு நா*
*நமச்சிவாயவே.* 3

# 8. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## திருப்பாண்டிக்கொடுமுடி

## ஏழாந் திருமுறை

## அஞ்செழுத்துண்மை

எனக்கு வேறு ஆதரவில்லாமல் உனது திருவடியையே மனத்தில் நினைத்தேன்; நினைக்கப் பெறுதலும் பிறந்த தன்மை யுடையவனாயினேன்; மேல் பிறக்கப்பெறாத தன்மையையும் அடைந்தேன்; கற்றவர் தொழுது வணங்கி வாழ்த்துகின்ற சிறப்பு வாய்ந்த கறையூரின் கண் திருப்பாண்டிக் கொடுமுடியில் எழுந்தருளியிருக்கின்ற நல்ல தவ வடிவினையுடையவனே! உன்னை அடியேன் மறக்கப்பெறினும் எனது நா 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தைச் சொல்லிக்கொண்டிருக்கும். 1

பரமாய்த்தருகிய உமது திருவடியைத் துதிப்பவர் இகழ்ந்திட்ட நாளும் மறந்திட்ட நாளும் ஆகிய இந்த நாட்கள் கெட்ட நாள்களென்று நினைப்பதன்றி நல்ல நாட்களாக நினைக்க மாட்டேன்; பெருகுகின்ற நீரையுடைய காவிரியானது வட்டமான பூமாலைகளால் திருவடியைத் தொழுது துதிக்கின்ற திருப்பாண்டிக் கொடுமுடியில் ஆன்மாக்களைக் கருணையினால் நட்புக் கொண்டவனே! உன்னை நான் மறக்கப்பெறினும் எனது நாவானது நமச்சிவாய என்னும் திரு ஐந்தெழுத்தை இடைவிடாது சொல்லா நிற்கும் என்றவாறு. 2

உன்னை மறந்திருக்கும் நாட்கள் அறிவு கெடும் நாட்கள்; உயிர்போகும் நாட்கள்; பெரிய பாடையின்மேல் சுமக்கப்படும் நாட்கள் என்று அல்லாமல் பயனுடையவாகக் கருதேன்; விளங்கு கின்ற நீரையுடைய காவிரியானது, பரந்த குளிர்ந்த நீர் வந்து ஒழுகும் திருப்பாண்டிக் கொடுமுடியில் எழுந்தருளிய சிறந்த ஞானப் பிழம்பாகிய காவலரே! தேவரீரை அடியேன் மறந்தாலும் என் நாவானது '**நமச்சிவாய**' என்றும் திரு ஐந்தெழுத்தை சொல்லாநிற்கும் என்றவாறு. 3

எல்லையில் புகழ் எம்பிரான்! எந்தை! தம்பிரான்! என்
[பொன்! மாமணி!
கல்லையுந்தி, வளம் பொழிந்து, இழி காவிரி, அதன்
[வாய்க்கரை,
நல்லவர் தொழுதேத்தும் சீர்க்கறை யூரில் பாண்டிக்
[கொடு முடி
வல்லவா! உனை நான் மறக்கினும் சொல்லு நா
[நமச்சிவாயவே. 4

'அஞ்சினார்க்கு அரண் ஆதி' என்று அடியேன் நான் மிக
[அஞ்சினேன்;
'அஞ்சல்' என்று அடித்தொண்டனேற் கருள் நல்கி
[னாய்க்கு அழிகின்றது என்?
பஞ்சின் மெல் அடிபாவைமார் குடைந்து ஆடு பாண்டிக்
[கொடு முடி
நஞ்சு அணிகண்ட! நான் மறக்கினும் சொல்லு நா
[நமச்சிவாயவே. 5

ஏடுவான் இளந்திங்கள் சூடினை; என்பின் கொல்புலித்
[தோலின் மேல்
ஆடு பாம்பது அரைக்கு அசைத்த அழகனே! அந்தண்
[காவிரிப்
பாடு தண்புனல் வந்து இழி பரஞ்சோதி பாண்டிக் கொடு
[முடி.
சேடனே! உனை நான் மறக்கினும் சொல்லு நா
[நமச்சிவாயவே. 6

விரும்பி நின்மலர் பாதமே நினைந்தேன்; வினைகளும்
[விண்டனன்;
நெருங்கி வண்பொழில் சூழ்ந்து எழில்பெற நின்ற காவிரிக்
[கோட்டிடை

எல்லையில்லாத புகழினையுடைய எமது தலைவரே! எமது தந்தையே! தம்பிரானே! எனது பொன்னே! சிறந்த மாணிக்கமே! கற்களை நகர்த்து வளங்களைக் கொழித்து செல்லுகின்ற காவிரிக் கரையிலுள்ள, நல்லவராகிய சிவனடியார் வணங்கித் துதிக்கின்ற சிறந்த கறையூரில் திருப்பாண்டிக் கொடுமுடியில் எழுந்தருளிய எல்லாம் வல்லவரே! தேவரீரை நான் மறந்தாலும் என்னுடைய நாவானது '**நமச்சிவாய**' என்னும் திரு ஐந்தெழுத்தைச் சொல்லா நிற்கும். 4

•

'பயந்தவர்க்கு காவல் ஆகிறாய்' என்று அறிந்து அடியேனாகிய நானும் மிக அஞ்சினேன். திரு அடித்தொண்டனாகிய எனக்கு 'பயப்படாதே' என்று அருள் செய்த உனக்கு நஷ்டமாவது என்ன? பஞ்சினும் மென்மையாகிய அடிகளையுடைய பெண்கள் குடைந்து ஆடுகின்ற திருப்பாண்டிக் கொடுமுடியில் எழுந்தருளிய விடம் அணிந்த நீலகண்டத்தை யுடையவரே! அடியேன் உன்னை மறந்தாலும் என் நாவானது 'நமச்சிவாய' என்னும் திரு ஐந்தெழுத்தைச் சொல்லா நிற்கும். 5

இலை வடிவினையுடைய ஆகாயத்தில் சஞ்சரிக்கும் இளம் பிறையினை அணிந்தாய். என்பு மாலையுடன் கொலைத் தொழிலையுடைய புலித்தோலின் மீது ஆடுகின்ற பாம்பினையும் திருவரையில் கட்டிய சுந்தரனே! அழகும் குளிர்ச்சியும் வாய்ந்த காவிரியாற்றினது துறையினையுடைய குளிர்ந்த நீர் வந்து இறங்குகிற திருப்பாண்டிக் கொடுமுடியில் எழுந்தருளிய மேலான ஞானப் பிழம்பாகிய மிக்க இளமையுடையனே! தேவரீரை அடியேன் மறந்தாலும் நாவானது 'நமச்சிவாய' என்னும் திரு ஐந்தெழுத்தைச் சொல்லும். 6

தேவரீரது தாமரை மலர் போலும் திருவடிகளையே விருப்பம் கொண்டு எண்ணினேன்; (அதனால்) வினைகள் யாவும் விட்டொழியப் பெற்றேன்; வனப்பம் வாய்ந்த சோலைகள் நெருக்கமாகச் சூழ்தலால் அழகு தோன்ற இருக்கும் காவிரி யாற்றின்

குரும்பை மென்முலை கோதைமார் குடைந்தாடு பாண்டிக்
[கொடுமுடி
விரும்பனே! உனை நான் மறக்கினும் சொல்லு நா
[நமச்சிவாயவே. 7

செம்பொனேர் சடையாய்! திரிபுரம் தீயெழச்சிலை
[கோலினாய்;
வம்புலாங் குழலாளைப் பாகம் அமர்ந்து, காவிரிக் கோட்
[டிடைக்
கொம்பின்மேற் குயில்கூவ, மாமயிலாடு பாண்டிக் கொடு
[முடி
நம்பனே! உனை நான் மறக்கினும் சொல்லு நா
[நமச்சிவாயவே. 8

சாரணன்! தந்தை! எம்பிரான்! எந்தை தம்பிரான்!
[என் பொன்! மாமணி! என்று
பேர் எணாயிரம் கோடி தேவர் பிதற்றி நின்று பிரிகிலார்;
நாரணன் பிரமன் தொழும் கறையூரில் பாண்டிக்கொடு
[முடி
காரணா! உனை நான் மறக்கினும், சொல்லு நா
[நமச்சிவாயவே. 9

கோணிய பிறை சூடியை, கறையூரில் பாண்டிக் கொடுமுடி
பேணிய பெருமானை, பிஞ்ஞகப் பித்தனைப், பிறப்
[பில்லியைப்,
பாண் உலா வரிவண்டு, அறை கொன்றைத் தாரனைப்
[படப்பாம்பு அரை
நாணனைத் தொண்டன் ஊரன் சொல் இவை
சொல்லுவார்க்கு இல்லைத் துன்பமே. 10

கரையில், குரும்பைபோலும் மென்மைவாய்ந்த தனங்களையுடைய பெண்கள் குடைந்தாடுகின்ற திருப்பாண்டிக்கொடு முடியில் எழுந்தருளிய விரும்புதற்குரியவரே! தேவரீரை அடியேன் மறந்தாலும் நாவானது 'நமச்சிவாய' என்னும் திரு ஐந்தெழுத்தைச் சொல்லும். 7

செம்பொன்னை நிகர்த்த சடையையுடையவரே! முப்புரத்தில் நெருப்பெழும்படி சிலையை வளைத்தாய்; மணம் கமழ்கின்ற கூந்தலையுடையவளாகி உமாதேவியை இடப்பாகத்தில் விரும்பி எழுந்தருளச் செய்து, காவிரிக்கரையில் மரக்கிளைகளின்மேல் குயில்கள் கூவா நிற்க, சிறந்த மயில்கள் ஆடுகின்ற பாண்டிக் கொடுமுடியில் எழுந்தருளிய சிவபெருமானே! கடவுளாகிய உம்மை நான் மறந்தாலும், என் நா 'நமச்சிவாயம்' என்னும் திரு ஐந்தெழுத்தைச் சொல்லும் என்றவாறு. 8

கடவுளே! தந்தையே! எமது தலைவரே! என் தந்தைக்குத் தலைவரே! எனது பொன்னே! சிறந்த மணியே! என்று அழைத்து, மிகவிரும்பி திருப்பெயர்களை எண்ணுகின்ற கணக்கற்ற தேவர்கள் பிதற்றி நின்று, உம்மைப் பிரியாதிருக்கின்றனர். திருமாலும் பிரமனும் வணங்கித் துதிக்கின்ற கறையூரில் திருப் பாண்டிக் கொடுமுடியில் எழுந்தருளிய எல்லாவற்றிற்கும் காரணரே! தேவரீரை அடியேன் மறந்தாலும் நாவானது 'நமச்சிவாய' என்னும் திரு ஐந்தெழுத்தைச் சொல்லும். 9

வளைந்த பிறைச் சந்திரனைச் சூடியவரை, கறையூரிலுள்ள திருப்பாண்டிக்கொடுமுடியை விரும்பிய தலைவரை, தலைக்கோல மணிந்த பித்தரை, பிறத்தலில்லாதவரை, இசையோடு உலாவு கின்ற சிறகுகளையுடைய வண்டுகள் ஒலிக்கின்ற கொன்றைப் பூமாலையை யுடையவரை, படத்தினையுடைய பாம்பாகிய அரை நாணையுடையவரை, தொண்டனாகிய நம்பி ஆரூரன் சொல்லிய இத்திருப்பாடல்களை ஓதுகின்றவர்களுக்கு துன்பமில்லையாகு மென்றவாறு. 10

## 9. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

### திருப்பதிக்கோவை

### இரண்டாந் திருமுறை

### கோயிற்றிறம்

திருச்சிற்றம்பலம்.

ஆரூர், தில்லை அம்பலம், வல்லம் நல்லம்,
வடகச்சியும், அச்சிறுபாக்கம், நல்ல
கூரூர், குடவாயில், குடந்தை, வெண்ணி,
கடல் சூழ் கழிப்பாலை, தென்கோடி, பீடார்
நீரூர் வயல் நின்றியூர், குன்றியூரும்,
குரு காவையூர், நாரையூர், நீடு கானப்
பேரூர், நன்னீள் வயல் நெய்த்தானமும்,
பிதற்றாய் பிறைசூடி தன் பேரிடமே.

அண்ணாமலை, யீங்கோயும், அத்தி, முத்தாறு
அகலாமுதுகுன்றம், கொடுங்குன்றமும்,
கண்ணார் கழுக்குன்றம், கயிலை, கோணம்,
பயில் கற்குடி, காளத்தி, வாட்போக்கியும்,
பண்ணார் மொழி மங்கையோர் பங்குடையான்
பரங்குன்றம், பருப்பதம், பேணி நின்றே
எண்ணாயிரவும் பகலும் இடும்பைக்
கடல் நீந்தலாம் காரணமே.

அட்டானம் என்று ஓதிய நாலிரண்டும்,
அழகன் உறைகா அனைத்தும், துறைகள்,
எட்டாம் திருமூர்த்தியின் காடு ஒன்பதும்,
குளம் மூன்றும், களம் அஞ்சும், பாடி நான்கும்,
மட்டார் குழலாள் மலைமங்கைபங்கன்
மதிக்கும் இடமாகிய பாழி மூன்றும்,
சிட்டானவன் பாசூர் என்றே விரும்பா
அரும்பாவங்கள் ஆயின தேய்ந்தறவே.

# 9. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

## திருப்பதிக்கோவை

## இரண்டாந் திருமுறை

## கோயிற்றிறம்.

திருவாரூர், சிதம்பரம், திருநல்லம், வடக்கேயுள்ள திருக்கச்சியேகம்பம், அச்சிறுபாக்கம், நன்மையுடைய திருக்கூடூர், திருக்குடவாயில், கும்பகோணம், திருவெண்ணியூர், கடல் சூழப்பெற்ற திருக்கழிப்பாலை, தெற்கேயுள்ள கோடிக்கரை, பெருமை தங்கிய நீர் நிறைந்த வயல் சூழ்ந்த திருநின்றியூர், திருக்குன்றியூர், திருக்குருகாவூர், திருநாரையூர், சிறந்த திருக்கானப்பேரூர், நல்ல பெரிய வயலாற் சூழப்பெற்ற திருநெய்த்தானம் ஆகிய இத்திருப்பதிகளெல்லாம் பிறைசூடியாகிய சிவபெருமானது பெரிய ஸ்தலங்களென்று பன்முறையுங் கூறுவாயாக. 1

திருவண்ணாமலை, திருவீங்கோய்மலை, திருவத்தி, மணிமுத்தாறு, நீங்காத் திருமுதுகுன்றம், கொடுங்குன்றம், இடம் அகன்ற திருக்கழுக்குன்றம், திருக்கைலாயம், திருக்கோணம் வசித்தற்குரிய கற்குடி, திருக்காளத்தி, திருவாட்போக்கி, பண்ணமைந்த திருவார்த்தையினையுடைய உமாதேவியை ஒரு பாகத்தில் உடைய இறைவனது திருப்பரங்குன்றம், திருப்பருப்பதம் என்றும் இத்திருமலைகளை யெல்லாம் விரும்பி இராப்பகலும் எண்ணுவாயாக! அவ்வாறு எண்ணுவாயாயின் துன்பக்கடல் நீங்குதற்கு அஃதோர் ஏதுவாகும். 2

வீரட்டானம் என்று சொல்லப்பெறும் எட்டுத் திருப்பதிகளும், அழகினையுடைய இறைவன் தங்கும் கா எனப்பெறும் எல்லாத் திருப்பதிகளும், துறைகள் எனப்பெறுந் திருப்பதிகளும், அட்டமூர்த்தியாகிய இறைவன், காடு என்னும் ஒன்பது திருப்பதிகளும், குளம் என்னும் மூன்று திருப்பதிகளும், களம் என்னும் ஐந்து திருப்பதிகளும், பாடி என்னும் நான்கு திருப்பதிகளும், தேன் ஒழுகுகின்ற கூந்தலையுடைய உமாதேவியைப் பாகத்தில் கொண்ட சிவபெருமான் மதிக்கும் இடமாகிய பாழிகள் மூன்றும் மேலான இறைவனது திருப்பாசூர் என்னும் ஊரும் ஆகிய இச்சிவத்தலங்களையெல்லாம் நீ விரும்புவாயாக. அப்படி விரும்புவது யாதுக்கெனில், நீக்கிக் கொள்ளுதற்கரிதாகிய பாவங்களானவை தேய்ந்தொழியவேயாம். 3

அறப்பள்ளி, அகத்தியான் பள்ளி, வெள்ளைப்
[பொடிப்பூசி,
நீறணிவான் அமர் காட்டுப் பள்ளி,
சிறப்பள்ளி, சிராப்பள்ளி, செம்பொன் பள்ளி,
திருநனி பள்ளி, சீர் மகேந்திரத்துப்
பிறப்பில்லவன் பள்ளி, வெள்ளைச் சடையான்
விரும்பும் இடைப்பள்ளி, வண்சக்கரமால்
உறைப்பால் அடிபோற்றக் கொடுத்த பள்ளி,
உணராய் மடநெஞ்சமே! உன்னி நின்றே. 4

ஆறை, வட மாகறல், அம்பர், ஐயாறு,
அணியார் பெருவேளூர், விளமர், தெங்கூர்,
சேறை, துலை, புகலூர், அகலாது இவை
......காதலித் தானவன் சேர்பதியே. 5

மனவஞ்சர் மற்று ஓட முன் மாதராரும்,
மதிகூர் திருக்கூடலில் ஆலவாயும்,
இனவஞ் சொல் இலா இடைமா மருதும்,
இரும்பைப்பதி மாகாளம், வெற்றியூரும்,
கனமஞ்சின மால்விடையான் விரும்பும்
கருகாவூர், நல்லூர், பெரும்பலியூர்,
தனம் என் சொலில் தஞ்சம் என்றே நினைமின்;
தவம் ஆம் மலம் ஆயின தான அறுமே. 6

மாட்டூர், மடப்பாச்சிலாச்சிராமம்,
முண்டீச்சரம், வாதவூர், வாரணாசி,
காட்டூர், கடம்பூர், படம் பக்கம் கொட்டும்
கடல் ஒற்றியூர், மற்றுறையூர், அவையும்
கோட்டூர், திருவாமாத்தூர், கோழம்பமும்,
கொடுங்கோவலூர், திருக்குணவாயில்... 7

திருவறப்பள்ளி, திரு அகத்தியான்பள்ளி, வெள்ளிய விபூதியைப் பூசித், திருநீற்றை திருமேனியெங்கும் அணிந்து, அதன்மேல் திரிபுண்டரம் அணியும் இறைவன் விரும்பி எழுந்தருளிய திருக்காட்டுப்பள்ளி, திருச்சிறப்பள்ளி, திருச்சிராப்பள்ளி, திருச்செம்பொன்பள்ளி, திருநனிபள்ளி, சிறப்புப் பொருந்திய பிறப்பில்லாதவனாகிய இறைவனது திருமகேந்திரப்பள்ளி, கங்கையைச் சடையில் அணிந்த இறைவன் விரும்பும் திருவிடைப்பள்ளி, திருமால் [illegible] திருவாசகம் [illegible] வழிபாடு செய்ய வளைவிய சக்கரதானத்தைப் பெற்ற திருச்சக்கரப்பள்ளி என்னும் இவைகளை அறிவில்லாதவனையே [illegible] அறிப்பாட்டையாய். 4

திருவாரூர், [illegible] திருநாகைக்காரோணம், திருவம்பர் மாகாளம், திருவையாறு, [illegible] திருப்பெருவேளூர், திருவிளமர், [illegible] திருச்சேறை, [illegible] திருப்புகலூர் என்னும் இவைகளை இறைவன் என்றும் அகலாது எழுந்தருளியிருக்கும் திருப்பதிகளாக விரும்புவேன். 5

[illegible] மங்கையர்க் காமியம் அறிய [illegible] திருக்கடவூரின் [illegible] ஆலவாயும், [illegible] இல்லாத, சிறந்த திருவிடைமருதூரும், [illegible] திருமாகாளமும், திருவொற்றியூரும், பொய்யா [illegible] வாய்ந்த, திருமால் விடையையுடைய இறைவன் விரும்புகின்ற திருக்கருகாவூர், திருநல்லூர், திருப்பெரும்புலியூர் என்பனவைகளும் [illegible] திகளாம். என் சொல்லினுள் [illegible] எண்ணுங்கள். அவ்வாறு எண்ணுவீர்களாயின் [illegible] பலிக்கும். இவை [illegible] அடியேனது [illegible]. 6

திருமா [illegible] திருப்பாச்சிலாச்சிராமம், திருமுண்டீச்சரம், திருவாதவூர், வாரணாசி, திருக்காட்டூர், திருக்கடம்பூர், [illegible] வாழ்த்துகின்ற கடல் சூழ்ந்த திருவொற்றியூர். [illegible] பொருந்திய திருத்துறையூர் என்னும் இவைகளும், திருக்கோட்டூர், திருவாமாத்தூர், திருக்கோழம்பம், திருக்கோவலூர், திருக்குணவாயில்...... 7

......குலாவு திங்கட் சடையான் குளிரும் பரிதி நியமம்,
போற்றார், அடியார் வழிபாடு ஒழியாத்
தென்புறம்பயம், பூவணம், பூழியூரும்,
காற்றார், வரை அன்று எடுத்தான் முடிதோள்
[ நெரித்தான்
உறை கோயில் என்றென்று நீ கருதே. 8

நெற்குன்றம், ஓத்தூர், நிறை நீர் மருகல்,
நெடுவாயில், குறும்பலா, நீடு திரு
நற்குன்றம், வலம்புரம், நாகேச்சரம்,
நளிர் சோலையும் சேனை மாகாளம், வாய்மூர்,
கற்குன்றம் ஒன்றேந்தி மழை தடுத்த
கடல் வண்ணனும் மாமலரோனும் காணச்
சொற்கென்றும் தொலைவிலா தான் உறையும்
குடமூக்கு என்று சொல்லிக் குலாவுமினே. 9

குத்தங்குடி, வேதிகுடி, புனல் சூழ்
குருத்தங்குடி, தேவன்குடி, மருவு
மத்தங்குடி, தண் திருவண் குடியும்,
அலம்பும் சலம் தன்சடை வைத்து உகந்த
நித்தன் நிமலன் உமையோடும் கூட
நெடுங்காலம் உறைவிடம் என்று சொல்லாய்,
புத்தர் புறங்கூறிய புன்சமணர்
நெடும் பொய்களை விட்டு நினைந்துய்மினே. 10

அம்மானை அருந்தவமாகி நின்ற
அமரர் பெருமான் பதியான உன்னிக்
கொய்ம்மா மலர்ச்சோலை குலாவு கொச்சைக்கு
இறைவன் சிவஞானசம்பந்தன் சொன்ன
இம்மாலை யீரைந்தும் இரு நிலத்தில்
இரவும் பகலு நினைந்து, ஏத்தி நின்று,
விம்மா வெருவா, விரும்பும் அடியார்
விதியார் பிரியார் சிவன் சேவடிக்கே. 11

திருச்சிற்றம்பலம்

விளங்குகின்ற பிறையை அணிந்த சடையை உடைய இறைவன் விரும்பும் திருப்பரிதி நியமம், திருப்போற்றூர், அடியவர்களது வழிபாடு நீங்காத அழகிய திருப்புறம்பயம், திருப்பூவணம், திருப்பூழியூர் என்னும் இவைகளும் திருக்காற்றூரும் திருக்கயிலாய மலையை எடுத்த இராவணனது பத்து முடிகளையும் இருபது தோள்களையும் நெரித்த இறைவன் வாழ்கின்ற திருக்கோயில்கள் என்று நீ எண்ணுவாயாக ! 8

திருநெற்குன்றம், திருவோத்தூர், நீர் வளம் மிகுந்த திருமருகல், திருநெடுவாயில், குறும்பலாவை விருட்சமாகவுடைய திருக்குற்றாலம், சிறந்த திருநற்குன்றம், திருவலம்புரம், திருநாகேச்சரம், குளிர்ந்த சோலை சூழ்ந்த திருவஞ்சேனை மாகாளம், திருவாய்மூர், கோவர்த்தன மலையைக் கையிலேந்தி மழையைத் தடுத்த கடல்போலும் நீல நிறத்தையுடைய திருமாலும் சிறந்த தாமரை மலரில் வாழும் பிரமதேவரும் அறியாத என்றும் சொல்லுக்கடங்காதவனாகிய இறைவன் வசிக்கும் திருக்குடமூக்கு என்று இவ்வாறு சொல்லிப் பாராட்டுவீராக ! 9

திருக்குத்தங்குடி, திருவேதிகுடி, நீர் சூழ்ந்த திருக்குருந்தங்குடி, திருத்தேவன்குடி, நிலைபொருந்திய திருமத்தங்குடி, குளிர்ந்த திருவன்குடி என்னும் இவைகளெல்லாம் அலம்பாநிற்கும் கங்கை நீரைத் தாங்கு சடையில் வைத்து உவப்படைந்த நித்தத் தன்மையும் நிமலத் தன்மையும் பொருந்திய இறைவன் உமாதேவியாரோடு பண்டைக் காலந்தொட்டு எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் என்று சொல்லி புத்தர்கள், காணுவிடத்துப் பிறரைப் பழித்துரைக்கும் இழிகுணத்தையுடைய சமணர் முதலியோர், மேற்கொண்டுள்ள பெரும் பொய்களை நீங்கள் கைவிட்டு நினைந்து உய்வீர்களாக. 10

எல்லா உயிர்கட்கும் தந்தையாய் நின்ற இறைவனையும், அருமையான தவமே உருவாகின்ற தேவர்கள், தலைவனாகிய அவ் விறைவனது திருப்பதிகளையும் நினைந்தெண்ணிக், கொய்யும் சிறந்த மலர் நிறைந்த சோலை சூழ்ந்த கொச்சை யென்னும் சீகாழிக்குத் தலைவனாகிய சிவஞானசம்பந்தன் உரைத்த இத்திரு க்ஷேத்திரக் கோவையில் அமைந்த பத்துத் திருப்பாட்டுக்களையும், இந் நிலவுலகத்தில் இரவிலும் பகலிலும் எண்ணிப் போற்றி நின்று, விம்முதலையும் வெருவுதலையும் செய்து விரும்புகின்ற அடியார்கள் பிறப்பினை அடையாதவராய்ச் சிவபெருமான் திருவடியிற் பிரியாது நிலைபெற்றிருப்பர். 11

# 10. திருநாவுக்கரசு சுவாமிகள்

## திருப்பதிக்கோவை

### ஆறும் திருமுறை

### கோயிற்றிறம்

*திருச்சிற்றம்பலம்.*

தில்லைச் சிற்றம்பலமும், செம்பொன் பள்ளி,
தேவன் குடி, சிராப்பள்ளி, தெங்கூர்,
கொல்லிக் குளிரறைப்பள்ளி, கோவல்
வீரட்டம், கோகரணம், கோடி காவு,
முல்லைப் புறவ முருகன் பூண்டி,
முழையூர், பழையாறை, சத்திமுற்றம்,
கல்லிற்றிகழ் சீரார் காளத்தியுங்,
கயிலாய நாதனையே காணலாமே. 1

ஆரூர், மூலட்டானம், ஆனைக்காவும்,
ஆக்கூரில் தான்தோன்றி மாடம், ஆவூர்,
பேரூர், பிரமபுரம், பேராவூரும்,
பெருந்துறை, காம்பீலி, பிடவூர், பேணும்
கூரார் குறுக்கை வீரட்டானமும்,
கோட்டூர், குடமூக்கு, கோழம்பமும்,
காரார் கழுக்குன்றும், கானப்பேரும்,
கயிலாய நாதனையே காணலாமே. 2

இடைமருது, ஈங்கோய், இராமேச்சரம்,
இன்னம்பர், ஏரிடவை, ஏமப்பேறூர்,
சடைமுடி, சாலைக்குடி, தக்களூர்,
தலையாலங்காடு, தலைச்சங்காடு,
கொடுமுடி, குற்றாலம், கொள்ளம்பூதூர்,
கோத்திட்டை, கோட்டாறு, கோட்டுக்காடு,
கடைமுடி, கானூர், கடம்பந்துறை,
கயிலாய நாதனையே காணலாமே. 3

## 10. திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருப்பதிக்கோவை

### ஆறும் திருமுறை

### கோயிற்றிறம்

தில்லைத் திருச்சிற்றம்பலம், திருச்செம்பொன் பள்ளி, திருந்து தேவன் குடி, திருச்சிராப்பள்ளி, திருத்தெங்கூர், கொல்லி மலையிலுள்ள குளிர்ச்சி பொருந்திய திருவரைப்பள்ளி, திருக் கோவல் வீரட்டானம், திருக்கோகரணம், திருக்கோடிகா, முல்லைக் காட்டிலுள்ள திருமுருகன் பூண்டி, திருமுழையூர், திருப்பழை யாறை வடதளி, திருச்சத்தி முற்றம் மலையிற் சிறப்புற்று விளங் கும் திருக்காளத்தி எனும் இத்திருப்பதிகளிலெல்லாம் கயிலைத் தலைவனுகிய இறைவனைக் கண்டு வணங்கலாகும் என்றவாறு. 1

திருவாரூர், திருமூலட்டானம், திருவானைக்கா, திருவாக் கூர்த்தான்தோன்றிமாடம், திருவாவூர், பசுபதீச்சரம், திருப் பேரூர், திருப்பிரமபுரம், திருப்பேராவூர், திருப்பெருந்துறை, திருக்காம்பீலி, திருப்பிடவூர, விரும்பும் சிறப்பமைந்த திருக் குறுக்கை, வீரட்டானம், திருக்கோட்டூர், திருக்குடமூக்கு, திருக் கோழம்பம், மேகங்கள் தவழுகின்ற திருக்கழுக்குன்றம், திருக் கானப்பேரூர், எனும் இத்திருப்பதிகளிலெல்லாம் கயிலாய நாதனுகிய இறைவனைக் கண்டு தரிசிக்கலாகும் என்றவாறு. 2

திருவிடைமருதூர், திருவீங்கோய் மலை, திருவிராமேச்சரம், திருவின்னம்பர், அழகிய திருவிடவை எமப்பேறூர், சடைமுடி, சாலைக்குடி, திருத்தக்களூர், திருத்தலையாலங்காடு, திருத்தலைச் சங்காடு, திருப்பாண்டிக்கொடுமுடி, திருக்குற்றாலம், திருக்கொள் ளம்பூதூர், திருக்கோத்திட்டை, திருக்கோட்டாறு, திருக்கோட்டுக் காடு, திருக்கடைமுடி, திருக்காறூர், திருக்கடம் பந்துறை எனும் இத்திருப்பதிகளிலெல்லாம் கயிலாயநாதனுகிய இறைவனைக் கண்டு வணங்கலாகும் என்றவாறு. 3

எச்சில், இளமர், ஏமம், நல்லூர்,
இலம்பையங் கோட்டூர், இறையான் சேரி,
அச்சிறுபாக்கம், அளப்பூர், அம்பர்,
ஆவடு தண்டுறை, அழுந்தூர், ஆறை,
கச்சினம், கற்குடி, கச்சூர் ஆலக்
கோயில், கரவீரம், காட்டுப்பள்ளி,
கச்சிப் பல தளியும், ஏகம் பத்தும்,
கயிலாய நாதனையே காணலாமே.

கொடுங்கோளூர் அஞ்சைக் களம், செங்குன்றூர்,
கொங்கணம், குன்றியூர், குரக்குக்காவு,
நெடுங்களம், நன்னிலம், நெல்லிக்காவு,
நின்றியூர், நீடூர், நியமம், நல்லூர்,
இடும்பாவனம், எழுமூர், ஏழூர், தோழூர்,
எறும்பியூர், ஏராரும் ஏமகூடம்,
கடம்பை, இளங்கோயில், தன்னினுள்ளும்
கயிலாய நாதனையே காணலாமே.

மண்ணிப்படிக்கரை, வாழ்கொளிபுத்தூர்,
வக்கரை, மந்தாரம், வாரணாசி,
வெண்ணி, விளத்தொட்டி, வேள்விக்குடி,
விளமர், விராடபுரம், வேட்களத்தும்,
பெண்ணை அருட்டுறை, தண் பெண்ணாகடம்,
பிரம்பில், பெரும்புலியூர், பெருவேளூரும்,
கண்ணை, களர்க்காறை, கழிப்பாலையும்,
கயிலாய நாதனையே காணலாமே.

வீழிமிழலை, வெண்காடு, வேங்கூர்
வேதிகுடி, விசயமங்கை, வியலூர்,
ஆழி அகத்தியான் பள்ளி, அண்ணா
மலை, ஆலங்காடும், அரதைப்பெரும்

திருவெச்சில், இளமர், திருவேமம், திருநல்லூர், திருவிலம் பையங்கோட்டூர், திருவிறையான்சேரி, திருவச்சிறுபாக்கம், திரு வளப்பூர், திருவம்பர்மாகாளம், திருவாவடுதுறை, திருவழுந்தூர், திருவாறைவடதளி, திருக்கைச்சினம், திருக்கற்குடி, திருக்கச் சூராலக்கோயில், திருக்கரவீரம், திருக்காட்டுப்பள்ளி, காஞ்சீபுரத் தில் உள்ள பல கோயில்கள், திருக்கச்சித் திருவேகம்பம் என்னும் இந்த ஸ்தலங்களிலெல்லாம் கயிலாயநாதனாகிய சிவபெருமானைக் கண்டு தெரிசிக்கலாம். 4

திருக்கொடுங்கோளூரில் உள்ள திருவஞ்சைக்களம், திருக் கொடிமாடச் செங்குன்றூர், திருக்கொங்கணம், திருக்குன்றியூர், திருக்குரக்குக்கா, திருநெடுங்களம், திரு நன்னிலத்துப் பெருங் கோயில், திருநெல்லிக்கா, திருநின்றியூர், திருநீடூர், திருநியமம், திருநல்லூர், திரு இடும்பாவனம், திருவெழுமூர், திருவேளூர், திருத்தேவூர், திருவெறும்பியூர், அழகுபொருந்திய திருவேம கூடம், திருக்கடம்பைக்கரக் கோயில், திருமீயச்சூர் இளங்கோயில் என்னும் இந்த ஸ்தலங்களிலெல்லாம் கயிலாயநாதனாகிய சிவ பெருமானைக் கண்டு தெரிசிக்கலாம். 5

திருமண்ணிப்படிக்கரை, திருவாழ்கொளிபுத்தூர், திருவக் கரை, மந்தாரம், வாரணாசி, திருவெண்ணி, விளத்தொட்டி, திரு வேள்விக்குடி, திருவிளமர், விராடபுரம், திருவேட்களம், பெண்ணையாற்றின் கரையில் உள்ள திருவெண்ணெய் நல்லூர்த் திருவருட்டுறை, குளிர்ச்சி பொருந்திய திருப்பெண்ணாகடம், பிரம்பில், திருப்பெரும்புலியூர், திருப்பெருவேளூர், கண்ணை, களர்க்காறை, திருக்கழிப்பாலை என்னும் இந்தஸ்தலங்களி லெல்லாம் கயிலாயநாதனாகிய சிவபெருமானைக் கண்டு தெரிசிக்கலாம். 6

திருவீழிமிழலை, திருவெண்காடு, திருவேங்கூர், திருவேதி குடி, திருவிசயமங்கை, திருவியலூர், கடற்கரையில் உள்ள திரு அகத்தியான் பள்ளி, திருவண்ணாமலை, திருவாலங்காடு, திரு வரைப் பெரும்பாழி, திருப்பழனம், திருப்பனந்தாள், திருப் பாதாளேச்சரம், திருப்பராய்த்துறை, திருப்பைஞ்ஞீலி, திரு

பாழி, பழனம், பனந்தாள், பாதாளம்,
பராய்த்துறை, பைஞ்ஞீலி, பனங்காட்டூர், தண்
காழி, கடவூரைக் காரோணத்தும்,
கயிலாய நாதனையே காணலாமே. 7

உஞ்சேனை மாகாளம், ஊறல், ஒத்தூர்,
உருத்திரகோடி, மறைக்காட்டுள்ளும்,
மஞ்சு ஆர்பொதியின் மலை, தஞ்சை, வழுவூர்
வீரட்டம், மாதானம், கேதாரத்தும்,
வெஞ்ச மாக்கூடல், மீயச்சூர், வைகா,
வேதீச்சுரம், விவீசுரம், வெற்றியூரும்,
கஞ்சனூர், கஞ்சாறு, பஞ்சாக்கையும்,
கயிலாய நாதனையே காணலாமே. 8

திண்டீச்சரம், சேய்ஞலூர், செம்பொன்பள்ளி,
தேவூர், சிரபுரம், சிற்றேமம், சேறை,
கொண்டீச்சரம், கூந்தலூர், கூழையூர், கூடல்,
குருகாவூர், வெள்ளடை, குமரி, கொங்கு,
அண்டர் தொழும் அதிகை வீரட்டானம்,
ஐயாறு, அசோகந்தி, ஆமாத்தூரும்,
கண்டியூர் வீரட்டம், கருகாவூரும்,
கயிலாய நாதனையே காணலாமே.

நறையூரில் சித்தீச்சரம், நள்ளாறு,
நாரையூர், நாகேச்சரம், நல்லூர், நல்ல
துறையூர், சோற்றுத்துறை, சூலமங்கை,
தோணிபுரம், துருத்தி, சோமீச்சரம்,
உறையூர், கடல் ஒற்றியூர், ஊற்றத்தூர்
ஓமாம் புலியூர், ஓர் ஏடகத்தும்,
கறையூர், கருப்பறியல், கன்றாப்பூரும்,
கயிலாய நாதனையே காணலாமே.

வன்பார்த்தான் பனங்காட்டூர், குளிர்ச்சிபொருந்திய சீகாழி, திருக்கடவூரைக்காரோணம் என்னும் இந்தஸ்தலங்களிலெல்லாம் கயிலாயநாதனாகிய சிவபெருமானைக் கண்டு தரிசிக்கலாம். 7

திருவுஞ்சேனை மாகாளம், திருவூறல், திருவோத்தூர், திருவுருந்திரகோடி, திருமறைக்காடு, மேகந்தவழும் திருப்பொதியில், தஞ்சை இராசராசேச்சரம், திருவழூவூர், வீரட்டானம், மாதானம், திருக்கேதாரம், திருவெஞ்சமாக்கூடல், திருமீயச்சூர், திருவைகாவூர், திருவேதீச்சுரம், திருவிவீசுரம், திருவொற்றியூர், திருக்கஞ்சனூர், திருக்கஞ்சாறு, திருப்பஞ்சாக்கை என்னும் இந்தஸ்தலங்களிலெல்லாம் கயிலாயநாதனாகிய சிவபெருமானைக் கண்டு தரிசிக்கலாம். 8

திண்டீச்சரம், திருசேய்ஞலூர், திருச்செம்பொன்பள்ளி, திருத்தேவூர், திருச்சிரபுரம், திருச்சிற்றேமம், திருச்சேறை, திருக்கொண்டீச்சரம், திருக்கூந்தலூர், திருக்கூழையூர்; திருக்கூடலாலவாய், திருக்குருகாவூர்த் திருவெள்ளடை, குமரி, கொங்கு, தேவர் தொழுகின்ற திருவதிகை வீரட்டானம், திருவையாறு, திருவசோகந்தி, திருவாமாத்தூர், திருக்கண்டியூர் வீரட்டானம், திருக்கருகாவூர் என்னும் இந்தச் சிவஸ்தலங்களிலெல்லாம் கயிலாயநாதனாகிய சிவபெருமானைக் கண்டு தரிசிக்கலாம். 9

திருக்கறையூர்ச் சித்தீச்சரம், திருநள்ளாறு, திருநாரையூர், திருநாகேச்சரம், திருநல்லூர், நன்மைமிக்க திருத்துறையூர், திருச்சோற்றுத்துறை, குலமங்கை, திருத்தோணிபுரம், திருத்துருத்தி, சோமீச்சரம், உறையூர், கடல்சூழ்ந்த திருவொற்றியூர், வைற்றத்தூர், திருவோமாம்புலியூர், ஒப்பற்ற திருவேடகம், கறையூர், திருக்கருப்பறியலூர், திருக்கன்றாப்பூர் என்னும் இந்தச் சிவஸ்தலங்களிலெல்லாம் கயிலாய நாதனாகிய சிவபெருமானைக் கண்டு தரிசிக்கலாம். 10

புலிவலம், புத்தூர், புகலூர், புன்னூர்,
புறம் பயம், பூவணம், பொய்கை, நல்லூர்,
வலிவலம், மாற்பேறு, வாய்மூர், வைகல்,
வலஞ்சுழி, வாஞ்சியம், மருகல், வன்னி,
நிலமலி நெய்த்தானத் தோடு, எத்தானத்தும்
நிலவு பெரும்கோயில் பல கண்டால் தொண்டீர்!
கலிவலி மிக்கோனைக் கால்விரலால் செற்ற
கயிலாய நாதனையே காணலாமே. 11

திருச்சிற்றம்பலம்.

திருப்புலிவலம், திருப்புத்தூர், திருப்புகலூர், திருப்புன்கூர், திருப்புறம்பயம், திருப்பூவணம், பொய்கை, திருநல்லூர், திருவலிவலம், திருமாற்பேறு, திருவாய்மூர், திருவைகல், திருவலஞ்சுழி. திருவாஞ்சியம், திருமருகல், வன்னி, பூவுலகத்தில் சிறந்த திருநெய்த்தானம் ஆகிய இவைகளோடும் மற்றும் பிற எந்த இடத்தும் விளங்குகின்ற பல பெரிய கோயில்களைக்கண்டால், தொண்டர்களே! அவைகளில் பாவமும் வலியும் மிக்க இராவணனைக் கால் விரலாற் செற்றுவென்ற கயிலாய நாதனாகிய சிவபெருமானைக் கண்டு தரிசிக்கலாம். 11

# 11. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## ஊர்த்தொகை

ஏழாந் திருமுறை

### கோயிற்றிறம்

திருச்சிற்றம்பலம்.

காட்டூர்க்கடலே! கடம்பூர் மலையே! கானப்பேரூராய்!
கோட்டூர்க்கொழுந்தே! அழுந்தூர் அரசே! கொழு நல்
[கொல்லேறே!
பாட்டூர் பலரும் பரவப்படுவாய்! பனங்காட்டூரானே!
மாட்டூர் அறவா! மறவாது உன்னைப்பாடப் பணியாயே 1

கொங்கில் குறும்பில் குரக்குத் தளியாய்! குழகா!
குற்றாலா!
மங்குல் திரிவாய்! வானோர்தலைவா! வாய்மூர் மணவாளா!
சங்கக் குழையார் செவியா! அழகா! அவியா அனல்
[ஏந்திக்
கங்குல் புறங்காட்டு ஆடீ! அடியார் கவலை களையாயே. 2

நிறைக் காட்டானே! நெஞ்சத்தானே! நின்றியூரானே!
மிறைக் காட்டானே! புனல் சேர்சடையாய்! அனல் சேர்
[கையானே!
மறைக்காட்டானே! திருமாந்துறையாய்! மாகோணத்
[தானே!
இறைக்காட்டாயே எங்கட்கு உன்னை; எம்மான்!
[தம்மானே! 3

ஆரூர் அத்தா! ஐயாற்று அமுதே! அளப்பூர் அம்மானே!
கார் ஊர் பொழில்கள் புடை சூழ் புறவில் கருகா
[வூரானே!
பேரூர் உறைவாய்! பட்டிப்பெருமான்! பிறவா
[நெறியானே!
பார் ஊர் பலரும் பரவப்படுவாய்! பாசூர் அம்மானே! 4

# 11. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## ஊர்த் தொகை

## ஏழாந் திருமுறை

## கோயிற்றிறம்

காட்டூரில் எழுந்தருளிய கருணைக்கடலே! கடம்பூரில் வீற்றிருக்கும் குணக்குன்றமே! திருக்கானப்பேரூரில் எழுந்தருளியுள்ளவரே! திருக்கோட்டூரில் வீற்றிருக்கும் கொழுந்தீசரே! திருவழுந்தூரில் உள்ள அரசரே! கொழுத்த நல்ல பகைவரைக் கொல்லுகின்ற ஏறுபோன்றவரே! பாட்டினால் புகழ்ந்து பேசும் ஊர்களில் பலராலும் துதிக்கப்பெறுகின்றவரே! திருப்பனங்காட்டூரில் வீற்றிருப்பவரே! ரிஷபத்தை ஊர்ந்தருளுகின்ற அறத்தின்வடிவினரே! தேவரீரை மறவாமல் பாடுமாறு பணித்தருள்வீராக! 1

கொங்கு நாட்டிலே குரும்பூரில் உள்ள குரங்கு பூசித்து வழிபட்ட கோயிலில் எழுந்தருளியவரே! குழகரே! திருக்குற்றாலத்தையுடையவரே! மேகத்தில் சஞ்சரிப்பவரே! தேவர்கள் தலைவரே! திருவாய்மூரில் வீற்றிருக்கும் மணவாள நாதரே! சங்கக்குழையணிந்த திருக்காதுகளையுடையவரே! அழகரே! அணையாத தீயை ஏந்தி இரவில் புறங்காட்டில் ஆடுபவரே! அடியவர்களது துன்பத்தை விலக்கியருள்வீராக. 2

மறைக்காட்டில் எழுந்தருளியவரே! அடியார்களது மனத்தில் இருப்பவரே! நின்றியூரையுடையவனே! மிறைக்காட்டையுடையவரே! கங்கை பொருந்திய சடையை உடையவரே! தீ சேர்ந்த கையையுடையவரே! திருமறைக்காட்டில் எழுந்தருளியவரே! திருமாந்துறை என்னும் திருப்பதியில் வீற்றிருப்பவரே! சிறந்த கோணை மாமலையை உடையவரே! எம்பெருமானே! தம்பிரானே! உம்மை எளியோங்களுக்கு சிறிது காட்டியருள்வீராக. 3

திருவாரூரில் எழுந்தருளிய கடவுளே! திருவையாற்றில் உள்ள அமுதமானவரே! அளப்பூரில் உள்ள தந்தையே! மேகந் தவழுகின்ற சோலைகள் பக்கங்களிலே சூழப்பெற்ற முல்லை நிலத்துள்ள திருக்கருகாவூரை உடையவரே! திருப்பேரூரில் உறைவீராகிய பட்டக்கரரே! பிறவாத நெறியாகிய முத்திநெறியை உடையவரே! உலகத்தில் உள்ள பலராலும் வழிபடப் பெறுபவரே! திருப்பாசூரில் எழுந்தருளிய தலைவரே! 4

மருகல் உறைவாய்! மாகாளத்தாய்! மதியம்
[சடையானே!
அருகல் பிணி நின் அடியார் மேல் அகல அருளாயே.
கருகல்குரலாய்! வெண்ணிக்கரும்பே! கானூர்கட்டியே!
பருகப்பணியாய் அடியார்க்கு உன்னை பவளப்படி
[யானே! 5

தாங்கூர் பிணி நின் அடியார் மேல் அகல அருளாயே,
வேங்கூர் உறைவாய்! விளமர் நகராய்! விடையார்
[கொடியானே!
நாங்கூர் உறைவாய்! தேங்கூர் நகராய்! நல்லூர்
[நம்பானே!
பாங்கு ஊர் பலிதேர் பரனே! பரமா! பழனப்பதி
யானே! 6

தேனைக்காவல் கொண்டு விண்ட கொன்றைச் செழுந்
[தாராய்!
வானைக்காவல் கொண்டு நின்றார் அறியா நெறியானே!
ஆனைக்காவில் அரனே! பரனே! அண்ணாமலையானே!
ஊனைக்காவல் கைவிட்டு உன்னை உகப்பார் உணர்வாரே.

துருத்திச்சுடரே! நெய்த்தானத்தாய்! சொல்லாய்
கல்லாலா!
பருத்தி நியமத்துறைவாய்! வெயிலாய்ப் பலவாய்க்
[காற்றானாய்
திருத்தித் திருத்தி வந்து என் சிந்தை இடம் கொள்
[கயிலாயா!
அருத்தித்து உன்னை அடைந்தார் வினைகள் அகல
[அருளாயே. 8

திருமருகலில் உறைபவரே! மாகாளத்தை உடையவரே! பிறையணிந்த அழகிய சடையை உடையவரே! வருந்துதற்குரிய நோய்கள் தேவரீரது அடியவர்கள் மேல் உள்ளனவற்றை ஒழியும் படி அருள்புரிவீராக! கரிய கண்டத்தையுடையவரே! வெண்ணி கோயிலில் உறையும் கரும்பானவரே! கானூரில் எழுந்தருளிய பவளம் போன்ற திருமேனியை உடையவரே! அடியவருக்குத் தேவரீரைப் பருகுமாறு கிருபை செய்வீராக. 5

வேங்கூரில் வாழ்பவரே! திருவிளமரை உடையவரே! இடபக்கொடியை உடையவரே! திருநாங்கூரில் வசிப்பவரே! தேங்கூர்நகரை உடையவரே! திருநல்லூரில் எழுந்தருளிய நம்பரே! அழகிய ஊர்கள் தோறும் பலியெடுக்கின்ற கடவுளே! மேலானவரே! திருப்பழனப்பதியை உடையவரே! தேவரீரின் அடியவர்கள் அடைகின்ற நோய்கள் விலகுமாறு அருள் செய்யக் கடவீராக. 6

தேனொத்துப் பட்டுத் திவலை பொதிந்து வைத்துக் கொண்டு மலர்ந்த கொன்றைமலர்களால் ஆகிய செழுமையாகிய மாலையை உடையவரே! விண்ணுலகத்தைக் காத்து வாழ்கின்ற தேவர்கள் அறியாத முத்தி நெறியை உடையவரே! திருவானைக்காவில் எழுந்தருளிய ஆன்மாக்களது பிறவியை ஒழித்தருளுகின்றவரே! மேலானவரே! திருவண்ணாமலையை உடையவரே! உடம்பினைக் காத்தலை ஒழித்து தேவரீரையே விரும்புவோர் தேவரீரைத் திருவருள் உணர்த்த உணர்வார்கள். 7

திருத்துருத்தியில் எழுந்தருளிய சோதியானவரே! திரு மெய்ஞ்ஞானத்தை உடையவரே! வேதங்கள் ஆராய்ந்தறிகின்ற கல்லாலின் கீழ் எழுந்தருளியிருப்பவரே! திருப்பருதி நியமத்தில் எழுந்தருளியிருப்பவரே! சூரியனாகி, பல பொருள்களாகி, அவையன்றிக் காற்றுமாயிருக்கின்றீர்; பல முறையும் அறியாமை நீக்கித் திருத்தஞ் செய்து எழுந்தருளி வந்து என் உள்ளத்தை இடமாகக் கொண்ட திருக்கயிலாய மலையினரே! விரும்பி உன்னை அடுத்தவர்களுடைய தீவினைகள் நீங்குமாறு திருவருள் புரியக்கடவீர். 8

புலியூர்ச் சிற்றம்பலத்தாய்! புகலூர்ப் போதா! மூதூரா!
பொலிசேர் புரமூன்று எரியச் செற்ற புரிபுன் சடையானே!
வலிசேர் அரக்கன் தடக்கை ஐஞ்ஞான்கு அடர்த்த [மதிசூடி!
கலிசேர் புறவில் கடவூராளீ! காண அருளாயே.
9

கைம்மா உரிவை அம்மான் காக்கும் பலவூர் கருத்துன்னி
மைமா தடங்கண் மதுரமன்ன மொழியாள் மடச்சிங்கடி
தம்மான், ஊரன், சடையன் சிறுவன், அடியன் தமிழ்மாலை
செம்மாந்து இருந்து திருவாய் திறப்பார் சிவலோகத்தாரே.

திருச்சிற்றம்பலம்.

பெரும்பற்றப் புலியூரில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தை யுடையவரே! திருப்புகலூரில் எழுந்தருளிய அறிவுருவானவரே! மூவாமை உடையவரே! விளக்கம் பொருந்திய திரிபுரங்களும் வெந்து சாம்பராகும்படி சினந்தவரே! முறுக்கிய புல்லிய சடையை உடையவரே! வலிமை பொருந்திய இராவணனது பெரிய கைகள் இருபதையும் நெரித்த பிறை சூடியவரே! ஒலி பொருந்திய முல்லை நிலத்தில் உள்ள திருக்கடவூரை ஆள்பவரே! தேவரீர் யான் காணும் வண்ணம் அருள் செய்வீராக! 9

யானையினது தோலையுடைய இறைவன் எழுந்தருளியுள்ள பல திருத்தலங்களையும் மனத்தில் நினைந்து மைதீட்டிய மாவடுவின் பிளப்பைப் போன்ற பெரிய கண்களையும், மதுரம்போல் மொழியையும் உடையவளாகிய [illegible] உடைய சிங்கடியம்மையாரது அபிமானப் பிதாவும் சடைய நாயனாரது புதல்வனும் அடித்தொண்டனுமாகிய நம்பியாரூரன் பாடிய தமிழ்ப்பதிக மாலையை [illegible] திருவாயினைத் திறந்துபாடுவோர் சிவலோகத்தை உடையவராவார். 10

# 12. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

## திருப்பிரமபுரம்

## திருவெழுகூற்றிருக்கை

### சிவனுருவம்

### முதல் திருமுறை

*திருச்சிற்றம்பலம்.*

ஓர் உரு ஆயினை; மான் ஆங்காரத்து
ஈரியல்பாய், ஒருவிண் முதல் பூதலம்
ஒன்றிய இரு சுடர் உம்பர்கள் பிறவும்
படைத்தளித்தழிப்ப மும்மூர்த்திகள் ஆயினை ;
இருவரோடு ஒருவனாகி நின்றனை ; 5

ஓர் ஆல் நீழல் ஒண்கழல் இரண்டும்
முப்பொழுதேத்திய நால்வர்க்கு ஒளி நெறி
காட்டினை; நாட்டம் மூன்றாகக் கோட்டினை ;
இருநதி அரவமோடு ஒரு மதி சூடினை ;
ஒருதாள் ஈர் அயில் மூஇலைச்சூலம் 10

நாற்கால் மான் மறி ஐந்தலை அரவம்
ஏந்தினை; காய்ந்த நால்வாய் மும்மதத்து
இருகோட்டு ஒரு கரி ஈடழித்து உரித்தனை ;
ஒருதனு இருகால் வளைய வாங்கி
முப்புரத்தோடு நானிலம் அஞ்சக் 15

கொன்று தலத்துற அவுணரை அறுத்தனை ;
ஐம்புலம் நாலாம் அந்தக் கரண
முக்குணம் [illegible] வானோர்
ஏத்த நின்றனை; ஒருங்கிய மனத்தோடு
இருபிறப் போர்ந்து முப்பொழுது குறைமுடித்து 20

நான்மறையோதி ஐவகை வேள்வி
அமைத்து ஆறங்கம் முதலெழுத்து ஓதி
வரன்முறை பயின்று எழும் வான்தனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை;
அறுபதமுரலும் வேணுபுரம் விரும்பினை ; 25

இகலிய மைந்து உணர் புகலி அமர்ந்தனை ;
பொங்கு நாற்கடல் சூழ் வெங்குரு விளங்கினை ;
பாணி மூவுலகும் புதைய மேல்மிதந்த
தோணிபுரத்து உறைந்தனை; தொலையா இருநிதி
வாய்ந்த பூந்தராய் ஏய்ந்தனை : 30

வரபுர மென்றுணர் சிரபுரத்து உறைந்தனை ;
ஒருமலை எடுத்த இருதிறல் அரக்கன்
விறல் கெடுத்து அருளினை ; புறவம் புரிந்தனை;
முந்நீர்த் துயின்றோன் நான்முகன் அறியாப்
பண்பொடு நின்றனை ; சண்பை அமர்ந்தனை ; 35

ஐயுறும் அமணரும் அறுவகைத் தேரரும்
ஊழியும் உணரா காழி அமர்ந்தனை :
எச்சன் ஏழிசையோன் கொச்சையை மெச்சினை ;
ஆறுபதமும் ஐந்தமர் கல்வியும்
மறை முதல் நான்கும் 40

ஒருமைப்பட்ட சித்தமுடையவராகிய தேவர்கள் எத்துமாறு பிரமபுரமே திருப்பதியாக எழுந்தருளியிருக்கின்றீர்.

பணம் ஆசாரம் சித்திரை முதலியவற்றில் செல்லுகின்ற மனத்தைப் பரமேசுவரனுடைய பாதங்களிலே ஒருக்கி தாம் பிறக்கும்போது ஏற்பட்ட பிறப்பும் உபநயனச் சடங்கின் ஏற்பட்ட பிறப்பும் என்னும் இருவகைப் பிறப்பினையும் விசாரித்தறிந்து மூன்று காலங்களிலும் செய்யப்படும் சபம் தர்ப்பணம் அனுட்டானம் ஓமம் என்னும் காரியங்களைச் செய்து முடித்து நான்கு வேதங்களையும் ஓதி முத்துவிதமான வேள்விகளையும் செய்தமைத்து வேதாங்கம் ஆறினையும் ஓதி வேதமுதலாகிய எல்லாக் கலைகட்கும் முதலாக வுள்ள பிரணவத்தை உச்சரித்து யாகங்களைச் செய்யு முறையிலே செய்து எழுந்து பெய்கின்ற மழையினை காலந்தவறாது பெய்விக்கும் திருப்பிரமபுரத்தின் கண்மேவ விரும்பி எழுந்தருளியிருக்கின்றீர். ஆறுகாலுடைய வண்டுகள் பண்பாடுகின்ற சோலை சூழ்ந்த வேணுபுரத்தை விரும்பி எழுந்தருளியிருக்கின்றீர். (தேவர்கள் தம்மைப்) பகைத்த (சூரபதுமனது) வலியை உணர்ந்து சரணடைந்த புகலியை விரும்பி எழுந்தருளியிருக்கின்றீர்.

சோபித்து பெருகி எழுந்த நான்கு கடல்களும் சூழ்ந்த வெங்குருவைத் திருப்பதியாகக் கொண்டு விளங்குகின்றீர். ஊழி வெள்ளத்தில் மூன்றுலகங்களும் அமிழவும் தான் அழுந்தாது அவ்வெள்ளத்தின்மேல் தோணியுருவம் கொண்டு மிதந்த தோணிபுரத்து வசிக்கின்றீர். ஒரு காலத்துங் கெடாத செல்வம் வாய்ந்த பூந்தராயைப் பொருந்தி வசிக்கின்றீர். பூசித்தவர்க்கு வரத்தைத் தருவதாகிய சகரமென்று அறியப்பெறும் சிரபுரத்து எழுந்தருளியிருக்கின்றீர். தனக்கு ஒப்புயர்வின்றி விளங்கும் திருக்கயிலாய மலையினைப் பெயர்த்தெடுத்த மிக்க வலியினையுடைய இராவணன் வீரத்தைக் கெடுத்தருளினீர். புறவம் என்னும் தலத்தினை விரும்பி யிருக்கின்றீர். பாற்கடலில் யோக நித்திரை புரிகின்ற விட்டுணு மூர்த்தியும் நான்கு முகத்தினையுடைய பிரமதேவரும் அறியாத பெருமையினையுடையரா யிருக்கின்றீர். சண்பையென்னும் திருப்பதியை இடமாக விரும்புகின்றீர். தூய உணர்வினையுடைய சமணர்களும் சூனியம் கூறுகின்ற புத்தர்களும் தமது மயக்க அறிவால் யாண்டும் அறியவாராத சீகாழியை விரும்பியிருக்கின்றீர். வெள்ளி உருவ

மூன்று காலமும் தோன்ற நின்றனை ;
இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்
மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் அறியும்
அனைய தன்மையை ஆதலின் நின்னை
நினைய வல்லவர் இல்லை நீணிலத்தே. 45

திருச்சிற்றம்பலம்

னையும் எழிசை உருவனையும் கொச்சை வயத்தைத் திருப்தியாக உகந்தருளினீர். ஆறுபதங்களும் ஐந்து விதமான கல்வியும் முதன்மையாகிய நான்கு வேதங்களும் இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலமும் தோன்றுவதற்கு ஏதுவாகி நிற்கின்றீர்.

உயிர்களோடு கலந்து அத்துவிதமாயும் எல்லாம் தன்னு ளடங்கிய எல்லையில்லாத ஒரே சிவமாயும் நிற்கின்றீர். குற்றமில் லாத வேதங்களை யுடைய அந்தணர் குலத்தில் தோன்றி தீக் கைகளாலே கழுவப்பட்ட மலத்தை யுடையவனாய் அநாதி நித்திய சிவத்தன்மையடைந்த கவுணிய கோத்திரத்திலே தோன்றிய திருஞானசம்பந்தன் உரைத்த இத்திருவெழுகூற்றிருக்கைத் திருப்பதிகமாகிய ஆன்மாக்களுக்கு உறுதிபயக்கும் உண்மை வசனத்தை கழுமலம் என்னும் பழைய திருப்பதியை விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பிரமசிரசிலே உண்கின்ற இறைவனை அறிந்து கொண்டருள்வர். அத்தன்மையாகிய இயல்பினை யுடையராதலின் மேலவரை எண்ணி ஏத்த வல்லவர் பெரிய உலகில் பிறவாதவராவர். முத்தியடைவர்.

# 13. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

## திருக்கடவூர் மயானம்

இரண்டாந் திருமுறை சிவனுருவம்

திருச்சிற்றம்பலம்.

வரிய மறையார்; பிறையார்; மலையோர் சிலையா வணங்கி
எரிய மதில்கள் எய்தார்; எறியும் மூசலம் உடையார்;
கரிய மிடறும் உடையார்: கடவூர் மயானம் அமர்ந்தார்;
பெரிய விடைமேல் வருவார்; அவர் எம்பெருமானடிகளே.

மங்கை மணந்த மார்பர்; மழுவாள் வலன் ஒன்று ஏந்திக்
கங்கை சடையில் கரந்தார்; கடவூர் மயானம் அமர்ந்தார்,
செங்கண் வெள் ஏறு ஏறி செல்வம் செய்யா வருவார்;
அம்கை ஏறிய மறியார்; அவர் எம்பெருமானடிகளே. 2

ஈடுஅல் இடபம் இசைய ஏறி மழுவொன்று ஏந்திக்
காட்டு இடமாக உடையார்; கடவூர் மயானம் அமர்ந்தார்
பாடல் இசைகொள் கருவி படுதம் பலவும் பயில்வார்;
ஆடல் அரவம் உடையார்; அவர் எம்பெருமான்
[அடிகளே. 3

இறை நின்று இலங்குவளையாள் இளையாள் ஒரு
[பாலுடையார்;
மறை நின்று இலங்கும்-மொழியார்; மலையார் மனத்தின்
[மிசையார்,
கறை நின்று இலங்குபொழில் சூழ்கடவூர் மயானம்
[அமர்ந்தார்,
பிறை நின்று இலங்கு சடையார்; அவர் எம்பெருமான்
[அடிகளே. 4

## 13. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

### திருக்கடவூர் மயானம்

இரண்டாந் திருமுறை சிவனுருவம்

இசைப்பாட்டுருவமாகிய வேதங்களையுடையவர்; திங்கட் பிறையை அணிந்தவர்; மலையை ஒப்பற்ற வில்லாக வளைத்து மும்மதில்கள் எரிந்து போகும்படி அம்பினை எய்தவர்; எறியப் படுகின்ற உலக்கையை உடையவர்; கருநிறம் பொருந்திய கண்டத்தையுமுடையவர்; திருக்கடவூர் மயானம் என்னும் தலத்தை விரும்பி எழுந்தருளினார். பெரிய இடபத்தை ஊர்ந்து வருவார். இத்தகைய பெருமைகளையுடைய அவரே எமது பெருமானாகிய கடவுளாவார். 1

உமாதேவியார் கலந்தருளிய மார்பினையுடையவர்; மழு வாயுதம் ஒன்றை வலப்புறத்தில் தாங்கிக் கங்கையைச் சடையில் மறையச் செய்தவர்; கடவூர் மயானத்தை விரும்பியவர்; சிவந்த கண்களையுடைய வெண்ணிறமாகிய இடபத்தை யூர்ந்து, தம்மை வழிபடுவார்க்குச் செல்வம் உண்டாகும்படி எழுந்தருளி வருவார். அழகிய கையில் தாங்கப்பட்ட மான் கன்றினையுடையவர்; இத்தகைய பெருமைகளையுடைய அவரே எமது பெருமானாகிய கடவுளாவார். 2

இணையற்ற இடபத்தைப் பொருந்துமாறு ஊர்ந்து மழு ஒன்றினைத் தாங்கிப் புறங்காட்டினை உறைவிடமாகக் கொண்ட வர்; கடவூர் மயானத்தை விரும்பினவர். பாட்டினது இசையினைத் தம்மிடத்துக்கொண்ட கருவிகளாகிய வாத்திய விசேடங்கள் எல்லாவற்றையும் பயில்கின்றவர்; ஆடுகின்ற பாம்பினையுடையவர்; இத்தகைய பெருமைகளையுடைய அவரே எமது பெருமானாகிய கடவுளாவார். 3

கையிறையில் நிலைபெற்று விளங்குகின்ற வளையினையுடைய வராகிய இளமை தங்கிய உமாதேவியாரை ஒருபாகத்தில் உடைய வர்; வேதங்கள் நின்று விளங்குகின்ற திருவார்த்தையை உடைய வர்; மயக்க அறிவு இல்லாதவரது மனத்தில் எழுந்தருளியவர்; கருநிறம் பொருந்தி விளங்குகின்ற சோலைகள் சூழ்ந்த கடவூர் மயானத்தை விரும்பினவர்; பிறைச் சந்திரன் தங்கி விளங்கும் சடையினையுடையவர்; இத்தகைய பெருமைகளையுடைய அவரே எமது பெருமானாகிய கடவுளாவார். 4

வெள்ளை எருத்தின் மிசையார்; விரிதோடு ஒரு
[காதிலங்கத்
துள்ளும் இளமான் மறியார்; சுடர் பொற்சடைகள்
[துலங்க
கள்ளம் நகுவெள் தலையார்; கடவூர் மயானம்
[அமர்ந்தார்;
பிள்ளைமதியம் உடையார்; அவர் எம்பெருமானடிகளே.

பொன்தாது உதிரும் மணங்கொள் புனை பூங்கொன்றை
[புனைந்தார்;
ஒன்று வெள்ளேறு உயர்த்தது உடையார்; அதுவே ஊர்
[வார்;
கன்று இனம் சூழ்புறவில் கடவூர் மயானம் அமர்ந்தார்;
பின்தாழ் சடையார் ஒருவர்; அவர் எம்பெருமானடிகளே.

பாசமான களைவார்; பரிவார்க்கு அமுதம் அனையார்,
ஆசைதீரக் கொடுப்பார்; அலங்கல் விடைமேல் வருவார்;
காசை மலர்போல் மிடற்றார்; கடவூர் மயானம் அமர்ந்தார்;
பேசவருவார் ஒருவர்; அவர் எம்பெருமான் அடிகளே, 7

செற்ற அரக்கன் அலறத்திகழ் சேவடி மெல்விரலால்
கற்குன்று அடர்த்த பெருமான்; கடவூர் மயானம்
[அமர்ந்தார்;
மற்றொன்று இணையில் வலியமாசில் வெள்ளி மலைபோல்
பெற்றம் ஒன்று ஏறி வருவார்; அவர் எம்பெருமானடி
[களே, 8

வெண்ணிறமாகிய இடபத்தின்மேல் எழுந்தருளுபவர்; ஒளியைப் பெருக்குகின்ற தோட்டினையணிந்த இடக்காதின் பக்கத்திலே தங்குமாறு துள்ளிக்குதிக்கின்ற இளமை தங்கிய மான் கன்றினையுடையவர்; ஒளிவிடுகின்ற பொன்னிறமாகிய சடைகள் விளங்க அவற்றின்மீது கள்ளத் தன்மை வாய்ந்த நகு வெண் தலையை உடையவர்; திருக்கடவூர் மயானத்தை விரும்பினவர்; சடையில் இளம் பிறையை உடையவர்; இத்தகைய பெருமைகளையுடைய அவரே எமது பெருமானாகிய கடவுளாவார். 5

பொன்னிறமாகிய மகரந்தம் சிந்துகின்ற வாசனையைக் கொண்ட அழகிய பொலிவையுடைய கொன்றை மலர் மாலையை அணிந்தவர்; கொடியாக உயர்த்திய நிகரற்ற வெள்ளிய இடபத்தை உடையவர்; அதனையே வாகனமாகவும் ஊர்ந்தருளுவார்; கன்றுகளையுடைய பசுக்கூட்டங்கள் சூழ்ந்த முல்லை நிலத்தில் உள்ள திருக்கடவூர் மயானத்தை விரும்பினவர்; பின்னே தொங்குகின்ற சடையை உடையவராகிய ஒப்பற்றவர்; இத்தகைய பெருமைகளையுடைய அவரே எமது பெருமானாகிய கடவுளாவார். 6

(அடியவரது) வினைப் பாசங்களைப் பறித்தருள்பவர்; அன்பு செய்பவர்கட்கு அமிர்தத்தை ஒத்தவர்; தம்மை வழிபடுவோரது ஆசையடக்கும்படி செய்தருள்பவர்; அசைந்து செல்கின்ற இடபத்தின்மேல் எழுந்தருள்பவர்; காயாம்பூவினைப் போன்ற கரிய கண்டத்தை உடையவர்; திருக்கடவூர் மயானத்தை விரும்பினவர்; யாவரும் பரவுமாறு வருபவராகிய ஒப்பற்றவர்; இத்தகைய பெருமைகளை உடைய அவரே எமது கடவுளாவார். 7

சினங்கொண்ட அரக்கனாகிய இராவணன் அலறியழும்படி விளங்குகின்ற திருவடியின் மெல்லிய திருவிரலால் கற்களையுடைய கயிலாய மலையின்கீழ் நெருக்கி வருத்திய தலைவர்; கடவூர் மயானத்தை விரும்பினவர்; வேறொன்றும் நிகரில்லாத வலிதாகிய குற்றமற்ற வெள்ளி மலையைப்போன்ற இடபம் ஒன்றின்மீது ஏறிவருபவர்; இத்தகைய பெருமைகளையுடைய அவரே எமது பெருமானாகிய கடவுளாவார். 8

வரும் மாகரியினுரியார்; வளர்புன் சடையார்; விடையார்;
கருமான் உரிதோல் உடையார் ; கடவூர் மயானம்
[அமர்ந்தார் :
திருமாலொடு நான்முகனும் தேர்ந்தும் காணமுன்
[னொண்ணாப்
பெருமான் எனவும் வருவார் ; அவர் எம்பெருமான்
(அடிகளே. 9

தூயவிடைமேல் வருவார் ; துன்னாருடைய மதில்கள்
காயவேவச் செற்றார் ; கடவூர் மயானம் அமர்ந்தார் ;
தீயகருமம் சொல்லும் சிறுபுன்தேரர் அமணர்
பேய்பேயென்ன வருவார் ; அவர் எம்பெருமான் அடிகளே.
மரவம் பொழில் சூழ் கடவூர் மன்னும் மயானம் அமர்ந்த
அரவம் அசைத்த பெருமான் அகலம் அறியலாகப்
பரவும் முறையே பயிலும் பந்தன் செஞ்சொன் மாலை
இரவும் பகலும் பரவி நினைவார் வினைகள் இலரே. 11

திருச்சிற்றம்பலம்

எதிர்த்து வந்த பெரிய யானைத்தோலை உடையவர் . வளர்ந்த புல்லிய சடையை உடையவர்; இடபத்தை உடையவர்; கரிய மானினது உரிக்கப்பட்ட தோலையுடையவர்; திருக்கடவூர் மயானத்தை விரும்பினவர்; திருமாலும் பிரமனும் முன்பு தேடியுங் காண முடியாத இறைவன் என்று சொல்லவும்படுவர்; இத்தகைய பெருமைகளை உடைய அவரே எமது பெருமானாகிய கடவுளாவார். 9

புனிதமாகிய இடபத்தின்மீது ஊர்ந்து வருபவர்; பகைவருடைய திரிபுரங்கள் எரிந்தொழியக் கோபித்தவர்: திருக்கடவூர் மயானத்தை விரும்பினவர்; தீய காரியங்களை நல்லனவாகச் சொல்லுகின்ற அற்பத் தன்மை வாய்ந்த புல்லிய புத்தரும் சமணரும் பேய் பேய் என்று இகழுமாறு எழுந்தருள்பவர்; இத்தகைய பெருமைகளை உடைய அவரே எமது பெருமானாகிய கடவுளாவார். 10

[திருக்கடவூர் மயானம் என்னும் இத்தலம் மாயவரம் தரங்கம்பாடி இருப்புப் பாதையில் உள்ள திருக்கடவூர் இரயில்வே ஸ்டேஷனில் இருந்து 1½ மைல் தூரத்தில் உள்ளது.]

# 14. திருநாவுக்கரசு சுவாமிகள்

## கோயிற்றிருப்பதிகம்

நான்காந் திருமுறை சிவனுருவம்

திருச்சிற்றம்பலம்.

பாளை உடை கமுகு ஓங்கிப், பன்மாடம் நெருங்கி, எங்கும்
வாளை உடைபுனல்வந்து எறிவாழ் வயல் தில்லை தன்னுள்,
ஆள உடைக்கழல் சிற்றம்பலத்தான் ஆடல் கண்டால்,
பீளை உடை கண்களால் பின்னைப் பேய்த்தொண்டர்
[காண்பது என்னே ? 1

பொருவிடை ஒன்று உடைப்புண்ணியமூர்த்தி, புலி
[அதளன்,
உரு உடை அம்மலை மங்கை மணாளன், உலகுக்கெல்லாம்
திருவுடையந்தணர் வாழ்கின்ற தில்லைச் சிற்றம்பலவன்,
திருவடியைக்கண்ட கண்கொண்டு மற்று இனிக்காண்ப
[தென்னே ? 2

தொடுத்த மலரொடு தூபமும் சாந்தும் கொண்டு
[எப்பொழுதும்
அடுத்து வணங்கும் அயன் ஒடு மாலுக்கும் காண்பு
[அரியான்,
பொடிக்கொண்டு அணிந்து பொன் ஆகிய தில்லைச்
[சிற்றம்பலவன்,
உடுத்த துகில் கண்ட கண்கொண்டு மற்று இனிக் காண்ப
[தென்னே ? 3

வைச்ச பொருள் நமக்காகும் என்றுஎண்ணி, 'நமச்சிவாய'
அச்சமொழிந்தேன் ; அணிதில்லை அம்பலத்து ஆடுகின்ற
பிச்சன், பிறப்புஇலி, பேர்நந்தி, உந்தியின் மேல் அசைத்த
கச்சின் அழகு கண்டால், பின்னைக் கண்கொண்டு காண்ப
[தென்னே ? 4

## 14. திருநாவுக்கரசு சுவாமிகள்

### கோயிற்றிருப்பதிகம்

நான்காந் திருமுறை சிவனுருவம்

பாளைகளை உடைய கமுகு மரங்கள் உயர்ந்து எவ்விடத்தும் பலமாடங்கள் மிகுந்து வாளை மீன்கள் தன்னிடத்தில் சஞ்சரிக்கப் பெற்ற நீரானது வந்து அலை வீசுகின்ற வளம்பொருந்திய வயல்களையுடைய சிதம்பரத் தலத்தில் உயிர்களை ஆளும்பொருட்டுத் திருவடியினைக் கொண்டு சிற்சபையில் எழுந்தருளிய சிவபெருமானது திருக்கூத்தைத் தெரிசித்தால் பேய்த் தன்மை வாய்ந்த திருத்தொண்டர் பீளையை உடைய கண்களைக்கொண்டு பிறகு காணத் தக்கது யாதுளது? 1

போர் செய்கின்ற இடபம் ஒன்றினையுடைய புண்ணியத்தையே வடிவமாக உடையவனும் புலித்தோலை ஆடையாக உடைய வனும் அழகினையுடைய அந்தப் பார்வதி தேவியாருக்கு நாயகனும் ஆகிய எல்லா உலகுக்கும் முத்திச் செல்வத்தையுடைய அந்தணர்கள் வாழ்கின்ற தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளிய இறைவனது திருவடிகளைத் தரிசித்த கண்களால் வேறு இனிமேல் காணத் தக்கது யாதுளது? 2

தொடுக்கப்பட்ட மலர் மாலைகளோடு நறும்புகையும் சந்தனமும் கைக்கொண்டு எப்போதும் நெருங்கி வழிபடுகின்ற பிரம விஷ்ணுக்களுக்கும் காணுதற்கு அரியவனும் விபூதியைத் திருமேனியில் அணிந்து பொன்னல் வேய்ந்து முற்றிய தில்லைத் திருச்சிற்றம்பலத்தை யுடையவனுமாகிய இறைவனது அணிந்த திருவாடையைத் தரிசித்த கண்களால் வேறு இனிமேல் காணத் தக்கது யாதுளது?

நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்து நமக்கு உற்ற விடத்துதவும் வைப்புப் பொருள் என்று நினைத்துப் பிறவிப்பயம் ஒழியப்பெற்றேன். அழகிய தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் திருக்கூத்தாடுகின்ற பித்தனும் பிறப்பில்லாதவனும் பெரிய நந்தி என்னும் திருநாமம் உடையவனுமாகிய இறைவன் திருவுந்தியின் மேல் கட்டிய கச்சையினது அழகினைப்பார்த்தால் பிறகு கண்களால் காணத்தக்கது யாதுளது? 4

செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச் சிற்றம்பலவன்,
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்து
[நிற்க
நெய்ஞ்ஞின்று எரியும் விளக்கொத்த நீலமணி மிடற்றான்,
கைஞ்ஞின்ற ஆடல் கண்டால் பின்னைக் கண் கொண்டு
[காண்ப தென்னே? 5

ஊனத்தை நீக்கி, உலகறிய என்னை ஆட்கொண்டவன்,
தேனொத்து எனக்கு இனியான், தில்லைச் சிற்றம்பலவன்,
[எம்கோன்,
வானத்தவர் உய்ய வல் நஞ்சை உண்ட கண்டத்து
[இலங்கும்
ஏனத்து எயிறு கண்டாற் பின்னைக் கண்கொண்டு
[காண்பதென்னே? 6

தெரித்த கணையால் திரிபுரம் மூன்றும் செந்தீயில் மூழ்க
எரித்த இறைவன், இமையவர் கோமான், இணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச் சிற்றம்பலவன்,
சிரித்த முகம் கண்ட கண்கொண்டு மற்று இனிக் காண்ப
[தென்னே?

சுற்றும் அமரர், சுரபதி, நின் திருப்பாதம் அல்லால்
பற்று ஒன்று இலோம் என்று அழைப்பப், பரவையுள்
[நஞ்சையுண்டான்,
செற்று அங்கு அநங்கனைத் தீவிழித்தான் தில்லை
[அம்பலவன்,
நெற்றியில் கண்கண்ட கண்கொண்டு மற்று இனிக்
காண்பதென்னே? 8

வயல்களில் தங்கிய கருங்குவளைகள் மலர்ந்து கமழ்கின்ற தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளியவனும் நெய் தங்கி எரிகின்ற விளக்கொளியைப் போன்ற நீலமணி போலும் திருக்கழுத்தினையுடையவனும் ஆகிய இறைவன், மைதீட்டிய அழகிய கண்களையுடைய உமாதேவியார் தரிசித்துக் களிகொண்டிருக்க இடக்கரத்தால் தூக்கிய திருவடியைக் காட்டிநிற்கின்ற திருநடனத்தைத் தெரிசித்தால், பிறகு கண்களால் காணத்தக்கது யாதிருக்கின்றது? 5

எனக்கு உள்ளதாகிய குறைபாடு நீங்கும்படி செய்து, உலகினர் யாவரும் அறியும்படி ஒன்றுக்கும் பற்றாத எளியேனை ஆட்கொண்டருளியவனும், தேன் போன்று அடியேனுக்கு இன்பத்தைத் தருபவனும், தில்லைச்சிற்றம்பலத்தில் எழுந்தருளியவனும் எமது தலைவனும் ஆகிய இறைவன் விண்ணுலகத்தவர் பிழைக்குமாறு கொடிய விடத்தை உண்டருளிய திருநீலகண்டத்தில் விளங்குகின்ற பன்றிக் கொம்பினைத் தரிசித்தால், பிறகு கண்களால் காணத்தக்கது யாதிருக்கின்றது? 6

தேர்ந்தெடுத்த அம்பினால் வானிலே திரியாநின்ற மூன்று புரங்களையும் செந்நிறமுள்ள தீயில் மூழ்குமாறு எரித்தருளிய தலைவனும், தேவர்கள் பெருமானும், தம் இரண்டு சேவடிகளையும் தாங்கிய மனத்தினை உடைய அடியவர் வாழ்கின்ற தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளியவனும் ஆகிய இறைவனது புன்னகைதவழும் திருமுகத்தைத் தரிசித்த கண்களால் பிறகு காணத்தக்கது யாதிருக்கின்றது? 7

நாற்புறமுஞ் சூழ்ந்த தேவர்களும் தேவர்கள் தலைவனாகிய இந்திரனும் தேவரீரது திருவடியை அல்லாமல் பிறிதொரு துணை உடையோம் அல்லோம் என்று முறையிட்டழைக்கக், கடலில் எழுந்த நஞ்சை உண்டருளியவனும் முன்பு திருக்கயிலாயத்தில் மன்மதன் அழியும்படி தீக்கண்ணைத் திறந்தருளியவனும் தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளியவனுமாகிய இறைவனது நெற்றிக் கண்ணைத் தரிசித்த கண்களால் பிறகு காணத்தக்கது யாதிருக்கின்றது? 8

சித்தத்து எழுந்த செழுங்கமலத் தன்ன சேவடிகள்
வைத்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச் சிற்றம்பலவன்,
முத்தும் வயிரமும் மாணிக்கம் தன்னுள் விளங்கியது
ஊமத்த மலர் கண்ட கண்கொண்டு மற்று இனிக்
[காண்பதென்னே ? 9

தருக்கு மிகுத்துத் தன் தோள் வலி உன்னித், தடவரையை
வரைக்கைகளால் எடுத்து ஆர்ப்ப, மங்கைமகள் கோன்
[சிரித்து
அரக்கன் மணிமுடி பத்தும் மணிதில்லை அம்பலவன்
நெருக்கி மிதித்த விரல்கண்ட கண்கொண்டு காண்ப
[தென்னே ? 10

திருச்சிற்றம்பலம்

அன்பரது உள்ளத்தில் பூத்த செழுவிய தாமரைப் பூவினை யொத்த செவ்விய திருவடிகளை எழுந்தருளச் செய்த மனத்தினை யுடையவர்கள் வாழ்கின்ற தில்லைத்திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளிய இறைவனது முத்தும் வயிரமும் ஆகிய இவை மாணிக்கத்தினிடத்தில் விளங்கினால் ஒத்த ஊமத்தமலரினைத்தரிசித்த கண்களால் மேல் வேறு காணத்தக்கது யாதிருக்கின்றது? 9

செருக்குமிகுந்து தனது புயவலியை அதிகமாக நினைத்துப் பெரிய திருக்கைலாயமலையை மலை போன்ற திண்ணியகைகளால் பெயர்த்தெடுத்து ஆரவாரஞ் செய்யப் பார்வதிக்கு நாயகனாகிய அழகிய தில்லைத் திருச்சிற்றம்பலவன் இகழ்ந்து நகைத்து அவ்விராவணனது கிரீடம் அணிந்த தலைகள் பத்தையும் மலையின் கீழ் அழுத்தி மிதித்தருளிய திருவிரல்களைத் தரிசித்த கண்களால் பிறகு காணத்தக்கது யாதிருக்கின்றது? 10

[கோயில் என்பது சிதம்பரம். இது சிதம்பரம் இரயில்வே ஸ்டேஷனில் இருந்து வடமேற்கில் சுமார் ஒரு மைல் தூரத்தில் உள்ளது. நடராஜப்பெருமான் திருக்கூத்தியற்றும் பெருஞ் சிறப்பினையுடையது.]

## 15. திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருப்பூவணம்

ஆறாந் திருமுறை                    சிவனுருவம்

திருச்சிற்றம்பலம்

வடிவு ஏறு திரிசூலம் தோன்றும் தோன்றும் ;
வளர்சடைமேல் இளமதியம் தோன்றும் தோன்றும் ;
கடிஏறு கமழ் கொன்றைக் கண்ணி தோன்றும் ;
காதில் வெண்குழைதோடு கலந்து தோன்றும் ;
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும் ;
எழில் திகழும் திருமுடியும் இலங்கித் தோன்றும் ;
பொடி ஏறு திருமேனி பொலிந்து தோன்றும் ;
பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார்க்கே. 1

ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்றும் ;
அடியவர்கட்கு ஆர் அமுதம் ஆகித்தோன்றும் ;
ஊண் ஆகி ஊர் திரிவான் ஆகித்தோன்றும் ;
ஒற்றை வெண்பிறை தோன்றும் ; பற்றார் தம்மேல்
சேண் நாகவரை வில்லால் எரித்தல் தோன்றும் ;
செத்தவர் தம் எலும்பினால் செறியச் செய்த
பூண் நாணும் அரைநாணும் பொலிந்து தோன்றும் ;
பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார்க்கே. 2

கல்லாலின் நீழல் கலந்து தோன்றும் ;
கவின் மறையோர் நால்வர்க்கு நெறிகள் அன்று
சொல்லாகச் சொல்லியவா தோன்றும் தோன்றும் ;
சூழரவும் மான்மறியும் தோன்றும் தோன்றும் ;
அல்லாத காலனை முன் அடர்த்தல் தோன்றும் ;
ஐவகையால் நினைவார்பால் அமர்ந்து தோன்றும் ;
பொல்லாத புலால் எலும்பு பூணாய்த் தோன்றும் ;
பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார்க்கே. 3

# 15. திருநாவுக்கரசு சுவாமிகள்

## திருப்பூவணம்

ஆறாந் திருமுறை சிவனுருவம்

சோலைகள் சூழ்ந்த திருப்பூவணத்தில் எழுந்தருளிய எமது பரிசுத்தராகிய சிவபெருமானுக்கு அழகு பொருந்திய மூவிலைச் சூலம் தோன்றா நிற்கும்; நீண்ட சடையின் மேல் இளம்பிறை தோன்றா நிற்கும்; ஒளி மிகுந்த மணங்கமழ்கின்ற கொன்றை மலர்மாலை தோன்றா நிற்கும்; திருக்காதுகளில் வெண்ணிறமாகிய சங்கக்குழையும் தோடும் வலப்புறத்தும் இடப்புறத்துஞ் சேர்ந்து தோன்றா நிற்கும்; இடிபோற் பிளிறுதல் உடைய யானைத் தோலாகிய போர்வை தோன்றாநிற்கும்; அழகுமிகுந்து விளங்கும் திருமுடியும் விளங்கித் தோன்றாநிற்கும்; விபூதி பூசப்பெற்ற திருமேனியானது விளங்கித் தோன்றாநிற்கும். 1

சோலைகள் சூழ்ந்த திருப்பூவணத்தில் எழுந்தருளிய எமது பரிசுத்தராகிய சிவபெருமானுக்கு ஆணுருவாயிருந்தே அதனோடு பெண்ணுருவும் ஆகிய திருவுருவந் தோன்ற நிற்கும்; தொண்டர்களுக்குக் கிடைத்தற்கரிய அமுதமாகித் தோன்றாநிற்கும்; பலியுணவின் பொருட்டாக ஊர்தோறும் திரிபவனாகித் தோன்றா நிற்கும்; ஒன்றாகிய கலையை உடைய வெண்ணிறத்தையுடைய பிறைச்சந்திரன் தோன்றாநிற்கும்; பகைவராகிய திரிபுரத்தவரை வானமளாவிய மேருமலையாகிய வில்லினால் எரி செய்தமை தோன்றா நிற்கும்; இறந்தோரது எலும்பினால்பொருந்தக் கட்டிய தரிக்கும் மாலைகளும் அரைஞாணும் விளங்கித் தோன்றாநிற்கும்.

சோலைகள் சூழ்ந்த திருப்பூவணத்தில் எழுந்தருளிய எமது பரிசுத்தராகிய சிவபெருமானுக்குக் கல்லால மரத்தின் நிழலில் பொருந்தித் தோன்றாநிற்கும்; சிவப்பொலிவுவாய்ந்த பிரமபுத்திரர் நால்வர்க்கும் அந்நாளில் ஞான நெறிகளைக் கட்டுரைகளாக உணர்த்தி யருளிய விதம் மிகவுந் தோன்றும்; சுற்றியபாம்புகளும் மான் கன்றும் தோன்றா நிற்கும்; கொடிய இயமனை முன்பு வென்றமை தோன்றா நிற்கும். நினைக்கின்ற அன்பர்களிடத்தில் பஞ்சகிருத்திய மூர்த்திகளாய் விருப்பத்தோடு தோன்றாநிற்கும்; கொடிய ஊன் தங்கிய எலும்புகள் ஆபரணமாகத் தோன்றா நிற்கும். 3

படை மலிந்த மழுவாளும் மானும் தோன்றும் ;
பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும் ;
நடைமலிந்த விடையோடு கொடியும் தோன்றும் ;
நான்மறையின் ஒலி தோன்றும் நயனம் தோன்றும்
உடை மலிந்த கோவணமும் கீளும் தோன்றும் ;
ஊரல் வெண்சிரமாலை உலாவித் தோன்றும் ;
புடை மலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும் ;
பொழில் திகழும் பூவணத் தெம்புனிதனார்க்கே

மயலாகும் தன்னடியார்க் கருளும் தோன்றும் ;
மாசிலாப் புன்சடைமேல் மதியம் தோன்றும் ;
இயல்பாக இடு பிச்சை ஏற்றல் தோன்றும் ;
இரும் கடல் நஞ்சுண்டு இருண்ட கண்டம்
[தோன்றும் ;
கயல்பாயக் கடும் கலுழிக் கங்கை நங்கை
ஆயிரம் மாமுகத்தினொடு வானில் தோன்றும் ;
புயல் பாயச்சடை விரித்த பொற்புத் தோன்றும் ;
பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார்க்கே. 5

பார் ஆழி வட்டத்தார் பரவி இட்ட
பல் மலரும் நறும்புகையும் பரந்து தோன்றும் ;
சீர் ஆழித் தாமரையின் மலர்கள் அன்ன
திருந்திய மாநிறத்த சேவடிகள் தோன்றும் ;
ஓராழித் தேருடைய, இலங்கை வேந்தன்
உடல் துணித்த இடர் பாவம் கெடுப்பித்து அன்று
போராழி முன்னீந்த பொற்புத் தோன்றும் ;
பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார்க்கே. 6

தன் அடியார்க்கு அருள் புரிந்த தகவு தோன்றும் ;
சதுர் முகனைத் தலையரிந்த தன்மை தோன்றும் ;
மின்னனைய நுண்ணிடையாள் பாகம் தோன்றும் ;

சோலைகள் சூழ்ந்த திருப்பூவணத்தில் எழுந்தருளிய எமது பரிசுத்தராகிய சிவபெருமானுக்கு படையிற் சிறந்த மழுப்படையும் மான்கன்றும் தோன்றுகிற்கும்; பன்னிரண்டு திருக்கண்களை யுடைய புதல்வர் தோன்று கிற்பர்; நடையிற் சிறந்த இடப வூர்தியோடு இடபக்கொடியும் தோன்றுகிற்கும்; நான்கு வேதங்களின் ஒலித்தல் தோன்று கிற்கும்; முக்கண்கள் தோன்று கிற்கும்; உடையிற் சிறந்த கோவணமும் கீளுந் தோன்று கிற்கும்; நகர்தலை யுடைய வெள்ளிய தலைமாலை அசைந்து தோன்று கிற்கும்: நாற்புறமும் மிகுந்து சூழ்ந்த பூதகணங்களின் விளக்கம் தோன்று கிற்கும். 4

சோலைகள் சூழ்ந்த திருப்பூவணத்தில் எழுந்தருளிய எமது பரிசுத்தராகிய சிவபெருமானுக்குப் பெருவிருப்புடைய தம் தொண்டர்கட்கு அருள் புரிதலும் தோன்று கிற்கும்; குற்றமற்ற புல்லிய சடைமேல் பிறைச்சந்திரன் தோன்றுகிற்கும்; ஒழுங்காக இடப் படுகின்ற பலியை ஏற்றுக் கொள்ளுதல் தோன்றுகிற்கும்; பெரிய கடலில் தோன்றிய விடத்தை உண்டு கறுத்த திருநீலக்கண்டம் தோன்றுகிற்கும்; கயல்மீன்கள் பாயாநிற்க மிகுந்த பெருக்கினை யுடைய கங்காதேவியார் பலபெரிய முகங்களோடு ஆகாயத்தில் தோன்றுகிற்கும்; அக்கங்கை வெள்ளம் பாயுமாறு சடையை விரித்த அழகு தோன்றுகிற்கும். 5

சோலைகள் சூழ்ந்த திருப்பூவணத்தில் எழுந்தருளிய எமது பரிசுத்தராகிய சிவபெருமானுக்குக் பெரிய கடல் சூழ்ந்த நில வுலகத்தார் வழிபட்டு அருச்சித்த பலவிதமாகிய மிகுந்த பூக்களும் மணங்கமழும் தூபமும் விரிந்து தோன்றுகிற்கும்: சிறந்த வட்டமாகிய செந்தாமரை மலர்களைப்போன்ற திருத்தமாகிய அழகிய நிறத்தை யுடைய செவ்விய திருவடிகள் தோன்றுகிற்கும்; ஒப்பற்ற சக்கரத்தையுடைய தேரைப்பெற்ற இலங்கைக்கரசனாகிய இராவணனது உடம்பைத்துணி விளக்கும் பாவத்தை ஒழித்து அந்நாளில் போர்புரிதற்கு ஏற்ற சக்கரத்தை முன் கொடுத்த வள்ளன்மை தோன்றுகிற்கும். 6

சோலைகள் சூழ்ந்த திருப்பூவணத்தில் எழுந்தருளிய எமது பரிசுத்தராகி சிவபெருமானுக்குத் தமது திருத்தொண்டர்க்குக் கருணைசெய்த மேன்மைக் குணம் தோன்றுகிற்கும்; பிரம

வேழத்தின் உரி விரும்பிப் போர்த்தல் தோன்றும் :
துன்னிய செஞ்சடைமேல் ஓர் புனலும் பாம்பும்
தூயமாமதியுடனே வைத்தல் தோன்றும் ;
பொன் அனைய திருமேனி பொலிந்து தோன்றும் ;
பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார்க்கே. 7

செறிகழலும் திருவடியும் தோன்றும் தோன்றும் ;
திரிபுரத்தை எரிசெய்த சிலையும் தோன்றும் ;
நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்றும் ;
நெற்றிமேல் கண் தோன்றும் பெற்றம் தோன்றும் ;
மறுபிறவி அறுத்தருளும் வகையும் தோன்றும் ;
மலைமகளும் சலமகளும் மலிந்து தோன்றும் ;
பொறி அரவும் இளமதியும் பொலிந்து தோன்றும் ;
பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார்க்கே. 8

அரும்பு ஓட்டும் முலை மடவாள் பாகம் தோன்றும் ;
அணிகிளரும் உரும் என்ன அடர்க்குங்கேழல்
மருப்பு ஓட்டும் மணிவயிரக் கோவை தோன்றும் ;
மணம்மலிந்த நடம்தோன்றும் மணியார் வைகைத்
திருக்கோட்டின் நின்றதோர் திறமும் தோன்றும் ;
செக்கர்வான் ஒளிமிக்குத் திகழ்ந்த சோதிப்
பொருப்பு ஓட்டி நின்ற திண் புயமும் தோன்றும் ;
பொழில்திகழும் பூவணத்து எம்புனிதனார்க்கே.

ஆங்கு அணைந்த சண்டிக்கும் அருளி அன்று
தன் முடிமேல் அலர்மாலை அளித்தல் தோன்றும் :
பாங்கு அணைந்து பணிசெய்வார்க்கு அருளி அன்று
பலபிறவி அறுத்தருளும் பரிசும்தோன்றும் ;
கோங்கு அணைந்த கூவிளமும் மதமத்தமும்

தேவனது தலையிலேயணிந்த வீரத் தன்மை தோன்றுகிற்கும் ; மின்னற் கொடி போன்ற நுட்பமாகிய இடையினையுடைய உமாதேவியாரது இடப்பாகம் தோன்றுகிற்கும் ; யானையினது தோலை விரும்பிப் போர்த்துக் கொள்ளுதல் தோன்றுகிற்கும் ; செறிந்த செந்நிறமாகிய சடையின் மீது ஒப்பற்ற கங்கையும் பாம்பும் புனிதமாகிய சிறந்த பிறையோடு வைத்தமை தோன்றுகிற்கும் ; பொன் போன்ற திருவுருவம் விளங்கித் தோன்றுகிற்கும். 7

சோலைகள் சூழ்ந்த திருப்பூவணத்தில் எழுந்தருளிய எமது பரிசுத்தராகிய சிவபெருமானுக்குப் பொருந்தக் கட்டிய வீரக்கழலும் அதனையணிந்த திருவடியும் தோன்றுகிற்கும் ; திரிபுரத்தை எரித்த வில்லுந் தோன்றுகிற்கும் ; செந்நெறியை விரிவாகக்கூறியருளிய செம்மைக் குணம் தோன்றுகிற்கும் ; நெற்றியின்மீது கண் தோன்றுகிற்கும் ; இடபம் தோன்றுகிற்கும் ; மேல் வரும் பிறவியை ஒழித்தருள் செய்கின்ற விதமும் தோன்றுகிற்கும் ; உமாதேவியாரும் கங்காதேவியாரும் தனித்தனி விளங்கித் தோன்றுகிற்பர் ; புள்ளிகளையுடைய பாம்பும் இளம்பிறையும் விளங்கித் தோன்றுகிற்கும். 8

சோலைகள் சூழ்ந்த திருப்பூவணத்தில் எழுந்தருளிய எமது பரிசுத்தராகிய சிவபெருமானுக்குத் தாமரை அரும்பினைத் தூரத்துகின்ற திருத்தனங்களையுடைய உமா தேவியாரது இடப்பாகந் தோன்றுகிற்கும் : அழகு மிகுந்த இடிபோல ஆரவாரிக்கின்ற பன்றியினது எகாம்பிறோடு ஒட்டிய வயிரமணியினது கண்டிகை தோன்றுகிற்கும் : வாசனைமிகுந்த திருநடனம் தோன்றுகிற்கும் ; மணிகளைக் கொழிக்கும் வைகையாற்றினது அழகிய கரையின்மீது எழுந்தருளியிருந்ததாகிய ஒப்பற்ற தன்மையும் தோன்றுகிற்கும் ; செவ்வானத்தினது ஒளிமிகுந்து விளங்கிய ஒளியையுடைய மேருமலையை இகழ்ந்து விளங்கிய வலிய திருத்தோள்களும் விளங்காநிற்கும். 9

சோலைகள் சூழ்ந்த திருப்பூவணத்தில் எழுந்தருளிய எமது பரிசுத்தராகிய சிவபெருமானுக்கு அவ்விடத்து வந்த சண்டேச்சுரநாயனார்க்கும் அருள்செய்து அந்நாளில் தமது திருமுடியில் அணிந்திருந்த கொன்றைமலர் மாலையைக் கொடுத்தருளியது

குழற்கு அணிந்த கொள்கையோடு கோலம்
தோன்றும்;
பூங்கணைவேள் உருவுஅழித்த பொற்புத் தோன்றும்:
பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார்க்கே. 10

ஆர்உருவ உள்குவார் உள்ளத்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்;
வார்உருவம் பூண்முலை நன்மங்கை தன்னை
மகிழ்ந்து ஒருபால்வைத்து உகந்த வடிவுதோன்றும்;
நீர்உருவம் கடல்இலங்கை அரக்கர்கோனை
நெறுநெறென அடர்த்திட்ட நிலையும் தோன்றும்:
போர்உருவம் கூற்றுஉதைத்த பொற்புத்தோன்றும்;
பொழில்திகழும் பூவணத்து எம்புனிதனார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

தோன்றுகிற்கும்; தமது பக்கத்தை அடைந்து திருத்தொண்டு செய்வார்க்குக் கருணை பாலித்துப் பண்டைக்காலந் தொட்டே பல பிறவிகளையும் ஒழித்தருளுகின்ற வள்ளல் தன்மையும் தோன்றுகிற்கும்; மணம்பொருந்திய வில்வமும் செழுவிய ஊமத்தமலரும் ஆகிய இலைகளைச் சடையில் தரித்த கொள்கையோடு கூடிய அழகு தோன்றுகிற்கும்; மலர்க்கணையை உடைய மாரவேளினது உருவத்தை எரித்தழித்த வெற்றி தோன்றுகிற்கும்.

சோலைகள் சூழ்ந்த திருப்பூவணத்தில் எழுந்தருளிய எமது பரிசுத்தராகிய சிவபெருமானுக்கு அருமையாகிய தன் உருவத்தை நினைப்பவரது மனத்திலுள்ளே அவர் நினைக்கும் அவ்வுருவமாகவே விளங்குகின்ற திருவருட்டிறமுந் தோன்றுகிற்கும்; கச்சணிந்த அழகினையுடைய பூண் அணிந்த திருத்தனங்கள் பொருந்திய நல்ல உமாதேவியாரை விரும்பி இடப்பக்கத்தில் எழுந்தருள்வித்து மகிழ்ந்த திருவுருவம் தோன்றுகிற்கும்; நீர் உருவமாகிய கடல்சூழ்ந்த இலங்கையையுடைய இராவணனை "நெறு நெறு" என்னும் ஒலியுண்டாமாறு அவனது தலை தோள் கரம் முதலியவற்றை நெருக்கியருளிய நிலைமையும் தோன்றுகிற்கும்; போர்க்கோலங்கொண்ட யமனை உதைத்தருளிய வெற்றிப்பொலிவு தோன்றுகிற்கும். 11

[திருப்பூவணம் என்னும் இத்தலம் பாண்டிநாட்டில் உள்ளது. மதுரை-மானாமதுரை இருப்புப் பாதையில் திருப்பூவணம் என்னும் ஸ்டேஷனிலிருந்து கால் மைல் தூரம் செல்ல வேண்டும்.]

# 16. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## திருக்கடவூர் மயானம்

ஏழாந் திருமுறை சிவவுருவம்

திருச்சிற்றம்பலம்.

மருஆர் கொன்றை மதிசூடி மாணிக்கத்தின் மலைபோல,
வருவார் விடைமேல் மாதோடு மகிழ்ந்து பூதப்படைசூழத்,
திருமால் பிரமன் இந்திரற்கும் தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமானடிகளே.

விண்ணோர் தலைவர் வெண்புரி நூல் மார்பர், வேத
[கீதத்தர்,
கண்ஆர் நுதலார், நகுதலையர், காலகாலர், கடவூரர்,
எண்ணார்புரம் மூன்று எரிசெய்த இறைவர், இமையோர்,
[ஒரு பாகம்
பெண் ஆணவர், மயானத்துப் பெரிய பெருமானடிகளே.

காயும் புலியின் அதள் உடையர், கண்டர், எண்தோள்
[கடவூரர்,
தாயும் தந்தை பல்லுயிர்க்கும், தாமே ஆயதலைவனார்,
பாயும் விடையொன்று அது ஏறி பலி தேர்ந்து உண்ணும்
[பரமேட்டி,
பேய்கள் வாழும் மயானத்துப் பெரிய பெருமானடிகளே.

நறைசேர் மலர் ஐங்கணையானை நயனத்தீயால் பொடி
[செய்த
இறையாராவர், எல்லார்க்கும் இல்லை என்னாது அருள்
செய்வார்,
பறைஆர் முழவம் பாட்டோடு பயிலும் தொண்டர் பயில்
[கடவூர்ப்
பிறையார் சடையார், மயானத்துப் பெரிய பெருமான்
[அடிகளே. 4

## 16. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### திருக்கடவூர் மயானம்

ஏழாந் திருமுறை சிவனுருவம்

வாசனை தங்கிய கொன்றை மலர் மாலையையும் பிறைச் சந்திரனையும் திருமுடியில் அணிந்து மாணிக்க மலைபோல் பூதப் படைகள் சூழ்ந்து வர விரும்பி உமாதேவியாரோடு இடபத்தை ஊர்ந்து வருகின்றவர்; திருமால் இந்திரன் நான்முகன் என்பவர்களுக்கும் தேவர்களுக்கும் நாகர்களுக்கும் அசுரர்களுக்கும் தலைவராகிய திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெரிய பெருமான் என்னும் இறைவரே யாவர். 1

தேவர்களுக்குத் தலைவரும், வெண்ணிறமாகிய முறுக்கப் பட்ட பூணூல் அணிந்த திருமார்பினையுடையவரும், வேதப் பாட்டினையுடையவரும், கண்ணொடுகூடிய திருநெற்றியினையுடையவரும், நரு வெண் தலையை உடையவரும், யமனுக்கு யமன் ஆனவரும், திருக்கடவூரில் எழுந்தருளியிருப்பவரும், பகைவருடைய முப்புரங்களையும் எரித்த தலைவரும், தேவரும், ஒரு பாகம் பெண்ணும் ஒரு பாகம் ஆணும் ஆகியவரும் திரு மயானத்தில் எழுந்தருளியிருக்கின்ற பெரிய பெருமான் என்னும் இறைவரே யாவர். 2

காய்தலையுடைய புலித்தோலை யுடையவரும், நீலகண்டத்தை உடையவரும், எட்டுத் திருத்தோள்களையுடைய திருக்கடவூரரும் எல்லா உயிர்களுக்கும் தாயும் தந்தையும் தாமே ஆகிய தலைவரும், பாய்தலையுடைய இடபம் ஒன்றின்மேல் ஏறிப் பலியேற்று உண்ணுகின்ற யாகங்களுக்குத் தலைவனும், பேய்கள் வசிக்கின்ற திரு மயானத்தில் எழுந்தருளிய பெரிய பெருமான் என்னும் இறைவரே யாவர். 3

தேன் துளிக்கின்ற ஐந்து விதமான மலர்களாகிய அம்புகளையுடைய மன்மதனைக் கண்ணில் இருந்து உண்டாகிய நெருப்பினால் சாம்பராக்கிய இறைவரும், யாவருக்கும் இல்லையென்னாமல் திருவருள் புரிபவரும், பறையையும் பொருந்திய முழவத்தையும் பாடல்களோடு பழகுகின்ற அடியார்கள் வாழ்கின்ற திருக்கடவூரில் எழுந்தருளிய பிறையை அணிந்த சடையை உடையவரும் திருமயானத்தில் எழுந்தருளிய பெரிய பெருமான் என்னும் இறைவரே யாவர். 4

கொத்துஆர் கொன்றை மதிசூடிக்கோள் நாகங்கள் பூணாக
மத்தயானை உரிபோர்த்து மருப்பும் ஆமைத்தாலியார்,
பத்திசெய்து பாரிடங்கள் பாடி ஆடப்பலிகொள்ளும்
பித்தர், கடவூர் மயானத்துப் பெரிய பெருமான் அடிகளே.

துணிவார்கீளும் கோவணமும் துதைந்து, சுடலைப் பொடி [யணிந்து
பணிமேல் இட்ட பாசுபதர், பஞ்சவடி மார்பினர், [கடவூர்த்
திணிவார் குழையார், புரமூன்றும் தீவாய்ப்படுத்த சேவக [னார்,
பிணிவார் சடையார், மயானத்துப் பெரிய பெருமான் அடிகளே. 6

கார்ஆர் கடலின் நஞ்சு உண்ட கண்டர், கடவூர் உறை [வாணர்,
தேரார் அரக்கன் போய் வீழ்ந்து சிதைய விரலால் [ஊன்றினார்,
ஊர்தான் ஆவது உலகேழும் உடையார்க்கு ஒற்றியூர் [ஆரூர்
பேராயிரவர், மயானத்துப் பெரிய பெருமான் அடிகளே. 7

வாடாமுலையாள் தன்னோடு மகிழ்ந்து, கானில் வேடுவ [னாயக
கோடுஆர் கேழல் பின்சென்று, குறுகி, விசயன் தவம் [அழித்து,
நாடாவண்ணம் செருச்செய்து, ஆவம் நாழி நிலை அருள் [செய்
பீடார் சடையார் மயானத்துப் பெரிய பெருமானடிகளே.

கொத்தாயிருக்கின்ற கொன்றை மலர் மாலையையும் பிறையையும் அணிந்து, கொலைத் தன்மை வாய்ந்த பாம்புகள் அணிகலனாகக்கொண்டு மதம் பொருந்திய யானையின் தோலைப்போர்த்து, பன்றியின் கோட்டினையும் ஆமை யோட்டினையும் தாலியாகத் தரித்தவரும் பூத கணங்கள் அன்பு கொண்டு பாடலும் ஆடலும் செய்யா நிற்கப் பலியினை யேற்கின்ற பித்தரும் திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருக்கும் பெரிய பெருமான் என்னும் இறைவரே யாவர். 5

துண்டிக்கப்பட்ட நீண்ட கீளினையும் கோவணத்தினையும் உடுத்திச் சுடலைப் பொடியைப் பூசிப் பாம்புகளை உடம்பில் தரித்த பாசுபதரும், பஞ்சவடியைத் தரித்த திருமார்பினையுடையவரும் திருக்கடவூரில் எழுந்தருளியுள்ள திட்பத்தையும் நீட்சியையும் உடைய குழையை அணிந்தவரும் முப்புரங்களையும் எரித்த வீரரும், கட்டிய நீண்ட சடையை உடையவரும் திருமயானத்தில் எழுந்தருளிய பெரியபெருமான் என்னும் இறைவரேயாவர். 6

கருநிறம் பொருந்திய கடலில் தோன்றிய நஞ்சினை உண்டருளிய திருநீலகண்டரும் திருக்கடவூரில் வாழ்கின்றவரும் தேரினையுடைய அரக்கனாகிய இராவணன் மலையின்கீழ் அகப்பட்டுப்போய் நசுக்குண்ணத் திருவிரலால் ஊன்றினவரும், ஆயிரம்பேர்களை உடையவரும் திருமயானத்தில் எழுந்தருளிய பெரிய பெருமான் என்னும் இறைவரேயாவர். ஏழுலகங்களையும் தம்மதாக உடைய இவருக்கு உறைவிடமாவது திருவொற்றியூரும் திருவாரூரும் ஆம். 7

வாட்டம் இல்லாத திருத்தனங்களை உடைய உமை யம்மையாரோடு மகிழ்ச்சியுற்றுக் காட்டகத்து வேட்டுவக் கோலத்தோடு வளைந்த பற்களையுடைய பன்றியின் பின்னேபோய் நெருங்கி அருச்சுனனது தவம் அழியுமாறு கெடுத்துத் தம்மை யறியாதபடி போர்புரிந்து அம்புப்புட்டிலினது நிலைத்தலை அருள்செய்த பெருமை வாய்ந்த சடையினை யுடையவர், திருமயானத்தில் எழுந்தருளிய பெரிய பெருமான் என்னும் இறைவரேயாவர்.

வேழம் உரிப்பர், மழுவாளர், வேள்வியழிப்பர், சிரம்
அறுப்பர்,
ஆழி அளிப்பர் அரிதனக்கு, ஆன் அஞ்சு உகப்பர், அறம்
(உரைப்பர்,
ஏழை தலைவர், கடவூரில் இறைவர், சிறுமான் மறிக்கையர்,
பேழைச் சடையர், மயானத்துப் பெரிய பெருமா
[னடிகளே. 9

மாடம் மல்கு கடவூரின் மறையோர் ஏத்தும் மயானத்துப்
பீடைதீர அடியாருக்கு அருளும் பெருமான் அடிகள்
நாடி நாவல் ஆரூரன் நம்பி சொன்ன நற்றமிழ்கள்
பாடும் அடியார் கேட்பார்மேல் பாவமான பறையுமே. 10

திருச்சிற்றம்பலம்.

யானையை உரித்தவரும் மழுப்படையை உடையவரும் தக்க யாகத்தை அழித்தவரும், தக்கனைத் தலையரிந்தவரும் விட்டுணு மூர்த்திக்குச் சக்கரப்படையினை உதவியவரும், பசுவினிடத்தில் உண்டாகும் பஞ்ச கவ்வியங்களை விரும்புபவரும் தருமங்களை உபதேசிப்பவரும், உமை யம்மையாருக்குத் தலைவரும் திருக்கடவூரில் எழுந்தருளிய இறைமைக்குணம் உடையவரும் சிறியமான் கன்றினை யேந்திய கையினை உடையவரும் பெரிய சடையினை யுடையவரும் திரு மயானத்தில் எழுந்தருளிய பெரியபெருமான் என்னும் இறைவரே யாவர். 9

மாடங்கள் நெருங்கிய திருக்கடவூரில் மறையவர்கள் போற்றுகின்ற திருமயானத்தில் எழுந்தருளித், தமது தொண்டர்களுக்குத் துன்பம் தொலையும்படி அருள் புரியும் பெரிய பெருமானாகிய இறைவரது சிறப்பினை யெல்லாம், திருநாவலூரிலே தோன்றிய நம்பியாரூரன் சொல்லிய நல்ல தமிழ்த் திருப்பாட்டுக்களைப்பாடும் அடியார் மேலும் கேட்பார் மேலும் பாவமாயினவெல்லாம் அழிந்தொழியும். 10

# 17. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

## திருவாழ்கொளி புத்தூர்

முதற்றிருமுறை திருவடிகள்

'பொடி உடைமார்பினர், போர்விடை ஏறிப், பூதகணம் [புடை சூழக்,
கொடி உடைஊர்திரிந்து, ஐயம் கொண்டு' பலபலகூறி,
வடிவுடைவாள் நெடுங்கண் உமைபாக மாயவன் வாழ் [கொளிபுத்தூர்க்
கடிகமழ்மாமலர் இட்டுக்கறை மிடற்றான் அடி [காண்போம் 1

'அரைகெழு கோவண ஆடையின்மேல் ஓர் ஆடு அரவம் [அசைத்து, ஐயம்
புரை கெழு வெண்தலையேந்திப் போர் விடையேறிப்புகழ,
வரைகெழு மங்கையது ஆகம் ஓர் பாகம் ஆயவன் வாழ் [கொளிபுத்தூர்
விரைகமழ் மாமலர் தூவி விரிசடையான் அடிசேர்வோம்.

பூண் நெடுநாகம் அசைத்து, அனல் ஆடிப், புன் தலை அம் [கையில் ஏந்தி,
ஊண் இடுபிச்சை ஊர் ஐயம் உண்டி என்று பலகூறி,
வாள் நெடும் கண் உமை மங்கை ஓர் பாகம் ஆயவன் [வாழ் கொளிபுத்தூர்
தாள் நெடுமாமலர் இட்டுத் தலைவனது தாள் நிழல் சார்வோம். 3

'தார் இடு கொன்றை, ஓர் வெண் மதி, கங்கை,
தாள் சடைமேல் அவை சூடி,
ஊர் இடு பிச்சை கொள் செல்வம் உண்டி'
என்று பல கூறி,

## 17. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

### திருவாழ்கொளிபுத்தூர்

முதற்றிருமுறை திருவடிகள்

திருவெண்ணீற்றைப் பூசிய மார்பினை உடையவராய், போர் செய்தலையுடைய இடபத்தையூர்ந்து, பூதகணங்கள் பக்கத்திற் சூழ்ந்து வரக் கொடிகளையுடைய ஊர்கள் தோறும் திரிந்து, பிச்சை யேற்றுப், பற்பல வார்த்தைகள் சொல்லி, அழகினையுடைய ஒளி பொருந்திய நீண்ட கண்களையுடைய உமையம்மையாரை இடப்பாகத்திற் பெற்றவராகிய விடக்கறையைக் கண்டத்தில் உடைய இறைவனது திருவடியைத் **திருவாழ் கொளி புத்தூரில்** வாசனைக் கமழ்கின்ற சிறந்த பூக்களைக் கொண்டு அருச்சித்துக் காணக்கண்டோம். 1

அரையிற் கட்டின, கோவண உடையின் மேல் ஒப்பற்ற ஆடுகின்ற பாம்பைக் கச்சையாகக் கட்டிப், பலியினை ஓட்டினையுடைய தசைக் கழிந்த வெண்டலையிற் கொண்டு, போர் செய்கின்ற இடபத்தில் ஏறி, யாவரும் புகழுமாறு உமையம்மையாரது உடம்பினை ஒரு பாகத்தில் ஆகியவனாகிய விரிந்த சடையையுடைய இறைவனது திருவடியைத் **திருவாழ் கொளி புத்தூரில்** வாசனை கமழ்கின்ற சிறந்த பூக்களை இறைத்து அருச்சித்து அடைவோம். 2

அணிகலனாக நீண்ட பாம்புகளை அணிந்து, அழலோடு ஆடி இழிவாகிய தலையை அழகிய கையில் தாங்கி, உணவு இடப்படும் பிச்சை, பெய்கின்ற ஐயம் ஆகாரம் எனப் பலவகையிற் கூறி; வாள் போன்ற நீண்ட கண்களையுடைய உமாதேவியார் ஒரு பாதியானவனான இறைவனுடைய திருவடிகளின் நீழலைத் **திருவாழ் கொளி புத்தூரில்** காம்புகளையுடைய நீண்ட சிறந்த பூக்களையிட்டு அருச்சித்துச் சார்பாகக் கொண்டு அடைவோம். 3

மாலையாகக் கட்டின கொன்றை மலர், சிறந்த வெண்பிறை, கங்கையாறு ஆகியவற்றை நீண்டு தொங்குகின்ற சடைமேல் தரித்து, ஊரொரிடு பிச்சையே கொள்ளத்தக்க செல்வமும் உணவும் ஆம் என்று பல வார்த்தைகளைச் சொல்லிக், கச்சணிந்த மெல்லிய

வார் இடு மெல் முலை மாது ஒரு பாகம்
ஆயவன் வாழ் கொளி புத்தூர்
கார் இடு மாமலர் ஆவிக் கறை மிடற்றான்
அடி காண்போம்.

'கனம் மலர் கொன்றை அலங்கல் இலங்க, காதில்
காதில் ஓர் வெண் குழை யோடு
புனம் மலர் மாலை புனைந்து, ஊர்
புகுதி' என்றே பல கூறி,
வன முலை மாமலை மங்கையோர் பாகம்
ஆயவன் வாழ் கொளிபுத்தூர்
இன மலர் ஏய்ந்தன தூவி,
எம்பெருமான் அடி சேர்வோம். 5

'அளைவளர் நாகம் அசைத்து, அனல் ஆடி, அலர் மிசை
[அந்தணன் உச்சி,
களைதலையில் பலி கொள்ளும் கருத்தனே கள்வனே
[என்று,
வளை ஒலி முன்கை மடந்தை ஓர் பாகம் ஆயவன் வாழ்
[கொளி புத்தூர்
தளை அவிழ் மாமலர் தூவித்தலைவன் தாளிணை
[சார்வோம். 6

'அடர் செவி வேழத்தின் ஈர் உரிபோர்த்து, அழிதலை
[அம்கையில் ஏந்தி,
உடல் இடு பிச்சையோடு ஐயம் உண்டி' என்று பலகூறி,
மடல் நெடு மாமலர்க் கண்ணியோர் பாகம் ஆயவன் வாழ்
[கொளிபுத்தூர்த்
தடமலர் ஆயின தூவித்தலைவன் தாள் நிழல் சார்வோம். 7

திருத்தனங்களையுடைய உமாதேவியாரை ஒரு பாகமாகக் கொண் டவரும், திருநீலகண்டத்தையுடைய இறைவனது திருவடிகளைத் **திருவாழ் கொளிபுத்தூரில்** இட்டத்தக்க சிறந்த பூக்களை மேகம் போலச் சொரிந்து அருச்சித்துத் துதிப்போம். 4

இருந்தவர்களால் தொடுக்கப்பட்ட கொன்றை மாலை விளங்கத் திருச்செவியில் ஒரு வெண்ணிறமாகிய சங்கக் குழை போல கொல்லையில் பூத்தனவாகிய மலர் மாலைகளையும் அணிந்து, பலியின் பொருட்டு ஊர்கள் தோறும் புகுவாய் என்று தன்னொடு சொல்லுதல் போன்ற பல வார்த்தைகளைச் சொல்லி, அழகிய திருத்தனங்களையுடைய சிறந்த இமயமலையின் புதல்வியாரை ஒரு பாகமாகக் கொண்டவனை எமது பெருமானது திருவடியைத் **திருவாழ் கொளிபுத்தூரில்** பொருந்துவனவாகிய கூட்டமாகிய மலர் களால் அருச்சித்துச் சேர்க்கடவோம். 5

புற்றில் வளர்கின்ற பாம்பினையணிந்து, தீயின்கண் ஆடித், திருமாலின் உந்திக் தாமரையில் தோன்றிய பிரமதேவரது மேல்தலையுள்ள அறுக்கப்பட்ட தலையினிடத்தில் பலியினைக்கொள் கின்ற கருத்தையுடையவனே! சோமனே! என்று கூறி வளைகள் ஒலிக்கின்ற முன்னங் கைகளையுடைய உமாதேவியாரை ஒரு பாகத்திற் கொண்டவனாகிய இறைவனுடைய இரண்டு திருவடி களையும் **திருவாழ் கொளிபுத்தூரில்** முறுக்கவிழ்கின்ற சிறந்த மலர் களைப் பெய்து அருச்சித்துச் சார்க்கடவோமாக. 6

நகம்போன்ற காதுகளையுடைய யானையினது உரித்த தோலைப் போர்த்து, அழிந்த தலையை அழகிய கையில் தாங்கி, உடம்புக் கிடுகின்ற பிச்சையுடனே, ஐயம், உண்டி, என்று பலப் படப் பேசி, இதழ்களையுடைய நீண்ட சிறந்த குவளை மலர் போன்ற கண்களையுடைய உமாதேவியாரை ஒரு பாகத்திற் கொண் டவனை இறைவனது திருவடி நிழலைத் **திருவாழ் கொளிபுத்தூரில்** நீர்ப் பூக்கள் ஆயினவற்றைத் தூவிச் சேர்க்கடவோமாக. 7

உயர் வரை ஒல்க எடுத்த அரக்கன் ஒளிர் கடகக்கை
[அடர்த்து
அயல் இடு பிச்சையோடு ஐயம் ஆர்தலை என்று, அடி
[போற்றி,
வயல் விரி நீலம் நெடும் கணிபாகம் ஆயவன் வாழ்கொளி
[புத்தூர்ச்
சயம் விரி மாமலர் தூவித் தாழ்சடையான் அடி.
[சார்வோம். 8

'கரியவன் நான்முகன் கை தொழுது ஏத்தக் காணலும்
[சாரலும் ஆகா
எரி உருவாகி ஊர் ஐயம் இடு பலி உண்ணி' என்று ஏத்தி,
வரி அரவு அல்குல் மடந்தை ஓர் பாகம் ஆயவன் வாழ்
[கொளிபுத்தூர்
விரி மலராயின தூவி விகிர்தன் சேவடி சேர்வோம். 9

'குண்டு அமணர் துவர்க் கூறைகள் மெய்யில்
கொள்கையினார் புறங்கூற
வெண்தலையில் பலி கொண்டல்
விரும்பினை' என்று விளம்பி
வண்டு அமர் பூங்குழல் மங்கையோர் பாக
மாயவன் வாழ் கொளிபுத்தூர்த்
தொண்டர்கள் மாமலர் தூவத்
தோன்ற நின்றான் அடிசேர்வோம். 10

கல் உயர் மாகடல் நின்று முழங்கும்
கரைபொரு காழிய மூதூர்
நல் உயர் நான்மறை நாவின்
நல் தமிழ் ஞான சம்பந்தன்
வல் உயர் சூலமும் வெண்மழுவாளும்
வல்லவன் வாழ் கொளிபுத்தூர்ச்
சொல்லிய பாடல்கள் வல்லார்
துயர் கெடுதல் எளிதாமே. 11

திருச்சிற்றம்பலம்.

உயர்ந்த திருக்கைலாயமலையை அசையும்படி பெயர்த்தெடுத்த இராவணனது ஒலிக்கின்ற கடக மணிந்த கைகளை நசுக்கி அப்பவர் இடுகின்ற பிச்சையுடனே பலியை உண்ணுகின்றவரே என்று பாடி அடியார்களை வணங்கி வயல்களில் மலர்கின்ற நீலமலர் போன்ற நீண்ட கண்களையுடைய இறைவியைச் செம்பாதியாகக் கொண்டவருமாகிய தாழ்ந்த சடையை உடைய இறைவனது திருவடிகளை திருவாழ் கொளிபுத்தூரில் கூட்டமாக மலர்கின்ற சிறந்த பூக்களை இறைத்துச் சாரக் கடவோம். 8

கருநிறத்தையுடைய திருமாலும் நான்கு முகங்களையுடைய பிரமனும் வணங்கித் துதிக்கவும் காண்பதற்கும் நெருங்குதற்கும் ஒண்ணாத நெருப்புமலை உருவமாகி மடவார் இடுகின்ற ஐயத்தையும் பலியையும் உண்பவரே என்று துதித்து, வரிகளையுடைய பாம்பின் படம் போலும் அல்குலையுடைய இறைவியை ஒரு பாகமாகக் கொண்டவருமாகிய இறைவனது சிவந்த திருவடிகளைத், திருவாழ் கொளிபுத்தூரில் மலர்ந்த மலர்களைத் தூவிச் சேரக்கடவோம். 9

இழிவாயுள்ள சமணர்களும் சாயவுடைகளை உடம்பிற்போர்ப்பவராகிய புத்தர்களும் இகழ்ந்துரைக்க வெள்ளிய தலையோட்டில் பலி கொள்ளுதலை விரும்பினீர் என்று கூறி வண்டுகள் விரும்பிச் சேர்கின்ற நறுமணமாகிய பொலிவினைப் பெற்ற கூந்தலையுடைய உமாதேவியாரை இடப்பாகத்தில் உடையவனாகித் திருத்தொண்டர்கள் சிறந்த பூக்களை இறைத்து அருச்சிக்க வெளிப்படுகின்ற இறைவனது திருவடிகளைத் திருவாழ் கொளிபுத்தூரில் சேரக்கடவோம். 10

மலைகள் உயர்ந்த பெரிய கடல் பொருந்தி ஒலிக்கின்ற கரையைப் பொருகின்ற சீகாழியென்னும் அழகிய பழைய ஊரில் அவதரித்த நல்ல உயர்ந்த நான்கு வேதங்களும் பொருந்துகின்ற நாவினையுடைய நல்ல தமிழில் வல்லவனாகிய திருஞானசம்பந்தன் வலிய உயர்ந்த சூலத்தையும் வெண்ணிறமாகிய மழுப்படையையும் வல்லவனாகிய இறைவனது திருவாழ் கொளிபுத்தூரைப் புகழ்ந்து பாடிய திருப்பாடல்களைச் சொல்ல வல்லவர்களது துன்பம் கெட்டொழிதல் எளிதாகும். 11

---

[இத்தலம் வைத்தீஸ்வரன் கோயில் புகை வண்டி நிலையத்தில் இருந்து மேற்கே ஐந்துமைல் தூரத்தில் உள்ளது.]

## 18. திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருவதிகை வீரட்டானம்

ஆறுந் திருமுறை திருவடித் திருத்தாண்டகம் திருவடிகள்

திருச்சிற்றம்பலம்.

அரவணையான் சிந்தித்து அரற்றும் அடி ;
அருமறையான் சென்னிக்கு அணியாம் அடி ;
சரவணத்தான் கைதொழுது சாரும் அடி ;
சார்ந்தார் கட்கு எல்லாம் சரணும் அடி ;
பரவுவார் பாவம் பறைக்கும் அடி ;
பதினெண் கணங்களும் பாடும் அடி ;
விரவு நீர்த் தென் கெடிலம் நாடன் அடி ;
திருவீரட்டானத்து எம் செல்வன் அடி ; 1

கொடுவினையார் என்றும் குறுகா அடி ;
குறைந்து அடைந்தார் ஆழாமைக்காக்கும் அடி :
படு முழவம் பாணிப்பயிற்றும் அடி ;
பதைத்து எழுந்த வெம் கூற்றைப்பாய்ந்த அடி ;
கடு முரண் ஏறு ஊர்ந்தான் கழல் சேவடி ;
கடல் வையம் காப்பான் கருதும் அடி ;
நெடுமதியம் கண்ணி அணிந்தான் அடி ;
நிறை கெடில வீரட்டம் நீங்கா அடி. 2

வைது எழுவார் காமம் பொய் போகா அடி ;
வஞ்சவலைபாடு ஒன்று இல்லா அடி ;
கைதொழுது நாம் ஏத்திக் காணும் அடி ;
கணக்கு வழக்கைக் கடந்த அடி ;
நெய் தொழுது நாம் ஏத்தி ஆட்டும் அடி ;
நீள் விசும்பை ஊடறுத்து நின்ற அடி ;
தெய்வப்புனல் கெடில நாடன் அடி ;
திருவீரட்டானத்து எம்செல்வன் அடி.

## 18. திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருவதிகை வீரட்டானம்

### ஆறுந்திருமுறை திருவடித் திருத்தாண்டகம் திருவடிகள்

பாம்புப் பாயலையுடைய திருமால் தியானித்துக் கதறிப்பரவும் திருவடி; அரிய வேதங்களையுடைய பிரமனது தலைக்கு அழகு செய்கின்ற திருவடி; முருகக் கடவுள் கை தொழுது சேருகின்ற திருவடி; அடைந்தார்கட்கெல்லாம் அடைக்கலமாகின்ற திருவடி; வழிபடுகின்றவர்களது பாவத்தை ஒழித்தருளுகின்ற திருவடி; பதினெட்டு விதமாகிய கணத்தவர்களும் பாடித்துதிக்கின்ற திருவடி; திருந்த நீர்ப் பெருக்கினையுடைய தெற்கின் கண்ணதாகிய கெடில நதி சூழ்ந்த நாட்டினையுடையவனாகிய இறைவனது திருவடி; **திருவதிகை திருவீரட்டானத்தில்** எழுந்தருளிய எமது அழியாத மோட்சச் செல்வத்தையுடைய சிவனது திருவடி. 1

சீலிலையாளர்கள் எப்போதும் அணுகப்பெறாத திருவடி, வணங்கி அடைந்தவர்கள் நரகக்குழியில் அழுந்தா வண்ணம் காக்கின்ற திருவடி; ஊழியினைச் செய்கின்ற முழவவாத்தியத்தைக் கைத் தாளத்தோடு பயில்விக்கின்ற திருவடி; துடித்து எழுந்த கொடிய யமனை உதைத்தருளிய திருவடி; பெருவலியினையுடைய இடபத்தை ஊர்ந்தருளுகின்ற இறைவனது வீரக்கழலையணிந்த சிவந்த திருவடி; கடல் சூழ்ந்த உலகத்தைக் காத்தருள்கின்ற திருமால் எண்ணுகின்ற திருவடி; நீண்ட பிறையாகிய மாலையை அணிந்தவனது திருவடி; நீர் நிறைந்த **திருக்கெடில வீரட்டானத்தை** என்றும் விட்டு நீங்காத திருவடி. 2

இகழ்ந்தெழுகின்றவர்களது காமமும் பொய்யும் செல்லாத திருவடி; வஞ்சகமாகிய வலையில் படுதல் ஒரு சிறிதும் இல்லாத திருவடி; அடியோங்களாகிய நாங்கள் வணங்கிப் போற்றிக் காணப் பெறுகிற திருவடி; கணக்கு வழக்குகளைத் தாண்டின திருவடி; நாங்கள் வணங்கித் துதித்து பசு நெய்யால் ஆட்டுவிக்கின்ற திருவடி; நீண்ட ஆகாயத்தை ஊடுருவிச் சென்று நிலை பெற்ற திருவடி; தெய்வத்தன்மை பொருந்திய நீரையுடைய திருக்கெடில நாடனது திருவடி **திருவீரட்டானத்தில்** எழுந்தருளிய எமது செல்வனது திருவடி. 3

அரும்பித்த செய் ஞாயிறு ஏய்க்கும் அடி;
அழகு எழுதல் ஆகா அருள் சேவடி;
சுரும்பித்தவண் டினங்கள் சூழ்ந்த அடி;
சோமனையும் காலனையும் காய்ந்த அடி;
பெரும் பித்தர் கூடிப் பிதற்றும் அடி;
பிழைத்தார் பிழைப்பு அறிய வல்ல அடி;
திருந்து நீர்த்தென் கெடில நாடன் அடி;
திருவீரட்டானத்து எம் செல்வன் அடி. 4

ஒரு காலத்து ஒன்றாகி நின்ற அடி;
ஊழி தோறூழி உயர்ந்த அடி;
பொருகழலும் பல் சிலம்பும் ஆர்க்கும் அடி;
புகழ்வார் புகழ்தகையவல்ல அடி;
இரு நிலத்தார் இன்புற்று அங்கு ஏத்தும் அடி;
இன்புற்றார் இட்டபூ ஏறும் அடி;
திருவதிகைத் தென் கடில நாடன் அடி;
திருவீரட்டானத்து எம் செல்வன் அடி. 5

திருமகட்குச் செந்தாமரை யாம் அடி;
சிறந்தவர்க்குத் தேனாய் விளக்கும் அடி;
பொருளவர்க்குப் பொன்னுரையாய் நின்ற அடி;
புகழ்வார் புகழ் தகைய வல்ல அடி;
உரு இரண்டும் ஒன்றோடொன்று ஒவ்வா அடி;
உருவென்று உணரப்படாத அடி;
திருவதிகைத் தென் கெடில நாடன் அடி;
திருவீரட்டானத்து எம் செல்வன் அடி. 6

உரைமாலை எல்லாம் உடைய அடி;
உரையால் உணரப்படாத அடி;
வரை மாதை வாடாமை வைக்கும் அடி;
வானவர்கள் தாம் வணங்கி வாழ்த்தும் அடி;
அரைமாத்திரையில் அடங்கும் அடி;
அகலம் அளக்கிற் பார் இல்லா அடி;
கரைமா கலிக்கெடில நாடன் அடி;
கமழ் வீரட்டானக் காபாலி அடி. 7

உதித்தலையுடைய சிவந்த சூரியனை நிகர்க்கும் திருவடி; தமது
அழகினை எழுத வொண்ணாத அருண்மயமாகிய திருவடி; சுரும்
புகளோடு கூடிய வண்டுக் கூட்டங்கள் சூழப்பெற்ற திருவடி;
சந்திரனையும் யமனையும் கோபித்த திருவடி; பெரிய பித்தர்களா
கிய சிவனடியார்கள் ஒருங்கியைந்து தம்மனத்துக் கியைந்தவாறு
பலபடப் பேசுகின்ற திருவடி; குற்றஞ் செய்தவர்களது தவற்றினை
உணரவல்ல திருவடி; திருத்தமாகிய நீரையுடைய தெற்கின்
கண்ணதாகிய திருக்கெடில நாடனது திருவடி; **திருவீரட்டானத்தில்**
எழுந்தருளிய எமது செல்வனது திருவடி. 4

ஒரு காலத்தில் ஒரே பொருளாகி நிலைபெற்ற திருவடி;
ஊழிக்காலங்கள் தோறும் உயர்ந்து நின்ற திருவடி; வீரக்கழலும்
பல சிலம்புகளும் ஒலிக்கின்ற திருவடி; தம்மைப் புகழ்ந்தோரது
புகழினை மேம்படுத்தவல்ல திருவடி; பெரிய நிலவுலகத்தார்
மகிழ்ந்து போற்றுகின்ற திருவடி; மகிழ்ந்தவர்கள் சாத்தின மலர்
கள் ஏறப்பெற்ற திருவடி; திருவதிகையிற் செல்லும் தெற்கின்
கண்ணதாகிய கெடில நதியாயும் நாட்டினையுடையவன் திருவடி;
**திருவீரட்டானத்தில்** எழுந்தருளிய எமது செல்வன் திருவடி. 5

திருமகளுக்குச் செந்தாமரை மலராகின்ற திருவடி; மேலோர்
களுக்குத் தேனாய் விளைந்து தித்திக்கின்ற திருவடி; பொரு
ளுடையோர்க்கு மாற்றுயர்ந்த பொன்னின் உரைபோலச் சிறந்து
நிற்கின்ற திருவடி; புகழ்வோரது புகழினை மேம்படுத்துதற்கு
வல்லமையுள்ள திருவடி; ஆண் பெண் என்னும் இரண்டு உருவங்
களும் ஒன்றோடொன்று பொருந்தாத திருவடி; திருவுருவம்
என்று அறியப் பெறாத திருவடி; திருவதிகைத் திரு **வீரட்டானத்**
**தில்** எழுந்தருளிய எமது செல்வன் திருவடி. 6

சொல்மாலைகள் எல்லாவற்றையும் உடைய திருவடி; சொல்
லாமல் அறியப்பெறாத திருவடி; உமாதேவியாரை வாட்டமடை
யாமல் வைக்கின்ற திருவடி; தேவர்கள் வணங்கி வாழ்த்து
கின்ற திருவடி; அரைமாத்திரை யளவில் அடங்குகின்ற
திருவடி; வியாபகத்தை இவ்வளவென்று அளக்கவல்லவர்
கள் இல்லாத திருவடி; கரையினிடத்தில் மாமரங்களையுடைய
ஆர்க்கின்ற கெடில நாட்டினையுடையவன் திருவடி; நறுமணம்
வீசுகின்ற **திருவீரட்டானத்தில்** எழுந்தருளிய கபாலியாகிய இறைவ
னது திருவடி. 7

நறுமலராய் நாறு மலர்ச் சேவடி ;
நடுவாய் உலகம் நாடாய அடி ;
செறிகதிரும் திங்களுமாய் நின்ற அடி :
தீதிரளாய் உள்ளே திகழ்ந்த அடி ;
மறுமதியை மாசுகழுவும் அடி ;
மந்திரமும் தந்திரமும் மாய அடி ;
எறிகெடிலம் நாடர் பெருமான் அடி ;
திருவீரட்டானத்து எம் செல்வன் அடி. 8

அணியனவும் சேயனவும் அல்லா அடி ;
அடியார்கட்கு ஆர் அமுதம் ஆய அடி ;
பணிபவர்க்குப் பாங்காக வல்ல அடி ;
பற்றற்றார் பற்றும் பவள அடி ;
மணியடி பொன்னடி மாண்பாம் அடி ;
மருந்தாய்ப் பிணி தீர்க்க வல்ல அடி ;
தணிபாடு தண் கெடில நாடன் அடி ;
தகைசார் வீரட்டத் தலைவன் அடி. 9

அம்தாமரைப் போது அலர்ந்த அடி ;
அரக்கனையும் ஆற்றல் அழித்த அடி ;
முந்து ஆகி முன்னே முளைத்த அடி ;
முழங்கு அழலாய் நீண்ட எம்மூர்த்தி அடி ;
பந்தாடு மெல்விரலாள் பாகன் அடி ;
பவளம் தடவரையே போல்வான் அடி ;
வெந்தார் சுடலை நீறு ஆடும் அடி ;
வீரட்டம் காதல் விமலன் அடி. 10

திருச்சிற்றம்பலம்.

நறுவிய பூக்களாய் மணங் கமழ்கின்ற மலர் போன்ற சிவந்த திருவடி; உலக நடுவாயிருந்து எல்லா உலகங்களும் நாடுகளும் ஆகிய திருவடி; நிறைந்த கிரணங்களையுடைய சூரியனும் சந்திரனும் ஆகி நின்ற திருவடி; நெருப்புத் திரளாகி உள்ளே விளங்கின திருவடி; கறையோடு கூடிய சந்திரனை அழுக்கினை அகற்று கின்ற திருவடி; மந்திரங்களும் தந்திரங்களும் ஆகிய திருவடி; அலை வீசுகின்ற கெடில நதியை யுடைய நாட்டவர்களுக்குத் தலைவனது திருவடி; **திருவீரட்டானத்தில்** எழுந்தருளிய எமது செல்வன் திருவடி. 8

சமீபத்தில் உள்ளனவும் தூரத்தில் உள்ளனவும் அல்லாத திருவடி; திருத்தொண்டர்களுக்கு உண்ணுகின்ற அமுதமான திருவடி; வணங்குகின்றவர்களுக்கு உரிமையாகக்கூடிய திருவடி; எல்லாவிதமான பற்றுகளும் அற்றவர்கள் பற்றுகின்ற பவளம் போன்ற திருவடி; மணிபோன்ற திருவடி; பொன்போன்ற திருவடி; மாட்சிமையுடைய திருவடி; மருந்தாகி நோய்தீர்க்கும் வன்மையுடைய திருவடி; வெப்பம் தணிபடுதலையுடைய குளிர்ச்சி பொருந்திய கெடிலநாட்டை யுடையவன் திருவடி; பெருமை மிக்க **வீரட்டானத்தில்** எழுந்தருளிய இறைவன் திருவடி. 9

அழகிய தாமரை மலர் மலர்ந்தது போன்ற திருவடி; இராவணனையும் வலி கெடுத்த திருவடி; எல்லாவற்றிற்கும் முந்தினதாகி முன்னே தோன்றிய திருவடி; முழங்குகின்ற நெருப்புருவாய் எழுந்து நின்ற எமது மூர்த்தியின் திருவடி; பந்தாடுகின்ற மெல்லிய விரல்களையுடைய அம்பிகையினது பாகத்தையுடையவனது திருவடி; பெரிதாகிய பவள மலையையே நிகர்ப்பவரது திருவடி; வெந்தவரது சுடலைப் பொடியைத் தரிக் கின்ற திருவடி; **திருவீரட்டானத்தை** விரும்பி எழுந்தருளியிருக் கின்ற புனிதனாகிய இறைவன் திருவடி. 10

[திருவதிகை வீரட்டானம் என்னும் இத்தலம் பண்ணுருட்டி புகை வண்டி நிலயத்தில் இருந்து இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது.]

# 19. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## திருப்புன்கூர்

### திருவடிகள்

### ஏழாந்திருமுறை

திருச்சிற்றம்பலம்.

அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத,
அவனைக் காப்பது காரணமாக
வந்த காலன் தன் ஆருயிர் அதனை
வவ்வினாய்க்கு உன்றன் வண்மை கண்டு, அடியேன்
எந்தை நீ எனை நமன் தமர் நலியில்
இவன் மற்று என் அடியான் என விலக்கும்
சிந்தையால் வந்து உன் திருவடி அடைந்தேன் :
செழும் பொழில் திருப்புன்கூர் உளானே. 1

'வையகம் முற்றும் மாமழை மறந்து
வயலில் நீர் இலை மாநிலம் தருகோம்
உய்யக் கொள்க மற்று எங்களை' என்ன
ஒளி கொள் வெண்முகிலாய், பரந்து, எங்கும்
பெய்யும் மாமழைப் பெருவெள்ளம் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலி கொண்டருளும்
செய்கை கண்டு, நின் திருவடி அடைந்தேன் ;
செழும் பொழில் திருப்புன் கூர் உளானே ! 2

ஏதம் நல் நிலம் ஈரறு வேலி
ஏயர் கோன் உற்ற இரும்பிணி தவிர்த்துக்,
கோதனங்களின் பால் கறந்து ஆட்டக்,
கோலம் வெண்மணற் சிவன் தன் மேல் சென்ற
தாதை தாளற எறிந்த சண்டிக்கு உன்
சடைமிசை மலர் அருள் செயக்கண்டு,
பூத ஆளி நின் பொன்னடி அடைந்தேன் ;
பூம்பொழில் திருப்புன்கூர் உளானே ! 3

## 19. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### திருப்புன்கூர்

### திருவடிகள்

### ஏழாந்திருமுறை

செழுமையாகிய சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளியிருப்பவனே! அந்தணச் சிறுவனாகிய மார்க்கண்டன் தேவரீரைச் சரணடைய அவனைக் காப்பாற்றுதலைக் காரணமாகக் கொண்டு எதிர்த்துவந்த யமனது அரிய உயிரைக் கவர்ந்த தேவரீருக்குள்ள வல்லன்மையை அறிந்து அடியேனும் எமது பிதாவாகிய தேவரீர் என்னையும் எமதூதர் வருத்துவதாயின் 'இவனும் எனது அடியவன்' என்று விலக்கியருள்கின்ற எண்ணத்தால் வந்து தேவரீரது திருவடியைச் சேர்ந்தேன். 1

செழுமையாகிய சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளிய இறைவனே! உலகம் முழுவதும் சிறந்த மழை மறத்தலினால் வயலில் நீர் இல்லையாயிற்று. அதிக நிலங்கொடுப்போம் அடியோங்களை மழை பெய்வித்து உய்யக் கொண்டருள்க என்று வேண்டிக்கொள்ள ஒளியைக்கொண்ட வெண்ணிறமாகிய மேகங்களாகி எவ்விடத்தும் பரவிப் பெய்கின்ற பெரிய மழையினாலாகிய பெரிய வெள்ளத்தை ஒழித்து மறுபடியும் பன்னிரு வேலி நிலங்கொண்டருளிய திருவருட் செய்கையைப் பார்த்துத் தேவரீரது திருவடியைச் சேர்ந்தேன். 2

அழகினையுடைய சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளியவனே! நல்ல நிலம் பன்னிரண்டு வேலி கொடுத்த ஏயர்கோன் கலிக்காமநாயனார் எய்திய துன்பத்தைச் செய்யும் பெரிய நோயினைப் போக்கிப் பசுக்கூட்டங்களினது பாலைக் கறந்து திருமஞ்சனஞ் செய்ய அழகிய வெண்ணிறமாகிய மணலினால் செய்த சிவலிங்கத்தின் மேல் சிதைக்கும் பொருட்டுச் சென்ற பிதாவின் கால்கள் அறும்படி துணித்த சண்டேசுரநாயனாருக்குத் தேவரீரது சடையில் தரித்த கொன்றை மலர் மாலையை அருளியதைப் பார்த்துப் பூதநாதனே! தேவரீரது பொன்னடியை அடைக்கலமாக அடைந்தேன். 3

நல்தமிழ் வல்லஞான சம்பந்தன்,
நாவினுக்கரையன், நாளைப் போவானும்,
கற்றசூதன், நல்சாக்கியன், சிலந்தி,
கண்ணப்பன், கணம் புல்லன், என்று இவர்கள்
குற்றம் செய்யினும், குணம் எனக் கருதும்
கொள்கை கண்டு, நின் குரை கழல் அடைந்தேன்;
பொன்திரள் மணிக்கமலங்கள் மலரும்
பொய்கை சூழ்திருப்புன் கூர் உளானே! 4

கோலம் மால் வரை மத்தென நாட்டிக்,
கோள் அரவு சுற்றிக் கடைந்து எழுந்த
ஆலம் நஞ்சு கண்டு, அவர் மிக இரிய
அமரர்கட்கு அருள் புரிவது கருதி,
நீலமார் கடல் விடந்தனை உண்டு,
கண்டத்தே வைத்த பித்த! நீ செய்த
சீலம் கண்டு, நின் திருவடி அடைந்தேன்;
செழும் பொழில்திருப்புன் கூர் உளானே! 5

இயக்கர், கின்னரர், யமனொடு வருணர்,
இயங்கு தீ, வளி, ஞாயிறு, திங்கள்,
மயக்கமில் புலி, வானரம், நாகம்,
வசுக்கள், வானவர், தானவர் எல்லாம்
அயர்ப்பு ஒன்று இன்றி, நின் திருவடி அதனை
அர்ச்சித்தார் பெறும் ஆர் அருள் கண்டு,
திகைப்பு ஒன்று இன்றி நின் திருவடி அடைந்தேன்;
செழும் பொழில் திருப்புன் கூர் உளானே! 6

போர்த்த நீள் செவியாளர் அந்தணர்க்குப்
பொழில் கொள் ஆல் நிழல் கீழ் அறம் புரிந்து,
பார்த்தனுக்கு அன்று பாசுபதம் கொடுத்து
அருளினாய்; பண்டு பகீரதன் வேண்ட

பொற்றிரளும் மணிகளும் தாமரைகளும் பரந்து விளங்கும் தடாகங்கள் சூழப்பெற்ற திருப்புன்கூரில் எழுந்தருளிய பெருமானே! நல்ல தமிழ்ப் பாடலில் வன்மையுடைய திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், திருநாளைப் போவாரும், கற்றுவல்ல மூர்க்க நாயனாரும், நல்ல சாக்கிய நாயனாரும், சிலந்திப் பூச்சியும் கண்ணப்ப நாயனாரும், கணம் புல்லநாயனாரும் என்று கூறப் பெறும் இவர்கள் யாவரும் பலவகையான குற்றங்கள் செய்தாலும் அவற்றைக் குணமாக்கிக் கொண்டருளின தேவரீரது திருவருட் கொள்கையைப் பார்த்துத் தேவரீரது ஒலிக்கின்ற வீரக் கழலையணிந்த திருவடியை அடைக்கலமாக அடைந்தேன். 4

செழுமைதங்கிய சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளிய இறைவனே! அழகிய பெரிய மந்தர மலையை மத்தாக நிறுத்தி அம்மலை மத்திலே துன்பஞ் செய்கின்ற வாசுகியாகிய பாம்பினைத் தாம்பாகச் சுற்றிப் பாற்கடலைக் கடைதலால் அதில் தோன்றிய ஆலகால விடத்தைப் பார்த்துக் கடைந்த தேவர்களும் அசுரர்களும் மிகவும் அஞ்சித் திசைகள் தோறும் ஓட அவர்களில் தேவர்கட்கு அருள் புரிந்து காத்தல் கருதி நீல நிறம் பொருந்திய கடலில் எழுந்த விடத்தினைப் பானம் பண்ணித் திருமிடற்றிலே தரித்தருளிய பித்தனே! தேவரீர் செய்தருளிய செய்கையைப் பார்த்துத் தேவரீரது திருவடியை அடைக்கலம் புகுந்தேன். 5

செழுமையான சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளிய இறைவனே! வானவர்கள், கின்னரர்கள், யமன், வருணன், விளங்குகின்ற அக்கினி, வாயு, சூரியன், சந்திரன், மயக்கம் இல்லாத புலி, குரங்கு, பாம்பு, வசுக்கள், தேவர்கள், அசுரர்கள் ஆகிய இவர்கள் எல்லோரும் சோர்வு சிறிதும் இல்லாமல் தேவரீரது திருவடிகளை வழிபட்டவராய் அவர் பெற்ற பெறுதற்கரிய திருவருளைப்பார்த்து மயங்குதல் சிறிதும் இல்லாமல் தேவரீரது திருவடியை அடைந்தேன். 6

செழுமையாக வளர்ந்த சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளிய இறைவனே! பொருந்தின நீண்ட செவிப்புலனை உடையவர்களாகிய மறையவர்களுக்குச் சோலையினது தன்மையைப்பெற்ற கல்லாலின் நீழலில் தருமத்தை உபதேசித்து அருச்சுன

ஆர்த்து வந்து இழியும் புனற்கங்கை
நங்கையாளை நின் சடைமிசைக் கரந்த
தீர்த்தனே ! நின்தன் திருவடி அடைந்தேன் ;
செழும் பொழில் திருப்புன் கூர் உளானே. 7

மூளயில் செற்ற ஞான்று, உய்ந்த மூவரில்
இருவர் நின்திருக்கோயிலின் வாய்தல்
காவலாளர் என்று ஏவிய பின்னை
ஒருவன் நீ கரிகாடு அரங்காக
மானை நோக்கி ஓர் மாநடம் மகிழ
மணிமுழா முழக்க அருள்செய்த
தேவ தேவ ! நின் திருவடி அடைந்தேன் ;
செழும் பொழில் திருப்புன்கூர் உளானே ! 8

அறிவினால் மிக்க அறுவகைச் சமயம்
அவ்வவர்க்கு அங்கே ஆர்அருள் புரிந்து,
எறியும் மாகடல் இலங்கையர் கோனைத்
துலங்க மால்வரைக் கீழ் அடர்த்திட்டுக்,
குறிகொள் பாடலின் இன்னிசை கேட்டுக்,
கோலம் வாள்ஒடுநாள் அது கொடுத்த
செறிவுகண்டு, நின் திருவடி அடைந்தேன் ;
செழும்பொழில் திருப்புன்கூர் உளானே ! 9

கம்பம் மால்களிற்றின் உரியானைக்,
காமன் காய்ந்தது ஓர் கண் உடையானைச்,
செம்பொன் ஏலக்கும் திருவுருவானைச்,
செழும்பொழில் திருப்புன்கூர் உளானை,
உம்பர் ஆளியை, உமையவள் கோனை,
ஊரன்வன் தொண்டன் உள்ளத்தால் உகந்து,
அன்பினால் சொன்ன அருந்தமிழ் ஐந்தோடு
ஐந்தும் வல்லவர் அருவினை இலரே.

திருச்சிற்றம்பலம்.

னுக்கு அந்நாளில் பாசுபதக் கணையைக் கொடுத்தருளினீர். பகீரதன் இரந்து வேண்ட ஆரவாரித்து வானினின்று இறங்கும் புனலுருவாகிய கங்கை நங்கையைத் தேவரீரது சடையில் ஒளிக்கச் செய்த புனிதனே! தேவரீரது திருவடியை அடைந்தேன். 7

செழுமையாக வளர்ந்த சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளிய இறைவனே! முப்புரங்களையும் எரித்தருளிய நாளில் சாவாது பிழைத்த மூவர்களில் இரண்டு பேர் தேவரீரது திருக்கோயிலின் திருவாசலில் வாயிற் காப்பாளர் என்று நியமித்த பிற்பாடு மற்றொருவன் தேவரீர் கருநிறம் உள்ள சுடுகாடே திருவம்பலமாக உமாதேவியாரைப்பார்த்து அவர் மகிழுமாறு செய்யும் ஒப்பற்ற பெரிய திருக்கூத்தில் அழகாகிய முழவ வாத்தியத்தை முழக்கும்படி இரங்கி அருளிய தேவரே! தேவரீரது திருவடியைச் சேர்ந்தேன். 8

செழுமை மிக்க சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளிய இறைவனே! மெய்யறிவினால் மேம்பட்ட அறுவகைச் சமயங்களிலும் அவ்வச்சமயங்களை யுடையவர்க்கு அவ்வச்சமயத்தே அரிய திருவருளைச் செய்து, அலை யெறிகின்ற பெரிய கடல் சூழ்ந்த இலங்கை யரசனான இராவணனை நடுங்குமாறு பெரிய கைலாய மலையின் கீழ் நசுக்கி இரங்கி யருளல் வேண்டும் என்னும் குறிப்பினையுடைய இனிய இசையோடு கூடிய பாட்டினைக் கேட்டு அழகிய வாளோடு ஆயுளையும் கொடுத்தருளிய திருவருட் செயலைப் பார்த்துத் தேவரீரது திருவடியை அடைந்தேன். 9

அசைதலையுடைய மதமயக்கம் பொருந்திய யானையின் தோலை யுடையவனை, மாரவேளை எரித்ததாகிய ஒப்பற்ற நெற்றிக் கண்ணை யுடையவனை, செந்நிறத்தையுடைய பொன்னையே ஒப்பாகின்ற திருமேனியை உடையவனை, வளம் பொருந்திய பொழில்கள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளியவனை, தேவர்களை ஆள்பவனை, உமாதேவியாரது தலைவனை, ஊரனாகிய வன்தொண்டன் மனத்தால் விருப்பங்கொண்டு அன்பினால் உரைத்த அருமையாகிய தமிழ்ப்பாட்டுக்கள் பத்தையும் கற்று ஓத வல்லவர்கள் தீவினைகளைப் போக்கியவர்களாவர். 10

[திருப்புன்கூர் என்னும் இத்தலம் வைத்தீஸ்வரன் கோயில் புகைவண்டி நிலையத்தில் இருந்து இரண்டு மைல் தூரத்தில் உள்ளது. நந்தனார் நந்தியை விலகச் செய்து தரிசித்த ஸ்தலம்.]

# 20. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

## திருப்பூந்தராய்

மூன்றாந் திருமுறை அருச்சனை

திருச்சிற்றம்பலம்.

பந்துசேர் விரலாள், பவளத்துவர் வாயினாள்,
பனிமா மதிபோல் முகத்து
அந்தம் இல்புகழாள், மலைமாதொடும்
ஆதிப்பிரான்,
வந்துசேர்வு இடம் வானவர் எத்திசையும் நிறைந்து,
வலம் செய்து, மாமலர்
புந்திசெய்து, இறைஞ்சி பொழி பூந்தராய்
போற்றுதுமே. 1

காவிஅம் கரும் கண்ணினாள், கனித் தொண்டைவாய்க்
கதிர் முத்தம் நல் வெண்நகைத்
தூவி அம்பெடை அன்னம் நடைச்சுரி
மென் குழலாள்,
தேவியும், திருமேனி ஓர் பாகமாய் ஒன்றிரண்டு
ஒரு மூன்று ஒடு சேர்பதி
பூவில் அந்தணன் ஒப்பவர் பூந்தராய்
போற்றுதுமே. 2

பை அராவரும் அல்குல், மெல்லியல், பஞ்சின் நேர்அடி,
வஞ்சிகொள் நுண்ணிடைத்
தையலாள் ஒரு பால் உடை எம்மிறை
சாரும் இடம்
செய் எலாம் கழுநீர் கமலம் மலர்த்தேறல் ஊறலில்
சேறு உலராத நல்
பொய் இலா மறையோர் பயில் பூந்தராய்
போற்றுதுமே. 3

முள்ளி நாண்முகை மொட்டு, இயல் கோங்கின் அரும்பு,
தேன் கொள் குரும்பை, மூவா மருந்து

## 20. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

### திருப்பூந்தராய்

மூன்றாந் திருமுறை அருச்சனை

பந்து சேர்ந்த திருவிரல்களை உடையவளும் பவளம் போன்ற சிவந்த திருவாயை உடையவளும் குளிர்ச்சி பொருந்திய பிறைமதி போன்ற திருமுகத்தை யுடைய முடிவில்லாத பெரும் புகழினை உடையவளுமாகிய உமாதேவியாரோடும் முதற் பெருந்தேவராகிய சிவபெருமான் எழுந்தருளிவந்து சேர்தலை உடைய இடமாகிய தேவர்கள் எல்லாப் பக்கங்களிலும் நெருங்கி வலம் வந்து இவர் நம்மையாளும் இறைவர் என்று புத்தி செய்து வணங்கிச் சிறந்த பூக்களை மிகுதியாகத் தூவுகின்ற திருப்பூந்தராயை வணங்குவோம். 1

நீல மலர் போலும் அழகிய கரிய கண்களையுடையவரும் கொவ்வைக் கனிபோலும் திருவாயினையும் ஒளி விரிக்கும் முத்துக்கள் போலும் நல்ல வெண்ணகையையும் இறகுகளையுடைய அழகிய பெண் அன்னத்தின் நடையையும் சுருண்ட மெல்லிய அளகத்தையும் உடையவரும் ஆகிய உமாதேவியாரும் திருமேனியில் ஒரு பாகமாகியும் ஆருயது என்னும் கிராமத்தில் பொருந்திய திருப்பதி [illegible] தாமரை மலரில் எழுந்தருளிய பிரம தேவரை நிகர்ப்பவராகிய மறையவர் வசிக்கின்ற திருப்பூந்தராயை வணங்குவோம். 2

படத்தையுடைய பாம்பினைப் போலும் அல்குலையும் மெல்லிய சாயலினையும், பஞ்சினை நிகர்த்த திருவடியையும் வஞ்சிக் கொடியினை யொத்த இடையினையும் உடைய உமாதேவியாரை ஒரு பாகத்திற்கொண்ட எமது இறைவர் எழுந்தருளிய தலமாகிய வயல் களிலெல்லாம் செங்கழு நீர்ப்பூவும் தாமரைப்பூவும் ஆகிய இவற்றின் தேன் பாய்தலினால் சேறுபுலராத நல்லவளம் உள்ள பொய்யினை யறியாத வேதியர் வாழ்கின்ற திருப்பூந்தராயை வணங்குவோம். 3

தாமரையின் புதியமுகை, புது மொட்டின் தன்மை வாய்ந்த கோங் கரும்பு, தேனினைக் கொண்ட தென்னங் குரும்பை,

உள் இயன்ற பைம் பொன் கலசத்து
இயல் ஒத்த முலை
வெள்ளி மால்வரை அன்ன ஓர் மேனியின்
மேவினார்பதி வீமரு தண்பொழில்
புள் இனம் துயில் மல்கிய பூந்தராய்
போற்றுதுமே. 4

பண் இயன்று எழும் மென்மொழியாள்,
[பகர்கோதை,
ஏர்திகழ் பைந்தளிர்மேனிஓர்
பெண் இயன்ற மொய்ம்பின் பெருமாற்கு
இடம்பெய்வளையார்
கண் இயன்று எழு காவிச்செழும் கரு
நீலம் மல்கிய காமரு வாவி நல்
புண்ணியர் உறையும்பதி பூந்தராய்
போற்றுதுமே. 5

வாள் நிலா மதி போல் நுதலாள், மடம் மாழை
ஒண்கணாள், வண்தரளம் நகை
பாண் நிலாவிய இன் இசை ஆர்மொழிப்
பாவை யொடும்
சேண் நிலாதிகழ் செஞ்சடை எம் அண்ணல்
சேர்வது சிகரம் பெருங்கோயில் சூழ்
போழ்நிலா நுழையும் பொழில் பூந்தராய்
போற்றுதுமே. 6

கார் உலாவிய வார்குழலாள், கயல்கண்ணினாள்,
[புயல்
கால்ஒளி மின்னிடை
வார் உலாவிய மென் முலையாள்
மலை மாது உடனாய்

அமுதமானது உள்ளே நிறைந்த பைம்பொன்னாற் செய்த கலயம் ஆகிய இவற்றின் தன்மையினை நிகர்த்த திருத்தனபாரங்களை யுடைய பெரிய நாயகியார் பெரிய வெள்ளி மலையை ஒத்த ஒப்பற்ற திருமேனியில் எழுந்தருளப் பெற்றவராகிய இறைவரது திருப்பதி யாகிய பூக்களையுடைய குளிர்ந்த சோலைகளில் பறவைக் கூட்டம் தங்குகின்ற திருப்பூந்தராயை வணங்குவோம். 4

பண்ணமைந் துண்டாகின்ற மெல்லிய மொழிகளையுடைய வளாகிய, சொல்லப் பெறுகின்ற அளகபாரத்தையும் அழகு விளங் குகின்ற பசியதளிர் போலும் திருமேனியையும் உடைய ஒப்பற்ற உமையம்மையார் பொருந்திய திருத்தோள்களை யுடைய சிவபெரு மானுக்கு இடமாகவுள்ள இடப்பட்டவளைகளை யுடைய பெண்களது கண்ணைப்போலத்து மலர்கின்ற காவி மலரோடு செழுவிய கரிய நீலமலர்களும் செறிந்த அழகிய தடாகங்களையுடைய நன்மை மிக்க புண்ணியர் வாழும் பதியாகிய திருப்பூந்தராயை வணங்கு வோம். 5

ஒளியையுடைய பிறையைப் பாப்பும் சந்திரனைப் போன்ற நெற்றியை உடையவளும், படப்பத்தை உடையவளும், மாவடுப் போன்ற ஒள்ளிய கண்களையுடையவளும், வளவிய முத்துப் போன்ற நகையையும், பண்ணோடு கூடிய இனிய இசை சேர்ந்த மொழிகளையும் உடையவளுமாகிய உமாதேவியாரோடும், தூரத்தே விளங்குவதாகிய சந்திரனையுடைய சிவந்த சடை பொருந்திய எமது இறைவர் எழுந்தருளியிருப்பதாகிய சிகரங்களையுடைய பெரிய கோயில்கள் சூழப்பெற்ற நிரம்பாத சந்திரன் நுழைகின்ற சோலைகளையுடைய திருப்பூந்தராயை வணங்குவோம். 6

கருநிறம் பொருந்திய நீண்ட கூந்தலையுடையவளும், கயல் மீன் போலும் கண்களையுடையவளும், மேகங்களின் இடையில் தோன்றுகின்ற ஒளியினையுடைய மின்னலை நிகர்க்கும் இடுப்பினை யும், கச்சணியப் பெற்ற மெல்லிய திருத்தனங்களையும் உடையவ ளும் ஆகிய உமா தேவியார் உடனுகக் கங்கை நீர் தங்கிய திரு முடியை உடைய இறைவன் எழுந்தருளியிருக்கப் பெற்ற தன்னைத்

நீர் உலாவிய சென்னியன் மன்னி இருக்கும் நாயகம்
மூந்நான்கு நிகழ்பதி
போர் உலா எயில் சூழ்பொழில் பூந்தராய்
போற்றுதுமே.

காசை சேர்குழலாள், கயல் ஏர் தடம் கண்ணி.
காம்பு அனதோள், கதிர் மென்முலைத்.
தேசு சேர்மலை மாது அமரும்
திருமார்பு அகலத்து
ஈசன் மேவும் இருங்கயிலை எடுத்தானை அன்று
அடர்த்தான் இணைச்சேவடி
பூசை செய்பவர் சேர்பொழில் பூந்தராய்
போற்றுதுமே.

கொங்குசேர் குழலாள், நிழல் வெண்நகை
கொவ்வைவாய் கொடிஏர் இடையாள், உமை
பங்கு சேர் திருமார்பு உடையார்
படர்தீ உருவாய்
மங்குல் வண்ணனும் மாமலரோனும் மயங்க
நீண்டவர் வான்மிசை வந்து எழு
பொங்கு நீரின் மிதந்த நல்பூந்தராய்
போற்றுதுமே.

கலவ மா மயில் ஆர் இயலாள், கரும்பு அன்ன
மென்மொழியாள், கதிர்வாள் நுதல்
குலவுபூங்குழலாள், உமை கூறனை
வேறு உரையால்
அலவை சொல்லுவார்தேர் அமண் ஆதர்கள்
[ஆக்கினான்தனை

நான் நிகர்க்கும் பன்னிரண்டு திருப்பெயர்கள் பெற்று விளங்கும் திருப்பதியாகிய போரில் கெடாத தன்மை வாய்ந்த திருமதில் சூழ்ந்த சோலைகளையுடைய திருப்பூந்தராயை வணங்குவோம். 7

காயாம்பூம் போலும் கருநிறத்தையுடைய கூந்தல் அமையப் பெற்றவளும், சேற்கெண்டை போலும் அழகிய விசாலமான திருக் கண்களையுடையவளும், மூங்கிலையொத்த தோளையும் பொன்னிறம் வாய்ந்த மெல்லிய, திருத்தனங்களையும் உடைய சிவஞான ஒளிவாய்ந்த உமாதேவியார் விரும்பத்தக்க பரந்த திரு மார்பினையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பெரிய கயிலாய மலையை எடுத்தவனாகிய இராவணனை அந்நாளில் நசுக்கி யொடுக்கிய இறைவனது செவ்விய இரண்டு திருவடிகளையும் பூசிப்பவர்களாகிய பெரியோர் சேரப் பெற்ற சோலை சூழ்ந்த திருப்பூந்தராயை வணங்குவோம். 8

மணந்தங்கிய கூந்தலையுடையவளும், ஒளி பொருந்திய வெண்ணிறம் வாய்ந்த நகையினையும், கொவ்வைக் கனி போலும் இதழ்களையும், கொடிபோலும் இடையினையும் உடைய வளும் ஆகிய உமாதேவி ஒரு பாகத்தில் சேர்ந்த திருமார்பினை உடையவராகும் படர்ந்த நெருப்புருவமாகி மேகவண்ணனாகிய திருமாலும் சிறந்த தாமரை மலரில் இருக்கும் பிரமனும் மயங்கும் படி நீண்டருளிய இறைவரது ஆகாயம் அளாவுமாறு மேல் எழுந்த பொங்கிய கடலின் மேல் தோணியாக மிதந்த நல்ல திருப்பூந்த ராயை வணங்குவோம். 9

கலாபத்தையுடைய அழகிய மயில் போலும் சாயலையுடைய வளும், மெல்லிய சொற்களையுடையவளும், ஒளி பொருந்திய நெற்றியையும், விளக்க முற்ற மலரினை யணிந்த கூந்தலையும் உடையவளும் ஆகிய உமாதேவியாரை ஒரு பாகத்தில் உடைய இறைவனை மனம் வேறுபட்ட விகற்பவார்த்தைகளினால் தகாதவற்றைச் சொல்வோராகிய புத்தர்களையும் சமணர்களையும் அறிவில்லாதவர்களாக்கினனது தன்னை வந்து அடைதலும்

நண்ணலும் நல்கும் நல்
புலவர்தாம் புகழ் பொற் பதி பூந்தராய்
போற்றுதுமே. 10

'தேம்பல்நுண் இடையாள், செழுஞ் சேல் அன
கண்ணியோடு அண்ணல் சேர்வு இடம் தேன்
[அமர்
பூம்பொழில் திகழ் பொற்பதி
பூந்தராய் போற்றுதும் என்று,
ஓம்பு தன்மையன் முத்தமிழ் நான் மறை
ஞானசம்பந்தன் ஒண் தமிழ் மாலைகொண்டு
ஆம்படி ஏத்தவல்லார்க்கு
அடையாவினையே. 11

திருச்சிற்றம்பலம்.

வேண்டியவைதைக் கொடுக்கும் நல்ல புலவர் புகழா நின்ற அழகிய தலமாகிய **திருப்பூந்தராயை** வணங்குவோம். 10

வருந்தும் இயல்புடைய நுண்ணிய இடையை உடையவளும், செழுவிய கெண்டைமீன் போன்ற கண்களையுடையவளுமாகிய இறைவியோடு பெருமை மிகுந்த இறைவன் எழுந்தருளிய இடமாய்த் தேன் தங்கிய பூஞ்சோலைகள் விளங்குகின்ற அழகிய திருப்பதியாகிய திருப்பூந்தராயை வணங்குவோம் என்று பாதுகாக்கின்ற நற்குணமுடையாயினும் முத்தமிழையும் நான்கு வேதங்களையும் உடைய திருஞானசம்பந்தன் பாடிய ஒள்ளிய தமிழ் மாலையாகிய இதனைக்கொண்டு தமக்கு இயந்த வண்ணம் போற்ற வல்லவர்களுக்கு வினைகள் சேராவாம். 11

[பூந்தராய் என்பது சீகாழி. இத்தலம் சீகாழி புகைவண்டி நிலையத்திலிருந்து கிழக்கே இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. திருஞானசம்பந்தர் அவதரித்தருளிய ஸ்தலம்.]

# 21. திருநாவுக்கரசு சுவாமிகள்

## திருக்கயிலாயம்

ஆறுந் திருமுறை அருச்சனை

திருச்சிற்றம்பலம்.

வேற்றாகி, விண்ணாகி நின்றாய்! போற்றி;
மீளாமே, ஆள் என்னைக் கொண்டாய்! போற்றி;
ஊற்றாகி, உள்ளே ஒளித்தாய்! போற்றி;
ஓவாத சத்தத்து ஒலியே! போற்றி;
ஆற்றாகி, அங்கே அமர்ந்தாய்! போற்றி;
ஆறு அங்கம் நால்வேதம் ஆனாய்! போற்றி;
காற்றாகி, எங்கும் கலந்தாய்! போற்றி,
கயிலை மலையானே! போற்றி; போற்றி; 1

பிச்சு ஆடல் பேயோடு உகந்தாய்! போற்றி;
பிறவி அறுக்கும் பிரானே! போற்றி;
வைச்சு ஆள்தல் நன்று மகிழ்ந்தாய்! போற்றி;
மருவி என் சிந்தை புகுந்தாய் போற்றி;
பொய்ச்சார் புரமூன்றும் எய்தாய்! போற்றி;
போகாது என்சிந்தை புகுந்தாய்! போற்றி;
கச்சாக நாகம் அசைத்தாய்! போற்றி;
கயிலை மலையானே! போற்றி; போற்றி, 2

மருவார் புரமூன்றும் எய்தாய்! போற்றி;
மருவி என் சிந்தை புகுந்தாய்! போற்றி;
உருவாகி என்னைப் படைத்தாய்! போற்றி;
உள் ஆவி வாங்கி ஒளித்தாய்! போற்றி;
திருவாகி நின்ற திறமே! போற்றி;
தேசம் பரவப்படுவாய்! போற்றி;
கரு ஆகி ஓடும் முகிலே! போற்றி;
கயிலை மலையானே! போற்றி; போற்றி. 3

## 21. திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருக்கயிலாயம்

ஆறாந் திருமுறை அருச்சனை

ஆகாயமாகி அதனின் வேறாய பூதங்களும் ஆகி நின்றவரே! உமக்கு வணக்கம்; அடியேனைத் திரும்பாமல் ஆட்கொண்டவரே! வணக்கம்; ஊறுதலையுடையதாகி என்னுள்ளே ஒளித்தவரே! வணக்கம்; நீங்காத நாத ஒலியானவரே! வணக்கம்; தணிவுடையையாய் அவ்விடத்தில் எழுந்தருளியிருப்பவரே! வணக்கம்; நான்கு வேதங்களும் ஆறங்கமும் ஆனவரே! வணக்கம்; காற்றுருவமாகி எங்கும் கலந்தவரே! வணக்கம்; திருக்கயிலாய மலையில் எழுந்தருளியவரே! வணக்கம் வணக்கம். 1

பிச்சாடுதலைப் பேய்களுடன் விரும்பினவரே! வணக்கம்; பிறப்பை ஒழித்தருள்கின்ற தலைவரே! வணக்கம்; திருவடியின் கீழிருத்தி ஆட்கொள்வதை மிகவும் விரும்பியவரே! வணக்கம்; அடியேன் சிந்தையுள்ளே கலந்து புகுந்தவரே! வணக்கம்; நின் திருவடி பிழைத்தவர்களது திரிபுரங்களையும் எய்து எரித்தவரே! வணக்கம்; நீங்காமல் என் மனத்தில் புகுந்தவரே! வணக்கம்; பாம்பினை அரைக்கச்சையாகக் கட்டினவரே! வணக்கம்; கயிலை மலையானே! வணக்கம் வணக்கம். 2

பகைவரது முப்புரங்களையும் எய்தவரே! வணக்கம்; கலந்து என் மனதில் புகுந்தவரே! வணக்கம்; உருவங்கொண்டு அடியேனைப் படைத்தவரே! வணக்கம்; உடலகத்தில் உள்ள உயிரைக் கவர்ந்து அவ்வுயிர்க்குயிராய் மறைந்தவரே! வணக்கம்; மோட்சப் பொருளாகி என்றும் நிலைபெற்ற தன்மையுடையவரே; வணக்கம்; உலகத்தவர்களால் போற்றப்படுகிறவரே! வணக்கம். எல்லாப் பொருள்களுக்கும் பிறப்பிடமாகிச் செல்லுகின்ற மேகம் போன்றவரே! வணக்கம்; கயிலைமலையானே! வணக்கம் வணக்கம். 3

வானத்தார் போற்றும் மருந்தே! போற்றி;
வந்து என்தன் சிந்தை புகுந்தாய்! போற்றி;
ஊனத்தை நீக்கும் உடலே! போற்றி;
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய்! போற்றி;
தேனத்தை வார்த்த தெளிவே! போற்றி;
தேவர்க்கும் தேவனாய் நின்றாய்! போற்றி;
கானத்தீ ஆடல் உகந்தாய்! போற்றி;
கயிலை மலையானே! போற்றி; போற்றி. 4

ஊர்ஆகி நின்ற உலகே! போற்றி;
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய்! போற்றி;
பேர்ஆகி எங்கும் பரந்தாய்! போற்றி;
பேராது என் சிந்தை புகுந்தாய்! போற்றி;
நீராவியான நிழலே! போற்றி;
நேர்வார் ஒருவரையும் இல்லாய்! போற்றி;
காராகி நின்ற முகிலே! போற்றி;
கயிலை மலையானே! போற்றி; போற்றி. 5

சில் உருவாய் சென்று திரண்டாய்! போற்றி;
தேவர் அறியாத தேவே! போற்றி;
புல்உயிர்க்கும் பூட்சி புணர்த்தாய்! போற்றி;
போகாது என் சிந்தை புகுந்தாய்! போற்றி;
பல் உயிராய்ப் பார்தோறும் நின்றாய்! போற்றி;
பற்றி உலகை விடாதாய்! போற்றி;
கல்லுயிராய் நின்ற கனலே! போற்றி;
கயிலை மலையானே! போற்றி; போற்றி. 6

பண்ணின் இசையாக நின்றாய்! போற்றி;
பாவிப்பார் பாவம் அறுப்பாய்! போற்றி;
எண்ணும் எழுத்தும் சொல் ஆனாய்! போற்றி;
என் சிந்தை நீங்கா இறைவா! போற்றி;

தேவர்கள் வணங்கிப் போற்றுகிற அமிர்தமானவரே! வணக்கம்; எழுந்தருளி வந்து என் மனதில் புகுந்தவரே! வணக்கம்; அடியேங்களது குற்றத்தை நீக்கியருளுகின்ற திருவுருவுடையவரே! வணக்கம்; நெருப்புருவாய் ஓங்கி உயர்ந்தவரே! வணக்கம்; தேனை வடித்த தெளிவு போன்றவரே! வணக்கம். தேவர்களுக்கெல்லாந் தேவனாய் நின்றவரே! வணக்கம்; காட்டுத் தீயோடு ஆடுதலை விரும்பினவரே! வணக்கம்; கயிலை மலையானே! வணக்கம் வணக்கம். 4

எல்லா உடர்களுமாகி நிலைபெற்ற உலகமானவரே! வணக்கம்; தீயுருவாய் ஓங்கி உயர்ந்தவரே! வணக்கம்; பெரு வடிவாகி எங்கும் வியாபித்தவரே! வணக்கம்; நீங்காமல் என் மனதில் புகுந்தவரே! வணக்கம்; நீராவியாகிய நிழலானவரே! வணக்கம். உம்மை ஒப்பவர் பிறர் ஒருவரையும் இல்லாதவரே! வணக்கம்; கருநிறங்கொண்டு நின்ற மேகமானவரே! வணக்கம். கயிலை மலையானே! வணக்கம். வணக்கம். 5

சிறியனவாகிய அணுவுருபமாய்ப் பிரிந்து சென்று மீட்டும் திரண்டு பேருருவத்தை எய்தியவரே! வணக்கம். தேவர்களால் அறியப்படாத தேவரே! வணக்கம், அற்ப உயிர்கட்கும் உடம்பினைப் படைத்தவரே! வணக்கம்; நீங்காமல் என் மனதில் புகுந்தவரே! வணக்கம்; பல உயிர்களாகி எல்லா உலகங்களிலும் நின்றவரே! வணக்கம்; உலகத்தைப்பற்றிக் கலந்து நீங்காதவரே! வணக்கம்; கல்லுருவமாகிய மலையினிடத்தில் உயிராகி நின்ற நெருப்பானவரே! வணக்கம்; கயிலைமலையானே! வணக்கம். வணக்கம். 6

பண்ணிற் பொருந்தப் பாடும் இசைகளாகி நின்றவரே! வணக்கம்; நினைப்பவரது பாவத்தை ஒழிப்பவரே! வணக்கம்; எண்ணுகின்ற எழுத்துக்களும் சொற்களும் ஆனவரே! வணக்கம்; அடியேனது மனத்தை நீங்காத இறைவரே! வணக்கம்; ஆகாயமும் பூமி

விண்ணானு நிலனும் தீ ஆனாய்! போற்றி;
மேலவர்க்கும் மேலாக நின்றாய்! போற்றி;
கண்ணின் மணியாக நின்றாய்! போற்றி;
கயிலை மலையானே! போற்றி; போற்றி.

இமையாது உயிராது இருந்தாய்! போற்றி;
என் சிந்தை நீங்கா இறைவா! போற்றி;
உமை பாகம் ஆகத்து அணைத்தாய்! போற்றி,
ஊழி ஏழ் ஆன ஒருவா! போற்றி;
அமையா அரு நஞ்சம் ஆர்ந்தாய்! போற்றி;
ஆதி புராணனாய் நின்றாய்! போற்றி;
கமை ஆகி நின்ற கனலே! போற்றி;
கயிலை மலையானே! போற்றி; போற்றி.

மூவாய்! பிறவாய்! இறவாய்! போற்றி;
முன்னமே தோன்றி முளைத்தாய்! போற்றி
தேவாதி தேவர் கொழுந்தே! போற்றி;
சென்று ஏறி எங்கும் பரந்தாய்! போற்றி;
ஆ ஆ, அடியேனுக்கு எல்லாம்! போற்றி;
அல்லல் நலிய அலந்தேன்! போற்றி;
காவாய் கனகம் திரளே! போற்றி;
கயிலை மலையானே! போற்றி; போற்றி.

நெடிய விசும்பொடு கண்ணே! போற்றி;
நீள அகலம் உடையாய்! போற்றி;
அடியும் முடியும் இகலிப் போற்றி;
அங்கு ஒன்று அறியாமை நின்றாய்! போற்றி;
கொடியவன் கூற்றம் உதைத்தாய்! போற்றி;

யும் நெருப்பும் ஆனவரே! வணக்கம்; மேலோருக்கும் மேலானவ ராய் நின்றவரே! வணக்கம்: கண்ணினிடத்துக் கருவிழியாகி நின்றவரே! வணக்கம்; கயிலை மலையானே! வணக்கம். வணக்கம்

இமை கொட்டாமலும் மூச்சுவிடாமலும் இருந்தவரே! வணக்கம்; அடியேனது மனத்தை நீங்காத இறைவரே! வணக்கம்; உமாதேவியாரது பாகத்தைத் திருமேனியிற் சேர்த்த வரே! வணக்கம்; எழுழிகளுமாயிருக்கிற ஒப்பற்றவனே! வணக் கம். உண்ணுதற்கு அமையாத கொடிய விடத்தைப் பருகியவரே! வணக்கம்; ஆதிபுராணனாகி நின்றவரே! வணக்கம்; பொறுமை யாய் நின்ற நீயுருவரே! வணக்கம்; கயிலைமலையானே! வணக்கம் வணக்கம். 8

மூவாதவரே! பிறவாதவரே! இறவாதவரே! வணக்கம்; எல்லாவற்றிற்கும் முன்னமேயே தோன்றி முளைத்தவரே! வணக்கம்: தேவாதி தேவர்களுக்கும் கொழுந்தானவரே! வணக் கம்; சென்று கலந்து எவ்விடத்தும் பரந்தவரே! வணக்கம்; அடியோனுக்கு எல்லாமானவரே! வணக்கம்; துன்பம் வருந்த வருந்தினேன், வணக்கம்; பொன் திரள் போன்றவரே! காக்கக் கடவீர் வணக்கம்; கயிலைமலையானே! வணக்கம் வணக்கம். 9

கண்ட ஆகாயத்தோடு மற்றுள்ள இடமும் ஆனவரே; வணக் கம்; நீளமும் அகலமும் உடையவரே! வணக்கம்: அடியையும் முடியையும் பிரம விட்டுணுக்கள் தம்முட் பகைத்து, அவ்விடத்தில் ஒரு சிறிதும் அறிய முடியாமல் நின்றவரே! வணக்கம்; கொடுமை பொருந்திய வலிய யமனை உதைத்தவரே! வணக்கம்; என் மனத்தைத் திருக்கோயிலாகக் கொண்டவரே! வணக்கம்; கடுமை

கோயிலா என் சிந்தை கொண்டாய் போற்றி ;
கடிய உரும் ஒடு மின்னே ! போற்றி ;
கயிலை மலையானே ! போற்றி; போற்றி. 10

உண்ணாது உறங்காது இருந்தாய் ! போற்றி ;
ஓதாதே வேதம் உணர்ந்தாய் ! போற்றி ;
எண்ணா இலங்கைக்கோன் தன்னை போற்றி ;
இறை விரலால் வைத்து உகந்த ஈசா ! போற்றி ;
பண்ணார் இசையின் சொல் கேட்டாய் ! போற்றி ;
பண்டே என் சிந்தை புகுந்தாய் ! போற்றி;
கண்ணாய் உலகுக்கு நின்றாய் ! போற்றி ;
கயிலை மலையானே ! போற்றி ; போற்றி. 11

திருச்சிற்றம்பலம்.

யாகிய இடியோடு மின்னலும் ஆனவரே ! வணக்கம் ; கயிலைமலை யானே ! வணக்கம் வணக்கம். 10

உண்ணாமலும் உறங்காமலும் இருந்தவரே ! வணக்கம் ; ஓதாமலே வேதங்களை உணர்ந்தவரே ! வணக்கம் ; அகந்தையினால் மதியாத இலங்கைக்கரசனாகிய இராவணனைச் சிறிதே திருவிரலினால் ஊன்றி மகிழ்ந்த ஈசரே ! வணக்கம் ; பண்பொருந்திய இசையோடு கூடிய பாடலைக் கேட்டவரே ! வணக்கம் ; பண்டைக் காலத்திலேயே அடியேனது மனதிற் புகுந்தவரே ! வணக்கம் ; உலகத்திற்குக் கண்ணாக நின்றவரே ! வணக்கம் ; கயிலைமலை யானே ! வணக்கம் வணக்கம். 11

---

[பூலோகக் கைலாயம் இமயமலையின்மேல் ரிஷிகேசத்தில் இருந்து சுமார் 240 மைல் தொலைவில் இருக்கிறது.]

# 22. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## திருக்கழுக்குன்றம்

ஏழாந்திருமுறை அருப்பணை

திருச்சிற்றம்பலம்.

கொன்று செய்த கொடுமையால் பல சொல்லவே
நின்ற பாவ வினைகள் தாம் பல நீங்கவே
சென்று சென்று தொழுமின், தேவர்பிரான் இடம்
கன்றினோடு பிடி சூழ்தண் கழுக் குன்றமே. 1

இறங்கிச் சென்று தொழுமின், இன் இசை பாடியே
பிறங்கு கொன்றைச் சடையன் எங்கள் பிரானிடம்
நிறங்கள் செய்த மணிகள் நித்திலம் கொண்டு இழி
கறங்கு வெள்ளை அருவித்தண் கழுக் குன்றமே. 2

நீள நின்று தொழுமின்; நித்தலும் நீதியால்
ஆளும் நம்ம வினைகள் அல்கி அழிந்திடத்
தோளும் எட்டும் உடைய மாமணிச் சோதியான்
காளகண்டன் உறையும் தண் கழுக்குன்றமே. 3

வெளிறுதீரத் தொழுமின் வெண்பொடி ஆடியை
முளிறு இலங்கும் மழுவாளன் முந்தி உறைவு இடம்
பிளிறு தீரப் பெரும் கைப் பெய்ம்மத மூன்று உடைக்
களிறின் ஓடு பிடிசூழ் தண் கழுக்குன்றமே. 4

புலைகள் தீரத் தொழுமின்; புன் சடைப் புண்ணியன்
இலை கொள் சூலப்படையன், எந்தை பிரான் இடம்
முலைகள் உண்டு தழுவிக் குட்டியொடும் முசுக்
கலைகள் பாயும் புறவில் தண்கழுக் குன்றமே. 5

## 22. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### திருக்கழுக்குன்றம்

பிறவுயிரை வதைத்துச் செய்த கொடுமை காரணமாக உலகத்தார் பலவாறு இகழ்ந்துரைக்கும்படி பொருந்திய பாவ வினைகள் பலவும் நீங்கும் பொருட்டுத் தேவர் பெருமானாகிய இறைவனது இடமாகிய யானைக்கன்றுகளோடு பெண் யானைகள் சூழ்கின்ற குளிர்ச்சி பொருந்திய திருக்கழுக்குன்றத்தைப் பல காலுஞ் சென்று வணங்குங்கள். 1

விளங்குகின்ற கொன்றை மாலையைச் சூடிய சடையை உடையவராகிய எங்கள் பெருமானுக்கு இடமாகிய பலவித நிறங்களையுடைய மணிகளையும் முத்துக்களையும் வாரிக்கொண்டு இழிகின்ற ஒலித்தலையுடைய வெண்ணிறமாகிய மலையருவிகள் பொருந்திய குளிர்ச்சி பொருந்திய திருக்கழுக்குன்றத்தை இனிய இசைகளைப் பாடிக்கொண்டு தாழ்ந்து சென்று வணங்குங்கள். 2

நம்மை ஆளாகக்கொண்டு அரிக்கின்ற நம்முடைய வினைப் பகுதிகள் நீதியினால் சுருங்கி அழிந்தொழியும்படி எட்டுத் திருத் தோள்களையுடைய மாணிக்கமணியின் ஒளியை உடையவரும் திருநீல கண்டத்தை உடையவருமாகிய இறைவர் எழுந்தருளியிருக்கின்ற குளிர்ச்சி பொருந்திய திருக்கழுக்குன்றத்தை நாள்தோறும் தூர நின்று வணங்குங்கள். 3

கூர்மையுடைய மழுவேந்திய இறைவன் முற்பட்டு வசித்தலையுடைய இடமாகிய பிளிறுதல் ஒழியப் பெரிய துதிக்கையையும் மும்மதங்களையும் உடைய ஆண் யானைகளோடு பெண்யானைகள் சூழுகின்ற குளிர்ச்சி பொருந்திய திருக்கழுக்குன்றத்தில் திருவெண்ணீறு பூசிய இறைவரை அறியாமை நீங்கும்படி வணங்குங்கள். 4

புல்லிய சடையினையுடைய புண்ணியரும், இலைவடிவமாகிய சூலப் படையை உடையவரும் எமது பிதாவுமாகிய பெருமானது இடமாகிய மூலைகளை யுண்டு அணைத்துக்கொண்ட குட்டிகளோடும் பெண் குரங்குகளும் அவற்றின் ஆண்களும் பாய்கின்ற குறிஞ்சி நிலத்தையுடைய குளிர்ந்த திருக்கழுக்குன்றத்தை நமது நீசத்துவம் ஒழியும்படி வணங்குங்கள். 5

மடம் உடைய அடியார் தம் மனத்தே உற
விடம் உடைய மிடறன், விண்ணவர் மேலவன்,
படம் உடை அரவன் தான் பயிலும் இடம்
கடம் உடைய புறவின் தண் கழுக் குன்றமே. 6

ஊனம் இல்லா அடியார் தம் மனத்தே உற,
ஞான மூர்த்தி நட்டமாடி நவிலும் இடம்
தேனும் வண்டும் மது உண்டு இன்னிசை பாடியே
கான மஞ்ஞை உறையும் தண் கழுக்குன்றமே. 7

அந்தம் இல்லா அடியார் தம் மனத்தேயுற,
வந்து நாளும் வணங்கி மாலொடு நான்முகன்
சிந்தை செய்த மலர்கள் நித்தலும் சேரவே
சந்தம் நாறும் புறவின் தண் கழுக்குன்றமே. 8

பிணிகள் தீரத் தொழுமின் : பின் சடைப் பிஞ்ஞகன்,
குழை கொள் காதன், குழகன் தான் உறையும் இடம்
மழைகள் சாலக் கலித்து நீடு உயர்வேய் அவை
குழைகொள் முத்தம் சொரியும் தண் கழுக்குன்றமே. 9

பல் இல் வெள்ளைத் தலையன், தான் பயிலும் இடம்
கல்லில் வெள்ளை அருவித் தண் கழுக்குன்றினை
மல்லின் மல்கு திரள்தோள் ஊரன், வனப்பினால்
சொல்லல் சொல்லித் தொழுவாரைத் தொழுமின்களே. 10

திருச்சிற்றம்பலம்.

அறியாமையை உடைய அடியவர்களது மனத்தின்கண்ணே பொருந்துமாறு விடத்தையுடைய கண்டத்தை யுடையவரும், தேவர்களுக்கு மேலாகியவரும், படைத்தை யுடைய பாம்பினை அணிந்தவருமாகிய இறைவர் எழுந்தருளியிருக்கும் இடமாவது செல்லுதற்கரிய நெறிகளுள்ள குறிஞ்சி நிலத்தையுடைய குளிர்ச்சி பொருந்திய திருக்கழுக்குன்றமேயாம். 6

குற்றமற்ற தொண்டர்களது மனத்தில் பொருந்துமாறு ஞான ரூபமாக உள்ள இறைவன் திருநடனஞ் செய்து பழகுகின்ற இடமாவது தேன் வண்டுகளும் கருவண்டுகளும் தேனையுண்டு இனிய இசைகளைப் பாடக் காட்டில் வாழ்வனவாகிய மயில்கள் ஆடி உறைகின்ற குளிர்ச்சி பொருந்திய திருக்கழுக்குன்றமேயாம்.

பெருமைக்கு முடிவில்லாத திருத்தொண்டர்களது மனதில் பொருந்துமாறு நாள்தோறும் திருமாலோடு பிரமதேவர் வந்து வணங்கி மனத்தாற் சிந்தித்து அருச்சித்த மலர்கள் நாள்தோறும் சேர்தலால் குறிஞ்சி நிலத்தையுடைய குளிர்ச்சி பொருந்திய திருக்கழுக்குன்றம் நறு மணங் கமழா நிற்கும். 8

பின்னால் விளங்குகின்ற சடையை உடைய பின்னுகரும் குழையினை யணிந்த திருச்செவியை உடையவரும் பேரழகுடைய வருமாகிய இறைவர் வசிக்கும் இடமாகிய மேகங்கள் மிகுதியும் முழங்குதலால் மிகவும் உயர்ந்த மூங்கில்களானவை வளப்பங் கொண்ட முத்துக்களைச் சொரிகின்ற குளிர்ச்சி பொருந்திய திருக்கழுக்குன்றத்தைக் குற்றங்கள் நீங்கும்படி வணங்குங்கள் 9

பல்லற்ற வெண்தலையை உடையவனாகிய இறைவன் வாழ் கின்ற இடமாகிய பாறைகளின்மேல் தவழ்கின்ற வெண்ணிற மாகிய நீரருவிகளையுடைய குளிர்ந்த திருக்கழுக்குன்றத்தை வலி யால் நிறைந்த திரண்ட தோள்களையுடைய திருநாவலூரன் அழகுபெறச் சொல்லிய திருப்பாடல்களை ஓதி வணங்குகின்றவர் களை வணங்குங்கள். 10

---

[இத்தலம் செங்கல்பட்டு ரயில்வே ஸ்டேஷனில் இருந்து தென் கிழக்கில் 9 மைல் தூரத்தில் இருக்கிறது. பஸ்கள் செல்லு கின்றன].

# 23. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

## 23 கோளறு திருப்பதிகம்

இரண்டாம் திருமுறை அடிமை

திருச்சிற்றம்பலம்.

வேய் உறு தோளி பங்கன், விடம் உண்ட கண்டன்,
மிக நல்ல வீணை தடவி
மாசு அறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்து என்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி
சனி பாம்பு இரண்டும் உடனே
ஆசு அறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே. 1

என்பொடு கொம்பொடு ஆமை இவை மார்பு இலங்க
எருதேறி ஏழையுடனே
பொன் பொதி மத்த மாலை புனல் சூடி வந்து
என் உளமே புகுந்த அதனால்
ஒன்பது ஒடு ஒன்று ஒடு ஏழுபதினெட்டு ஒடு ஆறும்
உடனாய நாள்கள் அவை தாம்
அன்பொடு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே. 2

உருவளர் பவளமேனி ஒளிநீறு அணிந்து
உமையோடும் வெள்ளை விடைமேல்
முருகு அலர் கொன்றை திங்கள் முடிமேல் அணிந்து
என் உளமே புகுந்த அதனால்
திருமகள் கலை அது ஊர்தி சயமாது பூமி
திசை தெய்வம் ஆன பலவும்
அரு நெதி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே. 3

# 23. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

## 23 கோளறு திருப்பதிகம்

இரண்டாம் திருமுறை அடிமை

மூங்கில்போலுந் தோள்களையுடைய உமாதேவியாரை இடப்பாகத்தில் உடையவரும், விடத்தைப் பருகிய திருநீல கண்டத்தை யுடையவரும் ஆகிய இறைவர் மிகு நன்மை பொருந் திய வீணையை வருடிக் குற்றமற்ற சந்திரனையும் கங்கையையும் திருமுடியின்மீது அணிந்து அடியேனது உள்ளத்தில் எழுந்தரு ளிய காரணத்தினால் சூரியனும் சந்திரனும் செவ்வாயும் புதனும் குருவும் சுக்கிரனும் சனியும் இராகுவும் கேதுவும் ஆகிய பாம்பு களுடனே திருத் தொண்டர்களுக்கு மிகுதியாகவே குற்றமற்றன வாய் நல்லன நல்லன ; அவைகள் நல்லன நல்லன. 1

எலும்பும் பன்றிக்கோடும் ஆமையோடும் ஆகிய இவைகள் திருமார்பில் விளங்கப் பொலிவுடன் கூடிய ஊமத்த மலர்மாலையை யும் கங்கையையும் திருமுடியில் அணிந்து உமா தேவியாரோடும் இடபத்தையூர்ந்து எழுந்தருளி வந்து அடியேனது உள்ளத்தில் புகுந்த காரணத்தினால், ஒன்பதாவது நாளும் (ஆயில்யம்) பத்தா வது நாளும் (மகம்) பதினாறாவது நாளும் (விசாகம்) பதினெட் டாவது நாளும் (கேட்டை) ஆறாவது நாளும் (திருவாதிரை) இவைகளோடு சேர்த்து எண்ணப்படும் நாள்களும் ஆகிய அவை கள் யாவும் திருத் தொண்டர்களுக்கு மிகவும் அன்புடன் நல்லன நல்லன ; அவைகள் நல்லன நல்லன. 2

அழகு மிகுகின்ற பவளம் போலும் செம்மேனியில் ஒளி மிக்க திருநீற்றையணிந்து மணங் கமழ்ந்து மலர்கின்ற கொன்றை மாலையையும் சந்திரனையும் திருமுடியில் அணிந்து வெண்ணிறம் வாய்ந்த இடபத்தின் மேல் உமாதேவியாரோடும் அடியேனது உள்ளத்தில் எழுந்தருளிய காரணத்தினால் இலக்குமியும் கலை மகளும் துர்க்கையும் பூமகளும் திசைகாப்பாளர்களும் ஆகிய பல தெய்வங்களும் திருத்தொண்டர்களுக்கு மிகுதியும் அரிய முறை உடையன என்றாலும் நல்லன நல்லன ; அவைகள் நல்லன நல்லன. 3

மதி நுதல் மங்கையோடு வடபால் இருந்து
மறையோதும் எங்கள் பரமன்
நதியொடு கொன்றை மாலை முடிமேல் அணிந்து
என் உளமே புகுந்த அதனால்
கொதியுறு காலன் அங்கி நமனோடு தூதர்
கொடு நோய்கள் ஆன பலவும்
அதிகுணம் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே.

நஞ்சணி கண்டன் எந்தை மடவாள் தன்னோடு
விடையேறும் நங்கள் பரமன்
துஞ்சு இருள் வன்னி கொன்றை முடிமேல் அணிந்து
என் உளமே புகுந்த அதனால்
வெம் சினம் அவுணரோடும் உரும் இடியும் மின்னும்
மிகையான பூதம் அவையும்
அஞ்சிடு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே.

வாள்வரி அதளது ஆடை வரிகோவணத்தர்
மடவாள் தன்னோடும் உடனாய்
நாள்மலர் வன்னி கொன்றை நதிசூடி வந்து
என் உளமே புகுந்த அதனால்
கோள்அரி உழுவையோடு கொலையானை கேழல்
கொடு நாகமோடு கரடி
ஆள்அரி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே.
செப்பு இளமுலை நல்மங்கை ஒருபாகம் ஆக
விடைஏறு செல்வன் அடைவார்

பிறைபோலும் நெற்றியை உடைய உமாதேவியோடு வட திசையின் கண் இருந்து வேதங்களைத் திருவாய்மலர்ந்தருள் கின்ற எங்கள் சிவபெருமான் கங்காநதியோடு கொன்றை மலர் மாலையைத் திருமுடியில் அணிந்து அடியேனது உள்ளத்தில் புகுந்த காரணத்தினால் கோபித்தலையுடைய காலனும் அக்கினி யும் யமனும் யமதூதர்களும் கொடிய நோய்களும் ஆகிய எல்லாம் திருத்தொண்டர்களுக்கு மிகவும் அதிகக் குணஞ் செய்யக்கூடியன வாய் நல்லன நல்லன; அவைகள் நல்லன நல்லன. 4

விடத்தையணிந்த திருநீலகண்டத்தை உடையவரும் எமது பிதாவும் உமாதேவியாரோடு இடபத்தை ஊர்ந் தருளுகின்ற எங்கள் தலைவரும் ஆகிய நிலைபெற்ற கருநிறத்தையுடைய வன்னி யையும் கொன்றை மலரையும் திருமுடியில் அணிந்து அடியேனது உள்ளத்தில் எழுந்தருளிய காரணத்தினால் கொடிய கோபத்தை யுடைய அசுரரோடும் அச்சத்தை உண்டாக்கும் இடியும் மின்ன லும் துன்பத்தை உண்டாக்கும் பூதங்களும் திருத்தொண்டர் களுக்குப் பயப்படுந் தன்மையுடையனவாகி நல்லன நல்லன; அவைகள் நல்லன நல்லன.

ஒளியையும் கோடுகளையும் உடைய புலித்தோல் ஆடை யாகிய கட்டின திருக்கோவணத்தையுடைய இறைவர் புதிய மலர் களோடு கூடிய வன்னியையும் கொன்றைமாலையையும் கங்கையை யும் திருமுடியிற் சூடி உமாதேவியாருடன் எழுந்தருளி வந்து அடியேனது உள்ளத்தில் புகுந்த காரணத்தினால், கொலைத் தொழில் வாய்ந்த சிங்கம், புலி கொல்லுகிற யானை, பன்றி, கொடிய பாம்பு, கரடி, மனிதத் தன்மைவாய்ந்த குரங்கு ஆகிய இவைகள் திருத் தொண்டர்களுக்கு மிகுதியும் நல்லன நல்லன; அவைகள் நல்லன நல்லன. 6

செப்பின் தன்மை வாய்ந்த இளமை பொருந்திய தனங்களை யுடைய நன்மைவாய்ந்த உமாதேவியார் ஒரு பக்கத்தில் அமர இடபத்தை ஊர்ந்தருளுகின்ற செல்வராகிய இறைவர் தம்மை அடைவோர் விரும்பத்தக்க அழகும் இளமையும் வாய்ந்த சந்தி

ஒப்பு இளமதியும் அப்பும் முடிமேல் அணிந்து
என் உளமே புகுந்த அதனால்
வெப்பொடு குளிரும் வாதம் மிகையான பித்தும்
வினையான வந்து நலியா
அப்படி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே.

வேள்பட விழிசெய்து அன்று விடைமேல் இருந்து
மடவாள் தனோடும் உடனாய்
வாள்மதிவன்னி கொன்றைமலர் சூடிவந்து
என் உளமே புகுந்த அதனால்
ஏழ்கடல்சூழ் இலங்கை அரையன் தனோடும்
இடர்ஆன வந்து நலியா
ஆழ்கடல் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே. 8

பலபல வேடம் ஆகும்பரன் நாரிபாகன்
பசு ஏறும் எங்கள் பரமன்
சலமகளோடு எருக்கு முடிமேல் அணிந்து
என் உளமே புகுந்த அதனால்
மலர்மிசையோனும் மாலும் மறையோடு தேவர்
வருகாலம் ஆன பலவும்
அலைகடல் மேரு நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே. 9

கொத்துஅலர் குழலியோடு விசயற்கு நல்கு
குணம்ஆய வேட விகிர்தன்
மத்தமும் மதியும் நாகம் முடிமேல் அணிந்து என்

ரனையும் கங்கை நீரையும் திருமுடியில் அணிந்து அடியேனது உள்ளத்தில் எழுந்தருளிய காரணத்தினால் வெப்பத்தோடு குளிர்ச்சியும் வாதமும் அதிகரித்த பித்தமும் பிற தீவினைகளும் திருத்தொண்டர்களுக்கு அதிகமாக வந்து வருத்தாத வகையில் நல்லன நல்லன; அவைகள் நல்லன நல்லன. 7

காமன் அழிந்தொழியும்படி அந்நாளில் விழித்து நோக்கி உமாதேவியாரோடும் கூடினவராய் ஒளியுடைய சந்திரனையும் வன்னியையும் கொன்றை மலரையும் தலையில் அணிந்து இடபத்தின் மேல் எழுந்தருளிவந்து அடியேனது உள்ளத்தில் புகுந்த காரணத்தினால் ஏழு கடல்களும் சூழ்ந்த இலங்கைக் கரசனாகிய இராவணனோடு ஆழ்ந்த கடல்களும் பிறதுன்பங்களும் நெருங்கி வருத்தமாட்டாவாய்த் திருத்தொண்டர்களுக்கு அதிகமாக நல்லன நல்லன; அவைகள் நல்லன நல்லன. 8

பற்பலவான திருவுருவங்களோடு கூடியபரமரும் பெண்ணொரு பாகரும் இடபத்தை ஊர்பவரும் ஆகிய எங்கள் இறைவர்; கங்கை நங்கையாருடன் எருக்க மலரையும் திருமுடியில் அணிந்து அடியேனது உள்ளத்தில் எழுந்தருளிய காரணத்தினால் தாமரை மலரில் எழுந்தருளிய நான்முகனும் திருமாலும் வேதங்களோடு பிற தேவர்களும் சுழன்று வருகின்ற காலமும் அலைகின்ற கடலும் மேருமலையும் ஆகிய எல்லாமும் திருத்தொண்டர்களுக்கு அதிகமாக நல்லன; அவைகள் நல்லன நல்லன. 9

மலர்க்கொத்துக்கள் பரவிய கூந்தலையுடைய உமாதேவியாரோடு அருச்சுனனுக்கு அருள் செய்த நன்மையை உடைய வேடராகிய இறைவர் ஊமத்த மலரையும் பாம்பையும் திருமுடி

உளமே புகுந்த அதனால்
புத்தரொடு அமணை வாதில் அழிவிக்கும் அண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்ல நல்ல அவை நல்லநல்ல
அடியார் அவர்க்கு மிகவே. 10

தேன்அமர் பொழில்கொள் ஆலை விளை செந்நெல் துன்னி
வளர்செம்பொன் எங்கும் நிகழ
நான்முகன் ஆதியாய பிரமாபுரத்து
மறை ஞான ஞான முனிவன்
தான் உறுகோளும்நாளும் அடியாரை வந்து
நலியாத வண்ணம் உரைசெய்
ஆனசொல்மாலை ஓதும் அடியார்கள் வானில்
அரசாள்வர் ஆணை நமதே. 11

யில் அணிந்து அடியேனது உள்ளத்தில் எழுந்தருளிய காரணத்திஞல் இறைவனுடைய திருநீறு புத்தர்களுடனே சமணரைச் சொற்போரில் தோல்வியடைந்து நாசமுறச் செய்யும். இது உண்மையும் உறுதியும் ஆகும். அத்தகுதிஞல் திருத்தொண்டர்களுக்கு மிகுதியாகவே அவர்களால் வரும் தீமைகள் யாவும் நல்லன நல்லன ; அவைகள் நல்லன நல்லன. 10

செம்பொன்ஞனது எவ்விடத்தும் வழங்கும்படி தேன் பொருந்திய சோலைகளைக் கொண்ட கரும்புகளும் விளைகின்ற செந்நெல்லும் நெருங்கி வளர்கின்ற பிரமதேவஞல் முதற்கண வழிபாடு செய்யப்பட்ட பிரமாபுரம் என்கிற சீகாழியிற் பிறந்த வைதிக ஞானத்தையுடைய திருஞானசம்பந்தன் உற்ற கோள்களும் நாள்களும் திருத்தொண்டரை அடைந்து வருத்தாதவாறு பாடியதான சொன்மாலையாகிய இத்திருப்பதிகத்தை ஓதுகின்ற திருத்தொண்டர்கள் மேல் உலகத்தில் அரசராக ஆளக் கடவர்கள்; இது நமது கட்டளை. 11

## 24. திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருவாரூர் திருப்பதிகம்

நான்காந் திருமுறை அடிமை.

திருச்சிற்றம்பலம்

குலம்பலம் பாவருகுண்டர் முன்னே நமக்கு உண்டு
[கொலோ ?
அலம்பு அலம்பாவரு தண்புனல் ஆரூர் அவிர்சடையான்
சிலம்பு அலம்பாவரு சேவடியான் திருமூலட்டானம்
புலம்பு அலம்பாவரு தொண்டர்க்குத் தொண்டராம்
புண்ணியமே. 1

மற்று இடமின்றி மனைதுறந்து அல்உணவல் அமணர்
சொல்திடம் என்று துரிசுபட்டேனுக்கும் உண்டுகொலோ
வில்திடம்வாங்கி விசயனொடு அன்று ஒருவேடுவனாய்ப்
புற்று இடம்கொண்டான் தன்தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே. 2

ஒரு வடிவு இன்றி நின்று உண்குண்டர்முன் நமக்கு
[உண்டு கொலோ?
செரு வடிவெம் சிலையால் புரம் அட்டவன் சென்று
[அடையாத்
திருவுடையான் திருவாரூர்த் திருமூலட்டானன் செங்கண்
பொருவிடையான் அடித்தொண்டர்க்குத் தொண்டராம்
மே. 3

மாசினை ஏறிய மேனியர்வன்கண்ணர் பொண்ணரைவிட்டு
ஈசனையே நினைந்து ஏசுஅறுவேனுக்கும் உண்டு கொலோ?
தேசனை ஆரூர்த் திருமூலட்டானனைச் சிந்தை செய்து
பூசனைப் பூசுரர் தொண்டர்க்குத் தொண்டராம்
[புண்ணியமே. 4

## 24. திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருவாரூர்த் திருப்பதிகம்

நான்காந் திருமுறை அடிமை.

ஒலித்தலைச் செய்கின்ற குளிர்ந்த கங்கை நீரைத் தரித்த விளங்கும் சடையினை யுடையவரும், நாதச் சிலம்புகள் ஒலிக்கின்ற திருவடியை உடையவரும் ஆகிய இறைவரது திருவாரூர்த் திருமூலட்டானத்தில் வருந்தி அழுது வருகின்ற திருத்தொண்டர்களுக்கு தொண்டு செய்பவராகும் சிவபுண்ணியமானது கூட்டமாகவும் திண்மையாகவும் பரவுகின்ற சமணர்முன்னே எங்களுக்குக் கிடைத்தல் கூடுமோ? 1

வேறு இடமில்லாமல் வீட்டினைவிட்டு இரவில் உண்ணாத வலிய சமணர்களது உபதேசம் உறுதி பயப்பதென்று குற்றத்தை அடைந்த எனக்கும் வில்லைத் திடமாக வளைத்து அருச்சுனனோடு அந்நாளில் ஒரு வேடுவராகிப் புற்றிடங்கொண்டவரது திருத்தொண்டர்களுக்குத் தொண்டராதற்குரிய சிவபுண்ணியம் எனக்கும் கிட்டுமோ? 2

போரில் தேர்ந்த கொடிய வில்லினால் திரிபுரங்களையும் எரித்தவரும் சென்று சேரமுடியாத முத்திச்செல்வம் உடையவரும், திருவாரூர்த் திருமூலட்டானத்தை உடையவரும் சிவந்த கண்களையுடைய போர் செய்கின்ற இடபத்தை உடையவரும் ஆகிய இறைவரது திருவடித் தொண்டர்களுக்குத் தொண்டாகின்ற சிவபுண்ணியமானது யாதொருவிதமான பொலிவும் இல்லாமல் நின்று உண்ணுகின்ற அமணர்க்கு முன்னே எமக்கு உண்டாகுமோ? 3

ஞானத்திருவுரு உடையவரை. திருவாரூர்த் திருமூலட்டானரை எண்ணிப் பூசிக்கின்ற வேதியர்களின் தொண்டர்களுக்குத் தொண்டாகின்ற சிவபுண்ணியமானது, அழுக்கடைந்த உடலை உடையவரும் கொடியரும் ஆகிய சமணரைவிட்டுச் சிவபிரானையே சிந்தித்துக் குற்றமற எண்ணிய அடியேனுக்கும் உண்டாகுமோ? 4

அருந்தும்பொழுது உரையாடா அமணர் திறம் அகன்று
வருந்தி நினைந்து அரனே என்று வாழ்த்துவேற்கு உண்டு
[கொல்?
திருந்திய மாமதில் ஆரூர்த் திருமூலட்டானனுக்குப்
பொருந்தும் தவம் உடைத் தொண்டர்க்குத் தொண்டராம்
[புண்ணியமே. 5

வீங்கிய தோள்களும் தாள்களும் ஆய்நின்று வெற்
[றரையே நின்று
மூங்கைகள் போல் உண்ணும் மூடர் முன்னே நமக்கு
[உண்டு கொலோ?
தேம்கமழ் சோலைத்தென் ஆரூர்த் திருமூலட்டானன்
[செய்ய
பூங்கழலான் அடித்தொண்டர்க்குத் தொண்டராம்
[புண்ணியமே. 6

பண்ணிய சாத்திரப்பேய்கள் பறிதலைக் குண்டரை விட்டு
எண்ணில் புகழ் ஈசன்தன் அருள் பெற்றேற்கும் உண்டு
[கொலோ?
திண்ணிய மாமதில் ஆரூர்த் திருமூலட்டானன் எங்கள்
புண்ணியன்தன் அடித் தொண்டர்க்குத் தொண்ட
[ராம் புண்ணியமே. 7

கரப்பர்கள் மெய்யைத் தலைபறிக்கச் சுகம் என்னும்
[குண்டர்
உரைப்பன கேளாது இங்கு உய்யப் போந்தேனுக்கும்
[உண்டு கொலோ?
திருப்பொலி ஆரூர்த் திருமூலட்டானன் திருக்கயிலைப்
பொருப்பன் விருப்பு அமர்தொண்டர்க்குத் தொண்டராம்
[புண்ணியமே. 8

திருத்தமாகிய பெரிய மதில்சூழ்ந்த திருவாரூர்த் திருமூலட்டானனுக்குப் பொருத்தமாகிய தவச்செயலை மேற்கொண்ட திருத்தொண்டர்களுக்குத் தொண்டராகின்ற சிவபுண்ணியமானது உண்ணும்பொழுது பேசாத சமணர்களது வலிய கூட்டத்தைவிட்டு வருத்தப்பட்டுச் சிவனேயென்று சிந்தித்து வாழ்த்துகின்ற எனக்கு உண்டாகுமோ? 5

தேன் மணக்கின்ற சோலைகளையுடைய அழகிய திருமூலட்டானன் ஆகிய செவ்விய தாமரை மலர்போலும் திருவடிகளையுடைய இறைவனது திருவடித் தொண்டர்களுக்குத் தொண்டராகின்ற சிவபுண்ணியமானது பருத்த தோள்களையும் கால்களையும் உடையவராய் ஆடையின்றித் திகம்பரராய் நின்று ஊமைகளைப்போல் உண்ணுகின்ற மூடர்களாகிய சமணர்களுக்கு முன்னே எமக்கு உண்டாகுமோ? 6

திட்பம் வாய்ந்த பெரிய மதிலையுடைய திருவாரூர்த் திருமூலட்டானரும் எங்களது புண்ணியத்திருவுரு உடையவருமாகிய இறைவரது திருவடித் தொண்டர்களுக்குத் தொண்டராதற்குரிய சிவபுண்ணியமானது கட்டியுரைக்கும் சாத்திரப் பேய்களாயுள்ள மயிர் பறிக்கப்பட்ட தலைகளையுடைய சமணர்களை விட்டு எண்ண முடியாத பெரும் புகழையுடைய சிவபிரானது அருள் பெற்றவனாகிய எனக்கும் உண்டாகுமோ? 7

எல்லாவகையான செல்வங்களும் சிறந்து விளங்கும் திருவாரூர்த் திருமூலட்டானரும் திருக்கைலாய மலையை யுடையவருமாகிய இறைவரிடத்து விருப்பங்கொண்ட திருத்தொண்டர்களுக்குத் தொண்டராகின்ற சிவபுண்ணியமானது தம்முடம்பைப் பாய் கொண்டு மறைப்பவர்களாய்த் தலைமயிரைப் பறிக்கச் சுகம் என்று சொல்லுகின்ற சமணர்கள் சொல்லுவனவற்றைக் கேளாமல் இவ்விடத்தில் பிழைக்க வந்தவனாகிய எனக்கும் உண்டாகுமோ? 8

கையில் இடு சோறு நின்று உண்ணும்காதல் அமணரை
[விட்டு
உய்யும் நெறிகண்டு இங்கு உய்யப் போந்தேனுக்கும்
[உண்டு கொலோ?
ஐயன் அணிவயல் ஆரூர்த் திருமூலட்டானனுக்குப்
பொய் அன்பிலா அடித்தொண்டர்க்குத் தொண்டராம்
[புண்ணியமே. 9

குற்றம் உடைய அமணர் திறமது கையகன்றிட்டு
உற்ற கருமம் செய்து உய்யப் போந்தேனுக்கும் உண்டு
(கொலோ?
மற்பொலி தோளான் இராவணன் தன்வலி வாட்டுவித்த
பொற்கழலான் அடித்தொண்டர்க்குத் தொண்டராம்
[புண்ணியமே. 10

திருச்சிற்றம்பலம்

உலகத் தந்தையும் அழகிய வயல்கள் சூழ்ந்த திருவாரூர்த் திருமூலட்டானத்தில் எழுந்தருளியவனுமாகிய சிவபெருமானுக்குப் பொய் பொருந்திய அன்பு இல்லாத திருவடித் தொண்டர்களுக்குத் தொண்டராகின்ற சிவபுண்ணியமானது, கையில் இடுகின்ற சோற்றை நின்றபடி உண்ணுகின்ற ஆசையை உடைய சமணரை விட்டு நீங்கி இவ்விடத்தில் பிழைக்கும் நன்னெறியை அறிந்து உய்யுமாறு வந்தடைந்த எனக்கும் உண்டாகுமோ ? 9

மற்போரால் பொலிவுபெற்ற தோள்களையுடையவனாகிய இராவணனது வலிமையைக் கெடுத்த பொன்போலும் விளங்கும் திருவடிகளையுடைய திருமூலட்டானரது திருவடித் தொண்டர்களுக்குத் தொண்டராகின்ற சிவபுண்ணியமானது குற்றத்தையுடைய சமணர்களது சமயத்திறத்தை விட்டு நீங்கிப் பொருந்திய திருத்தொண்டின் காரியங்களைச் செய்து பிழைக்கப் போந்தவனாகிய எனக்கும் உண்டாகுமோ ? 10

(இத்தலம் மாயவரம் காரைக்குடி இரயில்வழியில் திருவாரூர் சந்திப்பு நிலையத்தில் இருந்து ஏறக்குறைய இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது.)

# 25. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## திருத்தொண்டத்தொகை

ஏழாந்திருமுறை அடிமை.

திருச்சிற்றம்பலம்.

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்.
திருநீலகண்டத்துக் குயவனார்க்கு அடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்கு அடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார்விறன் மிண்டர்க்
[கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக்கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே. 1

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க்கு அடியேன்
ஏனாதி நாதன் தன் அடியார்க்கும் அடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற்கு அடியேன்
கடவூரில் கலயன்தன் அடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள் வள்ளல் மானக்கஞ்சாறன்
எஞ்சாத வாள்தாயன் அடியார்க்கும் அடியேன்
அலைமலிந்த புனல் மங்கை ஆனாயற்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே. 2

மும்மையால் உலகு ஆண்ட மூர்த்திக்கும் அடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கும் அடி-
[யேன்

## 25. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### திருத்தொண்டத்தொகை

ஏழாந்திருமுறை அடிமை.

திருவாரூரில் எழுந்தருளிய இறைவருக்கு ஆட்பட்ட ஆரூரனாகிய யான் தில்லைவாழ் அந்தணருடைய அடியவர்க்கும் அடியவனாகின்றேன். திருநீலகண்டக் குயவனாருக்கும் அடியவனாகின்றேன். அடியவர்களுக்கு எப்பொருளையும் இல்லையென்று சொல்லாத இயற்பகை நாயனாருக்கும் அடியவனாகின்றேன். இளையான் குடி மாற நாயனாரது அடியவர்க்கும் அடியவனாகின்றேன்; வெற்றி பெறுந் தன்மையில் மிக வன்மை வாய்ந்த மெய்ப்பொருணாயனார்க்கும் அடியவனாகின்றேன்; விரிந்த சோலைகள் சூழ்ந்த திருச்செங்குன்றூரில் தோன்றிய விறன்மிண்ட நாயனார்க்கும் அடியவனாகின்றேன்; அகவிதழ்களையுடைய மெல்லிய அழகிய முல்லை மாலை யணிந்தவராகிய அமர்நீதி நாயனார்க்கும் அடியவனாகின்றேன். 1

திருவாரூரில் எருந்தருளிய இறைவருக்கு ஆட்பட்ட ஆரூரனாகிய யான் இலை வடிவு பொருந்திய மழுப்படையைத் தாங்கிய நம்பியாகிய எறிபத்த நாயனாருக்கு அடியவனாகின்றேன்; ஏனாதி நாத நாயனாருடைய அடியார்க்கும் அடியவனாகின்றேன். நூலறிவு மிகுந்த சிறப்பினையுடைய நம்பியாகிய கண்ணப்ப நாயனாருக்கும் அடியவனாகின்றேன்; திருக்கடவூரில் எழுந்தருளியிருந்த குங்கிலியக் கலய நாயனாரது அடியவர்களுக்கும் அடியவனாகின்றேன்; மலைபோலும் பருத்த தோள்களையுடைய வள்ளல் தன்மை பொருந்திய மானக் கஞ்சாற நாயனார் குறைதலில்லாத வாளையுடைய அரிவாட்டாய நாயனார் ஆகிய இவர்களது அடியவர்களுக்கும் அடியவனாகின்றேன்; அலைகள் மிகுந்த நீர்சூழ்ந்த மங்கலத்தில் எழுந்தருளிய ஆனாய நாயனார்க்கும் அடியவனாகின்றேன்.

திருவாரூரில் எழுந்தருளிய இறைவனுக்கு ஆட்பட்டவனாகிய ஆரூரன் என்னும் யான், மூன்று சாதனங்களால் உலகத்தை ஆண்ட மூர்த்தி நாயனாருக்கும் அடியவனாகின்றேன்; முருக நாயனார்க்கும் உருத்திர பசுபதி நாயனார்க்கும் அடியவனாகின்றேன்; செம்பொருட்டன்மையோடு திருநாளைப்போவார் நாயனாருக்கும்

மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதயை மழுவினால் எறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக்கு அடி
[யேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே. 3

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்தன் அடியார்க்கும் அடியேன்
பெருநம்பிகுலச் சிறைதன் அடியார்க்கும் அடியேன்
பெருமிழலைக் குறும்பற்கும் பேயார்க்கும் அடியேன்
ஒரு நம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க்கு அடியேன்
அருநம்பி நமிநந்தி அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 4

வம்புஅறு வரிவண்டு மணம்நாற மலரும்
மதுமலர் நல் கொன்றையான் அடிஅலால் பேணு
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கர்க்கும் அடியேன்
அம்பரான் சோமாசிமாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 5

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்எறிந்த சாக்கியற்கும் அடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற்கு அடியேன்

அடியவனுகின்றேன்; திருக்குறிப்புத்தொண்ட நாயனுருடைய அடியவர்க்கும் அடியவனுகின்றேன்; உண்மையன்போடு உடைய வரைப் பூசியாநிற்பச் சினந்தெழுந்த தம் பிதாவை மழுவினுல் வெட்டிய மோட்சத்தைத் தருவோனுகிய இறைவனது திருவடி யடைந்த சண்டேசுர நாயனுர்க்கும் அடியவனுகின்றேன். 3

திருவாரூரில் எழுந்தருளிய இறைவனுக்கு ஆட்பட்ட ஆரூர னுகிய நான், வீடு பேற்றிற்கிருப்பிடமாகிய செம்பொருளையே செவ்வியபற்றுக்கோடாகக்கொண்டருளிய திருநாவுக்கரசு நாயனு ருடைய அடியவர்கட்கும் அடியவனுகின்றேன். பெருமை தங்கிய நம்பியாகிய குலச்சிறை நாயனுரது அடியவர்கட்கும் அடியவனு கின்றேன்; பெரும்மிழலைக் குறும்பநாயனுருக்கும் பேயுருக்கொண்ட காரைக்கால் அம்மையார்க்கும் அடியவனுகின்றேன். ஒப்பற்ற நம்பியாகிய அப்பூதியடிகள் நாயனுரது அடியவர்கட்கும் அடியவ னுகின்றேன்; ஒலிக்கின்ற நீர் சூழ்ந்த திருச்சாத்த மங்கையில் தோன்றிய திருநீலநக்க நாயனுருக்கும் அடியவனுகின்றேன்; அரிய நம்பியாகிய நமிநந்தியடிகள் நாயனுரது அடியவர்கட்கும் அடியவனுகின்றேன். 4

திருவாரூரில் எழுந்தருளிய இறைவனுக்கு ஆட்பட்ட ஆரூர னுகிய நான், வாசனை நீங்காத வரிகளையுடைய வண்டு வாசனை வீசுமாறு மலராநிற்கும் தேன் பொருந்திய நல்ல கொன்றை மல ரினையுடைய இறைவனது திருவடியை அல்லாது வேறொன்றை யும் விரும்பாத எமது தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாய னுரது அடியவர்களுக்கும் அடியவனுகின்றேன். ஏயர்கோன் கலிக்காம நாயனுரது அடியவர்கட்கும் அடியவனுகின்றேன். நம் பெருமானுகிய திருமூல நாயனுரது அடியவர்கட்கும் அடியவனு கின்றேன்; கண்கள் காணப்பெற்ற தண்டியடிகள் நாயனுருக்கும் மூர்க்க நாயனுருக்கும் அடியவனுகின்றேன். திருவம்பரில் திரு அவதாரஞ் செய்தவராகிய சோமாசிமாற நாயனுருக்கும் அடியவ னுகின்றேன். 5

திருவாரூரில் எழுந்தருளிய இறைவனுக்கு ஆட்பட்ட ஆரூர னுகிய நான், கச்சணிந்த அழகிய தனங்களையுடையவளாகிய உமை பங்காளனுகிய சிவபெருமானது திருவடிகளை மறவாமல் கல்லால் எறிந்த சாக்கிய நாயனுருக்கும் அடியவனுகின்றேன்; சிறப்புப் பொருந்திய புகழினையுடைய வள்ளலாகிய சிறப்புலி நாயனுருக் கும் அடியவனுகின்றேன்- திருச்செங்காட்டங்குடியில் எழுந்தரு

கார்கொண்ட கொடைக் கழறிற்றறிவார்க்கும் அடியேன்
கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேல்கூற்றன் களந்தைக் கோன் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 6

பொய் அடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்
பொழில் கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற்கு அடியேன்
மெய்யடியான் நரசிங்கமுனை யரையற்கு அடியேன்
விரிதிரைசூழ் கடல் நாகை அதிபத்தற்கு அடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 7

கறைக்கண்டன் கழல் அடியே காப்புக்கொண்டிருந்த
கணம்புல்ல நம்பிக்கும் காரிக்கும் அடியேன்
நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலிவென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்
துறைக்கொண்ட செம்பவளம் இருள் அகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனை அடுவாற்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 8

கடல் சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான்
காடவர் கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடி-
[யேன்
மடல் சூழ்ந்ததார் நம்பி இடங்கழிக்கும் தஞ்சை
மன்னவனும் செருத்துணைதன் அடியார்க்கும் அடி-
[யேன்

ளிய சிறுத்தொண்ட நாயனாருக்கும் அடியவனாகின்றேன்; மேகம்
போன்ற கொடையினையுடைய கழறிற்றறிவார் என்னும் திரு
நாமத்தையுடைய சேரமான் பெருமான் நாயனாருக்கும் அடியவனா
கின்றேன். கடல் சூழ்ந்த சீகாழியில் எழுந்தருளிய கணநாத நாய
னாரது அடியவர்களுக்கும் அடியவனாகின்றேன். கூர்மை பொருந்
திய வேற்படையையுடைய களந்தைக்கு இறைவராகிய கூற்றுவ
நாயனாருக்கும் அடியவனாகின்றேன். 6

திருவாரூரில் எழுந்தருளிய இறைவனுக்கு ஆட்பட்ட ஆரூர
னாகிய யான், பொய்யடிமையில்லாத புலவர்க்கும் அடியவனாகின்
றேன்; சோலைகள் சூழ்ந்த கருவூரில் திருவடி நீழலடைந்த
புகழ்ச்சோழ நாயனாருக்கும் அடியவனாகின்றேன்; மெய்யடியவ
ராகிய நரசிங்க முனையரைய நாயனாருக்கும் அடியவனாகின்றேன்.
விரிந்த அலைகள் சூழ்ந்த கடற்கரையையுடைய நாகபட்டினத்தில்
தோன்றியருளிய அதிபத்த நாயனாருக்கும் அடியவனாகின்றேன்,
கையை வெட்டிய வரிந்த வில்லையுடையவராகிய கலிக்கம்ப நாய
னார் கலிய நாயனார் வரிஞ்சியூரில் உள்ளார்க்குத் தலைவராகிய
வீரக்கழலையணிந்த சத்தி நாயனார் ஆகிய இவர்களது அடியவர்கட்
கும் அடியவனாகின்றேன். ஐயடிகள் காடவர்கோன் நாயனாரது
அடியவர்கட்கும் அடியவனாகின்றேன். 7

திருவாரூரில் எழுந்தருளிய இறைவனுக்கு ஆட்பட்ட ஆரூர
னாகிய யான், விடக்கறைவாய்ந்த திருமிடற்றினையுடைய இறைவ
னது வீரக்கழல் அணிந்த திருவடியையே மனத்தில் நிறுத்தித்
தியானித்தலையுடைய கணம்புல்ல நாயனாருக்கும் காரி நாயனாருக்
கும் அடியவனாகின்றேன். நிறைவடைந்த மனமுடையவராகி
வடநாட்டரசரைத் திருநெல்வேலிப் போர்க்களத்தில் வென்று
மேம்பட்ட நிலைத்த புகழையுடைய நெடுமாற நாயனாரது அடியவர்
கட்கும் அடியவனாகின்றேன். கடல்துறைகளில் உள்ள சிவந்த
பவளங்கள் இருளையகற்றுகின்ற ஒளிமிகுந்த பழையதாகிய திரு
மயிலாப்பூரில் திருவவதாரஞ்செய்த வாயிலார் நாயனாரது அடிய
வர்கட்கும் அடியவனாகின்றேன். அறுத்தலையுடைய வேலைத்
தாங்கிய ஆடவரில் சிறந்தவராகிய முனையடுவார் நாயனாருக்கும்
அடியவனாகின்றேன். 8

புடைசூழ்ந்த புலியதன்மேல் அரவு ஆட ஆடி
பொன் அடிக்கே மனம் வைத்த புகழ்த்துணைக்கும்
அடியேன்
அடல் சூழ்ந்த வேல் நம்பி கோட்புலிக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 9

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும் திருமேனி தீண்டுவார்களுக்கும் அடி-
[யேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 10

மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்
தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க்கு அடியேன்
திருநீலகண்டத்துப் பாணனார்க்கு அடியேன்
என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசை ஞானி காதலன் திருநாவலூர்க் கோன்
அன்னவன் ஆம் ஆரூரன் அடிமை கேட்டு உவப்பார்
ஆரூரில் அம்மானுக்கு அன்பராவாரே. 11

திருச்சிற்றம்பலம்.

திருவாரூரில் எழுந்தருளிய இறைவனுக்கு ஆட்பட்ட ஆரூரனாகிய நான், கடலால் சூழப்பட்ட உலகம் முழுவதும் ஆளுகின்ற பெருமைவாய்ந்தவராய் காடவர் மன்னராகிய கழற்சிங்க நாயனாரது அடியவர்கட்கும் அடியவனாகின்றேன். இதழ்களையுடைய பூமாலையை அணிந்த நற்குணம் நிறைந்த இடங்கழி நாயனாருக்கும் தஞ்சைமாநகரில் பிறந்தவராகிய செருத்துணை நாயனாரது அடியார்க்கும் அடியவனாகின்றேன், பக்கத்தில் சூழ உடுக்கப்பட்ட புலித்தோலின்மேல் பாம்பு ஆடும்படி திருநடனஞ் செய்பவராகிய இறைவரது பொன்போலும் திருவடிக்கே மனம் வைத்த புகழ்த்துணை நாயனாருக்கும் அடியவனாகின்றேன்; வெற்றி பொருந்திய வேற்படையையுடைய நம்பியாகிய கோட்புலி நாயனாருக்கும் அடியவனாகின்றேன். 9

திருவாரூரில் எழுந்தருளிய இறைவனுக்கு ஆட்பட்ட ஆரூரனாகிய நான், பத்தராய்ப் பணிகின்றவர்கள் எல்லோருக்கும் அடியவனாகின்றேன். பரமனையே பாடுவாரது அடியவர்களுக்கும் அடியவனாகின்றேன். உள்ளத்தைச் சிவன்பாலே வைத்தவர்களுக்கும் அடியவனாகின்றேன். திருவாரூரிலே பிறந்தவர்கள் எல்லோருக்கும் அடியவனாகின்றேன்; முக்காலமும் திருமேனி தீண்டுபவர்களுக்கும் அடியவனாகின்றேன். முழுநீறு பூசிய முனிவர்களுக்கும் அடியவனாகின்றேன். அப்பாலும் அடிசார்ந்தவர்களுக்கும் அடியவனாகின்றேன். 10

நிலைபெற்ற சிறப்புவாய்ந்த வேதங்களை யுணர்ந்த நாவினையுடையவராகிய திருநின்றவூரில் திருவவதாரஞ்செய்த பூசலார் நாயனாருக்கும் வரிவளையை அணிந்தவராகிய மாணியார் என்னும் மங்கையர்க்கரசியாருக்கும் நேச நாயனாருக்கும் அடியவனாகின்றேன். பாண்டியனாகி உலகத்தை யாண்ட கோச்செங்கட்சோழ நாயனாருக்கும் அடியவனாகின்றேன்; திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாருக்கும் அடியவனாகின்றேன்; எமது தலைவராகிய சிவபெருமானது திருவடிகளையே சரண் புகுந்தருளிய சடைய நாயனார் இசை ஞானியார் இவர் இருவரது புதல்வனும் திருநாவலூருக்கதிபனும் ஆகிய அத்தன்மையனாகிய நம்பியாரூரனது அடிமைத் தனத்தைச் சிறப்பித்துப் பாடிய இத்திருத்தொண்டத்தொகையைக் கேட்டு மகிழ்பவர்கள் திருவாரூரில் எழுந்தருளிய அம்மானாகிய இறைவருக்கு அன்பராவார்கள். 11

திருச்சிற்றம்பலம்.

## சீகாழி.

[இத்தலம் சீகாழி இரயில்வே ஸ்டேஷனில் இருந்து கிழக்கே இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. திருஞான சம்பந்தர் அவதரித்தருளிய ஸ்தலம்.]

## திருவதிகை வீரட்டானம்.

(இத்தலம் பண்ணுருட்டி புகைவண்டி நிலையத்தில் இருந்து இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது.)

## திருவெண்ணெய் நல்லூர்.

(இத்தலம் விழுப்புரம் திருச்சி கார்டுலயனில் திருவெண்ணெய் நல்லூர் ரோட் ஸ்டேஷனில் இருந்து நான்கு மைல் தூரத்தில் உள்ளது.)

## திருப்பாண்டிக் கொடுமுடி.

இத்தலம் கொடுமுடி என்னும் பெயருடன் விளங்குகிறது. கொடுமுடி இரயில்வே ஸ்டேஷனில் இருந்து இரண்டு பர்லாங் தூரத்தில் உள்ளது.)

அகத்தியர் தேவாரத்திரட்டு

## பாட்டு முதற்குறிப்பகராதி


| செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| அஞ்சினார்க் | 38 | இமையாது | 124 | ஒருவடிவின் | 140 |
| அடர்செவி | 96 | இயக்கர்க்கின் | 108 | ஓருருவாயினை | 62 |
| அட்டானமெ | 42 | இயமன்தூது | 28 | ஓவுநாளுணர் | 36 |
| அணியனவுந் | 104 | இராவணன்மே | 22 | கஞ்சிமண்டை | 30 |
| அண்ணாமலை | 42 | இலங்கைமன்ன | 30 | கடல்சூழ்ந்த | 150 |
| அந்தணாளன் | 106 | இலைமலிந்த | 146 | கம்பமால்களி | 110 |
| அந்தமில்லா | 130 | இல்லகவிளக்க | 34 | கரப்பர்கண் | 142 |
| அந்தாமரைப் | 104 | இறங்கிச்சென் | 128 | கரியவன் நான் | 98 |
| அம்மானை | 46 | இறைகளின்றில | 68 | கலவமாமயி | 116 |
| அரவணை | 100 | [illegible] | 68 | கல்லாலினீழ | 80 |
| அருத்தம | 22 | உருகேசனைமா | 52 | கல்லுயர்மா | 98 |
| அருநெறி | 6 | ஒன்றைத்துறங் | 126 | கறைக்கண்ட | 150 |
| அருந்தும் | 142 | உயர்ந்தேதன் | 10 | கனமலர்க்கொ | 96 |
| அருப்போட்டு | 84 | உயர்வரைமோ | 98 | காவை சேர் | 116 |
| அரும்பித்த | 102 | உருவளர் | 132 | காட்டூர்க்கட | 56 |
| அலைமேகமு | 94 | உரைமாமலை | 102 | காணா இனிய | 20 |
| அளைவளர் | 96 | ஊராகினின் | 122 | காதலாகிக் | 28 |
| அறப்பள்ளி | 44 | ஊனாய்ந்தநீ | 76 | காத்தான் பல | 10 |
| அறிவினன் | 110 | ஊனமில்லா | 130 | காயும் புலியி | 88 |
| அஞ்சணைந்த | 84 | ஊறியுயிரா | 16 | காரார்கடலி | 90 |
| ஆறெழிப்பெ | 80 | ஊனிலுயிர்ப் | 24 | காருலாவிய | 114 |
| ஆரொருவ | 86 | எச்சில்இளமர் | 50 | காரூர்புனலெ | 18 |
| ஆரூரத்தானை | 56 | எயிலதுஅட் | 22 | கார்வணன்நான் | 26 |
| ஆரூர்தில்லை | 42 | எல்லையில்பு | 38 | காவியங்கருங் | 112 |
| ஆரூர்மூலட் | 48 | என்பொடு | 132 | குண்டமணர் | 98 |
| ஆறைவடமா | 44 | ஏடுவானிளந் | 38 | குண்டிகைக் | 22A |
| ஆற்றலடல் | 22 | ஏதகன்னில | 106 | குத்தங் குடிலெ | 46 |
| இடுக்கட்பட் | 32 | ஏற்றூர்புரமூ | 16 | குலம்பலம்பா | 140 |
| இடைமருதி | 48 | ஒருகாலத்தொ | 102 | குலாவுதிங்கட் | 46 |
| இட்டநும்மடி | 36 | ஒருமைபெ | 4 | | |

| செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| குற்றமுடை | 144 | திருநின்ற | 148 | பண்ணியசா | 142 |
| கூற்றுயினை | 8 | திருமகட்கு | 102 | பண்ணியன் | 141 |
| கைம்மாவுரி | 60 | தில்லைச்சிற்றம் | 48 | பண்ணிணிசை | 122 |
| கையிலிடு | 144 | தில்லைவா | 146 | பத்தராய்ப் | 152 |
| கொங்கலர் | 24 | துஞ்சலுந் | 24 | பத்துசேர்வி | 112 |
| கொங்கிற்கு | 56 | துணிவார் | 90 | பலபலவே | 136 |
| கொங்குசேர் | 116 | தும்மலிருமல் | 24 | பல்லில்லெவர் | 130 |
| கொடுங்கோளு | 50 | துருத்திச்ச | 58 | பாசமான | 70 |
| கொடுவினை | 100 | தூயவிடை | 72 | பாதம்பணி | 16 |
| கொத்தலர் | 136 | தெரித்தகணை | 76 | பாராபரிவட்டத் | 82 |
| கொத்தார் | 90 | தேம்பல்நுண் | 118 | பாலையுடைக் | 74 |
| கொல்வாரே | 28 | தேனமர் | 138 | பிச்சாடல் | 120 |
| கொன்று | 62 | தேனைக்காவ | 58 | பித்தாபிறை | 14 |
| கோணியபிறை | 40 | தொடுத்தமல | 74 | பிறைமுகன்சீர | 130 |
| கோலமால் | 108 | தோடுடைய | 1 | புத்தரோடு | 6 |
| சடைமுயங்கு | 4 | நஞ்சணிக | 134 | புத்தர்சமண | 26 |
| சலமிலன் | 32 | நந்திநாம | 30 | புலியூர்ச்சிற் | 60 |
| சலம்பூவொடு | 10 | நம்புவார்நமர் | 28 | புலிவலம் | 54 |
| சாரணன் | 40 | நரகமேழ்புக | 30 | புலிகள்சீர்த் | 128 |
| சித்தத்தெழு | 78 | நல்லவர்தீய | 24 | பூசனினியது | 20 |
| சில்லுருவா | 122 | நறுமலராய் | 104 | பூணெருகாக | 94 |
| சுற்றமமரர் | 76 | நறைசேர் | 88 | பூவியலுக்கு | 32 |
| செப்பிளமு | 134 | நறையூரிற் | 52 | பையரவரு | 112 |
| செய்பொனேர் | 40 | நற்றமிழ்ஞான | 26 | பொடியுடை | 94 |
| செய்ந்நின்ற | 76 | நற்றமிழ்வல் | 108 | பொய்ப்படிமை | 150 |
| செறிகழலுஞ் | 84 | நாயேன்பல | 14 | பொருவிடை | 74 |
| செற்றவரக்க | 70 | நிறைக்கா | 56 | பொன்போல | 12 |
| சொற்றுணை | 32 | நீர்பரந்த | 1 | பொன்றுதி | 70 |
| தண்ணார்மதி | 16 | நீள்நின்று | 128 | போதன்போ | 30 |
| தருக்குமிகு | 78 | நெக்குளார்வ | 28 | போர்த்தீன் | 108 |
| தன்னடியார்க் | 82 | நெஞ்சமு | 8 | போர்த்தாயங் | 12 |
| தாங்கூர்பிணி | 58 | நெடியவிசும் | 124 | மங்கைமணாக் | 68 |
| தானுதல்செ | 6 | நெற்குன்றம் | 46 | மடமுடைய | 130 |
| தாரிடுகொன் | 94 | படைமலி | 82 | மண்ணிப்படி | 50 |
| திண்மடச்சாரு | 52 | பணிந்தாரன | 8 | மதியதல்மங் | 134 |

| செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| மந்தரமன்ன | 28 | முடியேன்இனி | 14 | விண்ணுற | 32 |
| மந்திரமான் | 24 | முத்திதருவ | 20 | விண்மகிழ் | 1 |
| மந்திரமாவ | 20 | மும்மையாலு | 146 | விண்ணோர் | 88 |
| மயலாருக் | 82 | முள்ளிநாண் | 112 | வியரிலங்கு | 4 |
| மரவம்பொழில் | 72 | முற்றலாமை | 1 | விரும்புதின் | 38 |
| மருகலுறை | 58 | முன்னம்அடி | 8 | வீங்கிய | 142 |
| மருவார்கொ | 88 | முன்னெறியா | 34 | வீடிஞெருலசி | 34 |
| மருவார்புர | 120 | மூவாய்பிறவாய் | 124 | வீடுபிறப் | 26 |
| மழுவாள்வல | 18 | மூவெயில்செ | 110 | வீழிமிழலை | 50 |
| மறைகலந்த | 4 | வடிவேறு | 80 | வெந்தநீறருங் | 32 |
| மற்றிடமி | 140 | வண்டமரோ | 26 | வெளிறுதீரத் | 128 |
| மற்றுப்பற் | 36 | வம்பறுவரி | 148 | வெள்ளையெருத் | 70 |
| மனவஞ்சர் | 44 | வரியமறை | 68 | வேதத்திலு | 20 |
| மன்னியசீர் | 152 | வருமாகரியி | 72 | வேயுறுதோளி | 132 |
| மன்னேமறு | 14 | வலித்தேன் | 12 | வேழமுரிப்பர் | 92 |
| மாலினையே | 140 | வளர்முலை | 90 | வேள்பட | 136 |
| மாடமல்கு | 92 | வாணிலாமதி | 114 | வேற்றாகி | 120 |
| மாட்டூர்மட | 41 | வார்கொண்ட | 148 | வைச்சபொரு | 74 |
| மாப்பிணைத் | 34 | வாள்வரிய | 134 | வைதெழுவார் | 100 |
| மாலொடய | 22 | வானத்தார் | 122 | வையகமு | 106 |


